# நெஞ்சையள்ளும்
# நாகையந்தாதி


**பேராசிரியர் வா. மு. அ. நூர்மைதீன், எம். ஏ., எம். பில்.,**

தமிழ்த்துறை,

ஜமால் முகம்மது கல்லூரி,

திருச்சிராப்பள்ளி—620 020.



**உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்**

33, திருமலைநகர் இணைப்பு,

பெருங்குடி, சென்னை—600 096

---

தமிழூர், 627 808, நெல்லை மாவட்டம்

தமிழ்நாடு

ஏவி. எம். ஜாபருத்தீன் நூர்ஜஹான் அறக்கட்டளைச்
சொற்பொழிவு — வெளியீடு 1

உலகத்தமிழ்க் கல்வி இயக்க அறக்கட்டளைச் சொற்பொழிவு
— வெளியீடு 8

---

வெளியீடும் உரிமையும் : உலகத்தமிழ்க் கல்வி இயக்கம்,
33, திருமலைநகர் இணைப்பு,
பெருங்குடி, சென்னை — 600 096

முதல் பதிப்பு : மே 1986

**விலை ரூ 14-00**

NENCAI ALLUM NAKAIANTATI

V.M.A. Noor Maideen, M.A., M. Phil.,
Professor of Tamil,
Jamal Mohamed College,
Tiruchirappalli,
620 020.

First Edition

21X14 cms

10 Pt. letters

---

Novel Art Printers
Madras-600014. Ph. 82731

**சு. ஆவுடைநாயகம்**
எம். எஸ்ஸி (விவசாயம்)
தலைவர்,
உலகத்தமிழ்க் கல்வி இயக்கம்,
33, திருமலைநகர் இணைப்பு,
பெருங்குடி,
சென்னை-600 096.

# பதிப்புரை

உலகத்தமிழ்க் கல்வி இயக்கத்தின் 8-வது அறக்கட்டளைச் சொற்பொழிவாக 'நெஞ்சையள்ளும் நாகையந்தாதி' என்ற நூல் அமைகிறது.

'ஏவி.எம். ஜாபருத்தீன் நூர்ஜஹான்' அறக்கட்டளைச் சொற்பொழிவின் முதல் அறக்கட்டளைச் சொற்பொழிவாக அமைகிறது.

திரு. வா. மு. அ. நூர்மைதீன், தமிழ்த்துணைப் பேராசிரியர் அவர்களை முதல் சொற்பொழிவினைச் செய்ய வேண்டும் என்று கேட்டபோது மனம் உவந்து முன் வந்து நெஞ்சையள்ளும் நாகையந்தாதி என்பதைத் தலைப்பாக எடுத்துக் கொண்டு உரிய காலத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவு நூலினை அனுப்பித் தந்தார். அவருடைய உழைப்பினையும் நன்முயற்சியினையும் பாராட்டி மகிழ்கின்றோம்.

இந்த அறக்கட்டளையை நிறுவிய ஏவி. எம். ஜாபருத்தீன் நூர்ஜஹான் அறக்கட்டளை நிறுவனர்க்கும், அந்த நிருவாகக் குழுவுக்கும் உலகத்தமிழ்க் கல்வி இயக்கம் தன் அன்பு கலந்த நன்றியைத் தெரிவிக்கிறது. உரிய காலத்தில் அச்சிட்டுத்தந்த நாவல் ஆர்ட் அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கு நன்றி உடையோம்.

அன்புள்ள,

**சு. ஆவுடைநாயகம்**

# முன்னுரை

இஸ்லாம் உலக இலக்கியத்திற்குச் சிந்தனை கொடை தந்த சமயங்களில் ஒன்று. மண்ணுலகின் முதல் மொழியான தமிழுக்குச் சமண, பௌத்த, இந்து சமயங்கள் போலவே இஸ்லாமும் பல இலக்கியங்கள் பிறக்க வித்திட்டுள்ளது. பிற சமயங்கள் தராத புதுவகை இலக்கிய வடிவங்களான கிஸ்ஸா, நாமா, படைப்போர், மசலா, முனாஜாத்து போன்றவற்றை இஸ்லாமியப் புலவர் படைத்து இன்பத் தமிழுக்கு இனிமை சேர்த்தனர். அப்புலவர் பெருமக்களைப் பற்றியோ அவர்கள் அளித்த இலக்கியங்கள் குறித்தோ தமிழகம் அறிய வேண்டிய அளவுக்கு அறியவில்லை.

இந்த அவலநிலையை மாற்றித் தமிழ் இஸ்லாமிய இலக்கியங்களுக்குப் புதுவாழ்வு கொடுக்கச் சிலர் தலைப்பட்டனர். அவர்களில் மனங்கொள்ளத்தக்க மாண்பினரான அண்ணன் ஏவி. எம். ஜாபர்தீன் அவர்கள், தம் பெயரிலும், தம் துணைவியார் திருமதி நூர்ஜகான் பெயரிலும் 'ஏவி. எம். ஜாபர்தீன்-நூர்ஜகான் அறக்கட்டளை'யை உலகத் தமிழ்க்கல்வி இயக்கத்தில் ஏற்படுத்தியுள்ளார்கள். ஈட்டுவதெல்லாம் ஈவதற்கே என்னும் கொள்கை வழி வந்த கொடை மாணிக்கம்; பல இஸ்லாமிய இலக்கியங்கள் அச்சு வாகனம் ஏற வழி செய்த இலக்கிய ஆர்வலர்; மலேசிய நாட்டின் தமிழ் நாளிதழில் உழைக்கும் பத்திரிகையாளராகப் பணியாற்றியவர்; கல்விக் கனிகள் வழங்கும் பழமுதிர் சோலைகளுக்குப் பயன் கருதாமல் வாரி வழங்கும் வள்ளல்; அடக்கமுடைமையை விடப் பெரிய செல்வம் செல்வர்களுக்குக் கிடையாது; அதனைத் தேடி அடைந்தவர். அறிவு ஜீவிகளின் சங்கமமான அவர்களின் குடும்பமே கூத்தாநல்லூரின் கருணை ஊருணி. அவர்கள் பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் வழி, பரிந்துரைக்கவில்லையெனின் நான் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் பயின்றிருக்க முடியாது. அந்தப் பெருமகனோடு எனக்கு ஏற்பட்ட தோழமைக்கு வயது முப்பது. அவர்களின் பெயரில் அமைந்துள்ள அறக்கட்டளையில் சொற்பொழிவு நிகழ்த்தக் கிடைத்த வாய்ப்பைப் பெரும் பேறாகக் கருதுகின்றேன்.

ஆய்வுப் புரட்சியைச் செய்து வரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களை அவர்களின் எழுத்துக்களில் கண்டதுண்டு. கண்டுரை யாடும் பேறு பெற்றேனில்லை. காணாமலே கனிந்த அன்பைப் பொழிய முடியும் என்பதற்கு என் வாழ்வில் அன்னாரே சான்றா வார். என் தந்தையாரின் மறைவுக்குத் தொலைபேசி வழி அவர் கள் கூறிய இரங்கல் மொழியில் என்னிதயம் ஒத்தடம் பெற்றது. மனிதப் பண்புகள் மண்டிக் கிடக்கும் மாமனிதர் அவர். பதிப்புத் துறையின் பல்கலைக் கழகமான அவர்கள் மடல் வழி என்னை நெறிப் படுத்தினார்கள். அந்த அன்பு இமயத்திற்கு நன்றிக் கடன் பட்டவன்.

பேராசிரியர் டாக்டர் சி. நயினார் முகம்மது அவர்களின் பெரு முயற்சியால் 1973 ஆம் ஆண்டு ஜமால் முகம்மது கல்லூரியில் அனைத்துலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாடு கூட்டப் பட்டது. சென்னையிலும், காயல்பட்டினத்திலும், ஈழத்திலும் மாநாடுகள் தொடர்ந்து நடத்தப்பட்டன. தமிழ் இஸ்லாமிய இலக்கியம் பற்றிய எழுச்சியை அம்மாநாடுகளே ஊட்டின. அந்த மாநாடுகள் கூட்டப்பட எல்லா வகையிலும் உதவி ஆதரவு நல்கிய ஜமால் முகம்மது கல்லூரி நிர்வாகத்தை நன்றியுடன் நினைவு கூர்வதில் மகிழ்கின்றேன்.

கலைமாமணி கவி. கா. மு. ஷெரீப் அவர்கள் தம் இளமைக் காலம் முதலே எங்கள் குடும்பத்தில் நேசம் கொண்டு இரண்டறக் கலந்தவர்கள். புலவர் நாயகத்தின் ‘நாகையந்தாதி’யை அறிமுகப் படுத்தும் வகையில் என்னுரை அமைய வேண்டும் என விழைந்தார் கள். நாகையந்தாதி தவஞானி ஷாகுல்ஹமீது நாயகத்தின் பெரு மையைப் பாடுபொருளாகக் கொண்ட சிற்றிலக்கியம் என்பதால் மகிழ்வுடன் அவ்விழைவை ஏற்றேன். அப்பாடுபொருள் பற்றி நீள நினையப் பல காரணங்கள் உள.

நாகூரில் அடங்கியிருக்கும் ஷாகுல்ஹமீது நாயகம் அவர்கள் என் பிஞ்சுப் பருவம் முதலே நெஞ்சில் நிறைந்திருக்கும் இறைநேசச் செல்வர். அவர்களின் வருகைக்குப் பின்னர் தான் எனதூரான கூத்தாநல்லூரின் குடி உயர்ந்தது, செல்வம் பெருகியது என்று சொல்லப்படுகிறது. நான் பார்த்த முதல் அயலூர் நாகூரே. ஷாகுல் ஹமீது நாயகம் சமாதியடைந்தார்கள் என்று சொல்லப்

படும் பர்மாவின் மோல்மேன் பகுதியில் நான்காண்டுகள் (1957-'60) என் இளமைப் பருவம் கழிந்தது. எனவே அவர்களைப் பற்றிய பாச எண்ணங்கள் அடி மனத்தில் தங்கிய வண்ணம் இருந்தன. அவ்வெண்ணங்கள் உருவம் பெற இறைவன் உலகத் தமிழ்க் கல்வி இயக்கத்தின் மூலம் வாய்ப்பளித்துள்ளான்.

பழந்தமிழ் இஸ்லாமிய இலக்கியம் பற்றிய ஐயம் போக்கும் ஆற்றலுடன் அந்த இலக்கியப் புத்தகங்களையே சொத்தாகக் கொண்டு வாழ்ந்து வரும் எழுத்தாளர் எம். சையது முகம்மது 'ஹசன்' அவர்கள் ஆய்வாளர்களுக்குப் பயன்படும் நடமாடும் நூலகம். நாகையந்தாதியின் பழம் பதிப்பை நிழற்படப் பிரதி எடுத்து உதவியதுடன் பயன்படும் துணை நூல்களையும் கொடுத் துதவினார்கள்.

உரையாக்கத்துக்குப் பயன்படும் கருத்துக்களை வழங்கிய ஜமால் முகம்மது கல்லூரிப் பேராசிரியர் தா. பிச்சை முகம்மது அவர்கள், பேராசிரியர் எம். ஹெச். அபூபக்கர் அவர்கள், பேரா சிரியர் பீ. மு. மன்சூர் அவர்கள், திருச்சி சீதாலட்சுமி இராமசாமி கல்லூரிப் பேராசிரியர் திருமதி உஷாராணி கிருஷ்ணன் அவர்கள், தொலை நாட்டிலிருந்து தொலைபேசி வழித்தூண்டி என்உரைக்கு உரம் சேர்த்த, என்னை என்னைவிட நேசிக்கும் என்னினிய நண்பர் பேராசிரியர் பொ. அ. மு. கலிக் ஜமான் அவர்கள் - இவர் களை நாளும் நினையும் என்நெஞ்சம். எல்லா நிலைகளிலும் என்னை நிழல் போல் தொடரும் என் துணைவி, திருச்சி சீதா லட்சுமி இராமசாமி கல்லூரிப் பேராசிரியர் பானு நூர்மைதீனின் முழுமையான ஒத்துழைப்பு இல்லையெனின் இவ்வுரை உருப் பெற் றிருக்க முடியாது. என் உரை வடிவம் பெற பல்லாற்றானும் துணை நின்ற இத்தூய நெஞ்சங்களுக்கு நன்றி கூறும் வகையறி யேன். அவர்களின் பெருவாழ்வுக்கு இறைவனிடம் இருகரமேந்தி இறைஞ்சுவேன்.

**வா. மு. அ. நூர்மைதீன்**

தமிழ்த்துறை,
ஜமால் முகம்மது கல்லூரி,
திருச்சிராப்பள்ளி—620 020.
15 ஏப்ரல், 1986.

# பொருளடக்கம்

# சுருக்க விளக்கப்பட்டியல்

| | |
|---|---|
| அக. | அகநானூறு |
| ஐங். | ஐங்குறுநூறு |
| கம்ப. | கம்பராமாயணம் |
| கழகம். | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் |
| காரிகை. | யாப்பருங்கலக் காரிகை |
| குறள். | திருக்குறள் |
| குறுந். | குறுந்தொகை |
| செய். | செய்யுளியல் |
| தண்டி. | தண்டியலங்காரம் |
| தொ.ஆ. | தொகுப்பு ஆசிரியர் |
| நூ. | நூற்பா |
| ப.ஆ. | பதிப்பு ஆசிரியர் |
| ப. | பக்கம் |
| பா. | பாடல் |
| பதிற். | பதிற்றுப்பத்து |
| பள். | பக்கங்கள் |
| பு.பெ. | புனைபெயர் |
| பெ.பு. | பெரிய புராணம் |
| மு.நூ. | முன்னர் சுட்டப்பட்ட நூல் |
| P. | Page |

# 1. அந்தாதி அளித்த ஆசிரியர்

காயல்பட்டினத்தைச் சேர்ந்த கல் வாணிகர் ஹபீப் முகம்மது லெப்பை விண்கலை நூலில் வித்தகர். கல்கத்தாவிலிருந்து காயலுக்குக் கப்பல் வழி மீளும் காலை இடைப்பட்ட வழியில் சுழலும் சூறாவளியில் சிக்கி, நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தோழர் தமீம் அன்சாரி அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள, சென்னைக்கு அருகிலுள்ள கோவளம் என்ற 'ஸ ஆதத் பந்தரை' அடைந்தார்.[1]

கோவளத்தில் ஹபீப், வலைஞர் மகளை இரண்டாம் தாரமாக மணந்து சின்னாட்கள் தங்கினார். அவ்வாழ்வின் சாட்சியாகப் பிறந்த குழந்தையே ஷெய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை. இவர் பிறந்த நாள் பற்றிய செய்தி இவ்வுரையாளருக்குக் கிட்ட வில்லை.

## இளமை

இளமையில் அப்துல் காதிர் கல்வியில் காதல் கொள்ளவில்லை. ஒருநாள் அவரின் தந்தையார் அவர் கல்வி நிலை பற்றிக் கடிந் துரைக்க, ஊருக்கு வெளியே உள்ள எருக்கஞ் செடிக்குக் கீழே போய்ப் படுத்திருந்தார் என்றும், அதுபோது கருநாகம் ஒன்று அவரின் தலைமீது படமெடுத்து ஆடி அவரின் நாவில் தீண்டியது என்றும், அன்றிலிருந்து அவரின் வாயிலிருந்து வரும் சொல்லெல் லாம் சுவையூறும் கவிகளாக வந்தன என்றும் கூறுவர்.[2]

---

1. அப்துற்-றகீம், **முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்** (சென்னை, 1980), பக். 82.
2. அப்துற்-றகீம், **இஸ்லாமியக் கலைக் களஞ்சியம்-3** (சென்னை, 1979), பக். 952.

இளமையில் பெற்றவரை இழந்த அவர் பெரியன்னையின் அரவணைப்பில் வளர்ந்தார். தம் ஞானத்தைக் கீழக்கரை தைக்கா சாகிபிடம் கூராக்கினார். அவரின் பள்ளித் தோழர் குணங்குடி மஸ்தான் சாகிப் என்பதை

> "செய்தவத் துதித்த செல்வன் குணங்குடி
> மெய்தவத் தினர்க்கு வித்தையிற் றோழன்"[3]

என்னும் வரிகளின் வழி அறிய முடிகின்றது. தித்திக்கும் தேன் மொழியாம் தமிழை மட்டுமின்றி, நூல்களின் தாயாகிய குர்ஆனின் மொழியான அறபி மொழியுடன் பாரசீகம், சமஸ்கிருதம் கற்ற பன்மொழிப் புலவரும் ஆவார்.

## திறமை

மணவாழ்க்கைக்குப் பின் தின வாழ்க்கைக்கு, தந்தையைப் போலவே தொடக்கத்தில் மாணிக்க வாணிகம் செய்தார். வாணிபத்தின் பொருட்டுப் பல்லூர்ச் செலவுடன் பட்டறிவுப் பாடத்தையும் படித்தார். வாணிபத்தில் விடுதல் அறியா விருப்பமுடையவரென்பதை, கீழக்கரை செய்யிது முகம்மது லெப்பை ஆலீம் காக்கா அவர்கட்கெழுதிய நிருபத்தில்,

> "ஏதமில் செகப்புமறு விலபச்சை வயிரமிவை
> யாங்கண் வருகிற் பெருமை யாய்
> ஏற்றி நகை செய்துமுறை போலதிக லாபமிக
> வேற்கலா மக மிருந்தால்
> இசையும் விலை கண்டி அத்தளமே யனுப்பிடுகி
> வெளியோர்க்கு முப காரமாம்
> என் மனைகள் சுத்தமிக வன்போடு வியாபக
> மியற்றுவது தங்கள் கடனே"[4]

என்று வெளிப்படுத்துகின்றார்.

அப்துல் காதிர் நயினார் லெப்பை வடமொழியிலும் தேர்ந்த புலவர். காயலில் பெரிய பள்ளியில் புதூகுஷ்ஷாம் விரிவுரையாற்றும்பொழுது வடமொழி வித்தகர் சிலர் அவரின் ஆற்றலைக் காண வந்திருப்பதை அறிந்து வடமொழியிலேயே விரித்துரைக்கலானார்.

---

3. அப்துல் ரகுமான், **குணங்குடியார் பாடற் கோவை,** (சிவகங்கை, 1980), பக். 35.
4. எம். சையிது முகம்மது 'ஹசன்', **புலவர் நாயகத்தின் நிருப செய்யுட்கள்** (சென்னை, 1980), பக். 87.

அவரின் வடமொழி விளக்கம் கேட்டு வியந்து, 'தமிழ், சமஸ்கிருதம் இரண்டிலும் புலமை கொண்ட அகத்தியரோ' எனப் பாராட்டினர் அவ்வட மொழியாளர்.[5]

பாவடிகளில் தேன்வடிய, பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய ஷெய்கு அப்துல் காதிர் தமிழ் ஞானப் பாலை யாரிடம் அருந்தினார் என்பதை அறிய முடியவில்லை. சோட சாவதானி செய்குனா லெப்பையாரிடம் தமிழ்க் கற்றதாகக் கூறுவர்.[6] சென்னைப் பட்டணத்து ஐயா என்னும் மகா பண்டிதருக்கு,

> "........ சென்ன
> பட்டணத் தையாவெ னையா வெனப்பெயர்
> படைத்த குரு பர னாதனே"[7]

என்று குறிப்பிட்டு அப்துல் காதிர் நயினார் லெப்பை எழுதியிருப் பதால், அவரிடம் சில கற்றிருக்க வாய்ப்புண்டு.

இஸ்லாத்தைத் தம் வழியாகவும், இன்பத் தமிழைத் தம் மொழியாகவும் கொண்டிலங்கிய அப்துல் காதிர் மறந்தும் புறந் தொழாத சமயப் பேராண்மை கொண்ட பெரும்புலவர். சுந்தரர் போலவே இருமுறை மணந்தும், அவருக்குப் பிள்ளைப் பேறு கிட்ட வில்லை. காயல்பட்டினம் தைக்கா சாகிபு அவரைக் குறித்து 'அவர் ஓர் அப்தால் (இறைவனை நெருங்கியவர்) அவருக்குச் சந்ததிகள் இரா' எனக் கூறினாராம். "சாகும் சதைச் சந்ததிகள் அவருக் கில்லை."[8] கிள்ளைமொழி கிளறப் பிள்ளையில்லை என்றாலும் இல்லற வாழ்வை இனிது நடாத்தியிருக்கின்றார்.

## புலமை

"இசுலாமியத் தமிழ்க் காவிய உலகின் அம்புலி"[9] எனக் கருதப் படும் அப்துல் காதிர் நயினார், பயன்பெறு புராணமும் பல பிரபந்த

---

5. அப்துற்-றகீம், முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள், (சென்னை, 1980), பக். 115.
6. மு. அப்துல் கறீம், இஸ்லாமும் தமிழும், (சென்னை, 1982), பக். 127.
7. எம். சையிது முகம்மது 'ஹசன்', மு. நூ. பக். 21.
8. அப்துல் ரகுமான், "முகவரி" புலவர் நாயகத்தின் நிருப செய்யுட்கள், (சென்னை, 1980), பக்.3.
9. ஜே. எம். சாலி, இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்கள், (சென்னை, 1978), பக். 130.

மும் நயன்பெறப் புனைந்தவர். இறைநேயச் செல்வர், வலிகளின் நாயகம், அப்துல் காதிர் ஜெயிலானி ஆண்டகையின் வரலாற்றைக் 'குத்பு நாயகம்' என்ற பெயரில் ஞானக் காப்பியமாகத் தந்தார். 1330 விருத்தப்பாக்களால் அமைந்தது அக்காப்பியம்.

நாகூர் ஷாகுல்ஹமீது நாயகம் அவர்களின் அற்புதங்கள் நிறைந்த வாழ்க்கையைத் தித்திக்கும் தீந்தமிழில் 'திருக்காரணப் புராணம்' என்ற காப்பியமாகப் பாடியுள்ளார். மூன்று காண்டங் களையும் 56 படலங்களையும் 2565 பாடல்களையும் கொண்டது அவ்விலக்கியம்.

இறைத்தூதர் இபுராகீம் நபி அவர்களின் தியாக வாழ்வைப் பாமணம் கமழத் 'திருமணிமாலை' என்ற பெயரில் பாடியுள்ளார். 31 படலங்களில் 2044 பாடல்கள் அதில் இடம் பெற்றுள்ளன.

நபிகள் நாயகத்தின் இறுதி வாழ்க்கையையும், அபூபக்கர் சித்திக் அவர்களின் ஆட்சியையும், உமர்பாரூக் அவர்களின் ஆட்சி யையும், சிரியாவோடு நிகழ்ந்த போர்களையும் உள்ளடக்கமாக வைத்துப் பின்னப்பட்ட வெற்றிக் காப்பியமே புதூகுஷ்ஷாம் என்னும் பெயர் கொண்ட காப்பியம். அவர் படைத்த காப்பியங் களில் அதுவே உருவத்தில் பெரியது. மூன்று காண்டங்களையும் 61 படலங்களையும் 6786 பாடல்களையும் (இவ்வெண்ணிக்கையை 6787 என ஆர்.பி.எம். கனி தமது 'இஸ்லாமிய இலக்கியக் கருவூலம்' என்னும் நூலிலும், மு. அப்துல் கறீம் தமது 'இஸ்லாமும் தமிழும்' என்ற நூலிலும் குறிப்பிடுவர்) கொண்டது அந்தக் காப்பியம். அபூ அப்துல்லாஹ் முகம்மது பின் உமர் என்பவரால் எழுதப்பட்ட அறபு நூலான புதூகுஷ்ஷாம் எனும் மூல நூலை வழி நூலாகக் கொண்டு அதே பெயரில் எழுதப்பட்டது.

நபிகள் நாயகம் (சல்) அவர்களின் கோத்திரத்தைப் பற்றி 149 செய்யுட்கள் கொண்ட 'கோத்திர மாலை' என்னும் காப்பியமும் பாடியுள்ளார். 33 செய்யுட்கள் கொண்ட 'சொர்க்க நீதி'யைப் பாடியுள்ளார்.

அவையேயன்றி நாகையந்தாதி, மக்காக் கலம்பகம், முனாஜாத்து விருத்தங்கள், இன்னிசைகள், சித்திரக் கவிகள், சத்துரு சங்காரம், சீட்டுக் கவிகள் போன்ற பலாப் படைப்புகளைப் படைத்து, கற்றவர் நெஞ்சில் உலா வருபவர்.

நபிகள் (சல்) அவர்களின் வாழ்வின் இறுதிப் பகுதியை உமறுப் புலவரின் சீறாப்புராணம் விரித்துரைக்கவில்லை. சீறாப்புராணத் தின் இரண்டாம் பகுதி சின்ன சீறா என்னும் தலைப்பில் காப்பிய மாகப் படைக்கப்பட்டுள்ளது. அக்காப்பியத்தைப் பனி அகமது மரைக்காயர் புலவருடன் ஷெய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை யும் பாடியிருக்கின்றார் என்ற கருத்தை ஓர் எழுத்தாளர் வெளிப் படுத்துகின்றார்.[10] குணங்குடி மஸ்தானின் பாடல்களைத் தொகுத்ததுடன் இடையிடையே தம் பாடல்களையும் இணைத்து இருக்கின்றார் அப்துல் காதிர் என்பர்.[11]

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த ஷெய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை போலப் பெருமளவு இலக்கியம் படைத்தவர் தமிழ் இஸ்லாமியப் புலவர்களில் வேறு யாருமிலர். அவர் பாடிய பாடல்களின் மொத்த எண்ணிக்கை 14,347. ஷேகுனா என்று மக்களால் அழைக்கப்பட்டார். ஷேகுனா என்ற அறபுச் சொல்லுக்கு எங்கள் தலைவர் என்ற பொருள் உண்டு. சொல்லவும் அளவுபடாத நீள் புகழுக்குரிய பலதுறைப் படைப்பாளரான அவரைச் செல்லமாகச் சேகுனா என்றே குறிப் பிட்டனர்.

அறிஞராக, ஞானியாக, நாவலராக, வழிகாட்டியாக, இறைவன்மீது அழியாக் காதல் கொண்டவராக, திருக்குர்ஆன் முழுவதையும் மனனம் செய்தவராக, கலைஞராக, விஞ்ஞானியாக, மெய்ஞ்ஞானியாக, பாவலராக, பெரும் வணிகராக, அருள் கவி யாக, ஆலிம் பட்டம் பெற்றவராக விளங்கிய அப்புலவரேறைப் புலவர் நாயகம் என்று மக்கள் அன்புடன் அழைக்கத் தொடங்கினர்.

## பதிப்புத் தலைமை

தமிழ் இலக்கிய உலகம் மறக்க முடியாத தலையாய பணியை யும் புலவர் நாயகம் செய்து பீடு பெற்றார். முன்னோர் இயற்றிய நூல்களை அச்சிட்டு வெளியாக்குவதில் புலவர் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார். உமறுப் புலவரின் சீறாப் புராணத்தை 1842இல் (ஹிஜ்றி 1258) அரிதில் முயன்று பிழையில்லாப் பதிப்பைப் பதிப்பித் தார். தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை (நச்சினார்க்கினியம்) முதன் முதலாக 1847 இல் மழவை மகாலிங்கையர் அச்சிட்டுள் ளார்.[12] புலவர் நாயகமோ அத்துறையில் மகாலிங்கையருக்கும்

10. ஜே. எம். சாலி, மு. நூ. பக். 37.
11. அப்துல் ரகுமான், மு. நூ. பக். 21.
12. ம. மு. உவைஸ், **இஸ்லாம் வளர்த்த தமிழ்** (சென்னை, 1984), பள். 206-207.

முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார். பின்னாளில் உ. வே. சா. போன்ற அறிஞர்க்கு வழிகாட்டியாகவும் அவர் விளங்கியுள்ளார் என்பதும் போதரும்.

## தகைமை

தொட்ட துறையில் வெற்றி கண்ட புலவர் நாயகம் ''மாணிக்க வாணிகர்; வாசகங்களையும் மாணிக்கமாகவே உதிர்க்கவல்ல மணிவாசகர், தெய்வீக ஞான சம்பந்தர்; சொற் சுந்தரர்; காயாத அருவியாகக் காலமெல்லாம் கவி சொரிந்த திருநாவுக்கரசர், அவதானி; அறம்பாடும் ஆற்றலர்''[13] எனப் பாராட்டப்படுபவர். அவரின் முழுக்குணங்களையும் பாராட்டி நாகூர் செவத்த மரைக்காயர் புலவர்,

''ஜாமிலு ஆறிபு ஹாதீ ஷறீபு ஜலீல் அப்தால்
ஷாமிலு ஹாமிலு ஆஷிக் ஸாலிஹு ஷாஇறு சீர்
ஆமிலு செய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிமெனுங்
காமிலு ஹாபிழு காதிபு ஹாஜி மஷாயிகுவே''[14]

என்ற அறபு அடைமொழிகளைக் கொண்டே பாராட்டுவர். அவரின் பல்துறை ஆற்றலைச் செவத்த மரைக்காயர் புலவர்,

''காட்சியின் வண்ணங் கருத்துறு வண்ணங் கருத்தடங்கு
மாட்சியின் வண்ண மதி வண்ணம் யாவு மலியும் வண்ண
மாட்சியின் செய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிமுயர்
சூட்சியின் வண்ண மவ்வண்ண மெவ்வண்ணஞ் சொல்லும்
வண்ணமே''[15]

எனச் சாத்துக்கவி புனைந்து புகழ்ந்துரைத்துள்ளார்.

புலவர் நாயகம் 13-1-1852இல் (ஹிஜ்றி 1268 துல்ஹஃதா பிறை 27) காலமானார். புலவர் நாயகம் மஸ்தான் சாகிபின் 'வித்தையில் தோழன்' மட்டுமல்லர். அவருடன் கொண்ட நட்பின் சிறப்பை எந்நாளும் வெளிப்படுத்தும் வண்ணம் தொண்டியார் பேட்டையில் மஸ்தான் சாகிபின் அடக்க ஸ்தலத்தின் அருகிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளவர். அழியாப் புகழ் கொண்ட புலவர் நாயகத்தைத் தமிழ் கூறும் இஸ்லாமிய நல்லுலகம் என்றும் நினைவில் கொள்ளும்.

---

13. அப்துல் ரகுமான், ''முகவரி'', **புலவர் நாயகத்தின் நிருப செய்யுட்கள்** (சென்னை, 1980), பக். 4.
14. அப்துற்-றகீம், மு. நூ. பக். 118.
15. எம். கே. செய்யிது அஹமது, ''புலவர் நாயகம்'' **இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள்** (கொழும்பு, 1968), பக். 98.

# 2. சிற்றிலக்கியங்களில் அந்தாதி - ஒருபார்வை

மனித சமுதாய வாழ்வியல் பண்பாடுகளை விளக்கிக் காட்டும் கருவியே இலக்கியம். மொழி உருவாகிய பின் நாகரிக முதிர்ச்சியில் இலக்கியம் எனும் செறிவான வடிவம் உருப்பெறுகின்றது. இந்நாகரிகம், சமுதாய இயல்பு, பண்பாட்டுச் சிறப்பு, காலச் சூழலமைப்பு, இவற்றுக்கேற்ப இலக்கியத்தின் பல்வேறு பரிமாணங்கள் கிளைக்கின்றன. சங்க காலத்தில் அகமும் புறமும் தழுவிய தன்னுணர்ச்சிப் பாடல்கள் பெருகின. பின் சைவ, வைணவத் தொண்டர்கள், பக்தி இலக்கியங்களையும், சமய சாத்திரங்களையும் யாத்தனர். அதன்பின் உரைநடை இலக்கியங்கள் அரும்பின.

## சிற்றிலக்கியங்கள்

சங்ககாலம் முதலாகக் கருக்கொண்டு மெல்ல வளர்ந்து வந்த சிற்றிலக்கியங்கள் கி. பி. 12ஆம் நூற்றாண்டு முதல் தமிழுலகில் பெரும் செல்வாக்குப் பெற்றன. எனினும் கி. பி. 15ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே அதன் வகைகள் பல்கிப்பெருகின. கி. பி. 1500 முதல் 1850 வரையுள்ள காலத்தைப் புராண - பிரபந்த காலம் எனக் குறிப்பர் எஸ். வையாபுரிப்பிள்ளை.[1] கடவுளர்களும், குறுநில மன்னர்களும், வள்ளல்களும், அருளாளர்களும், ஞானியர்களும் சிற்றிலக்கிய உலகில் பாட்டுடைத் தலைவர்களாய்

---

1. மு. சண்முகம் பிள்ளை, சிற்றிலக்கிய வளர்ச்சி (சிதம்பரம், 1983), பக். 3

வலம் வந்தனர். மக்களின் சமூகப் பழக்க வழக்கங்கள், வாழ்வியல் நடைமுறைகள் போன்றவையும் இதன்கண் இடம் பெற்றன.

அகம் - புறம், மேல்கணக்கு–கீழ்க் கணக்கு, பெருங்காப்பியம் - சிறுகாப்பியம், பேரிலக்கியம் - சிற்றிலக்கியம் போன்ற பகுப்புகள் தமிழிலக்கியம் கண்ட பகுப்புக்கள். "அறம், பொருள் இன்பம் வீடடைதல் நூற் பயனே"[2] எனும் இலக்கணப்படி, இவை முழுமையும் அமையப் பெற்றது பேரிலக்கியமெனில், இவற்றில் ஒன்றோ பலவோ குறைந்து வருவன சிற்றிலக்கியங்கள் என வகுக்கப்படும்.

"விருந்தே தானும்
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே"[3]

எனும் தொல்காப்பிய நூற்பா பல்வேறு வகையான இலக்கியத் தோற்றங்களைக் கூறுங்கால், விருந்து எனின் புதுவகையான பொருள், புதுவகையான பா அமைப்பு ஆகியவற்றின் அடிப் படையில் எழுந்த இலக்கியங்களைக் குறிக்கின்றது எனப் பொருள் விரிக்கும். இதற்கு உரை வகுக்கும் பேராசிரியர், அந்தாதி, கலம்பகம் போன்ற செய்யுட்களின் அமைப்பை எடுத்துக் காட்டுவது நோக்கற்பாலது. இப்பிரிவு தனிநிலைப் பாடல் களுக்கும், காப்பியங்களுக்கும் இடைநிலையில் உருவாகிய இலக்கியப் பிரிவெனலாம். "பெருங்காப்பியம், காப்பியம், புராணம் ஆகியவை தவிர அல்லது பன்னிரு பாட்டியல் கூறும் தொடர் நிலைச் செய்யுள் தவிர பிற இலக்கியங்கள் அனைத்தும் சிற்றிலக் கியங்களாகும்"[4] என்ற கருத்துள்ளது.

## பிரபந்தம்

சிற்றிலக்கியங்கள் என்ற சொல்லாட்சி அண்மைக் காலத்தில் தான் வழக்குக்கு வந்தது. இச்சொல் வழக்கில் வருமுன்பு 'பிரபந்தம்' என்னும் சொல்லால் சுட்டப்பட்டது. கி. பி. 12ஆம் நூற்றாண்டு முதல் 19ஆம் நூற்றாண்டு வரையிலான காலப் பகுதியைச் சிற்றிலக்கியப் பொற்காலம் என்றே கூறுவர். இதனைக் குறிக்க வந்த பிரபந்தம் என்பது வடசொல். நன்கு கட்டப்பட்ட நூல் என்பது இதற்குப் பொருள் என்பர். பிரபந்தம் என்பதற்குத்

2. நன்னூல், பொதுப்பாயிரம் நூ. 10
3. தொல், செய். நூ. 216
4. முத்துச் சண்முகன், நிர்மலா மோகன், **சிற்றிலக்கியங் களின் தோற்றமும் வளர்ச்சியும்** (மதுரை, 1979) பக். 51.

"தொண்ணூற்றாறு வகைப்பட்ட நூல், இசையுரு, கட்டுரை"[5] என்ற பொருளுண்டு. பிரபந்தம் என்ற வடசொல்லுக்கே தமிழில் நூல் என்ற பொருள் உண்டு. எனவே சிற்றிலக்கியங்களைச் சிறு பிரபந்தங்கள் என்றே கூறிவந்தனர். கால ஓட்டத்தில் பிரபந்தம் என்ற சொல்லே சிற்றிலக்கியம் என வழங்கலாயிற்று. சிற்றிலக்கியம் அகம் குறித்தோ புறம் குறித்தோ பேசும். அதன் யாப்பு வடிவம், ஆசிரியம் தொடங்கி விருத்தம், கலிவெண்பா வரை எந்த வகையினதாகவும் இருக்கலாம். 96 என்ற எண்ணிக்கைக்கும் வரையறை இல்லை.[6] அவை பெரும்பாலும் பக்தி இயக்கக் காலத்தின்போது இறைவனை நாயகமாகக் கொண்டு பாடப் பெற்றன.

## சிற்றிலக்கிய எண்ணிக்கை

பாட்டுக்குரிய இயல்களை, இலக்கண வரையறைகளை விதந்து கூறும் பாட்டியல் நூற்கள், தமிழில் வழங்கும் இலக்கிய வகைகளுக் குரிய இலக்கணம் கூறும் பிறிதொரு பணியையும் செய்துள்ளன. இப்பாட்டியல் நூல்கள் கூறும் இலக்கிய வகைகள், எண்ணிக்கை கள் மாறுபட்டன. பன்னிரு பாட்டியலில் 62 சிற்றிலக்கிய வகை கள் குறித்தும், வெண்பாப் பாட்டியலில் 55 சிற்றிலக்கிய வகைகள் குறித்தும், சிதம்பரப் பாட்டியலில் 63 வகைகள் குறித்தும், இலக்கண விளக்கப் பாட்டியலில் 63 வகைகள் குறித்தும், முத்து வீரியப் பாட்டியலில் 90 வகைகள் குறித்தும், பிரபந்த மரபியல், பிரபந்த தீபிகை, தொன்னூல் விளக்கம் போன்றனவற்றில் 96 இலக்கிய வகைகள் குறித்தும் எடுத்துரைக்கின்றன.

ஆனால் இவையே வரையறுக்கப்பட்ட முடிவுகள் அன்று. 18ஆம் நூற்றாண்டு இறுதிவரையில்தான் 96 வகை என்ற வரை யறை இருந்தது. தற்காலத்தே ஏறக்குறைய 331 சிற்றிலக்கியப் பிரிவுகள் இருப்பதாகக் கூறுவர். வஞ்சி, வளமடல், தேவானி, யானைத் தொழில், மெய்க்கீர்த்தி போன்றன இந்த 96 பிரிவுகளுள் அடங்காதனவாம்.

இங்ஙனம் பெருகிய சிற்றிலக்கியக் கடலில், சமயங்கள் பேரிடம் பெற்று, தமிழும் சமயமும் கலந்த சார்புக் கலவையாக மிளிர்ந்தது.

---

5. Tamil Lexicon Vol. v, p. 2680.
6. மு. சாயபு மரைக்காயர், **இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள்** (காரைக்கால், 1985) பக். 15.

பக்தி மார்க்க அடிப்படையில் இஸ்லாத்துக்குத் தமிழ் பின்புலமாக அமைந்தது. இஸ்லாத்தின் வழிபாட்டுக் கொள்கைகள் இலக்கியங்களில் இடம் பெற்றன. அதிலும் "எண்ணிக்கையளவில் மூன்றில் ஒரு பகுதியான இஸ்லாமியத் தமிழிலக்கியங்கள் சிற்றிலக்கியப் பிரிவினையே சார்ந்துள்ளன."[7] இஸ்லாமியப் புலவர்கள், சிற்றிலக்கிய வகைகள் பெரும்பாலானவற்றில் மார்க்கப் பிரச்சாரக் கருத்துக்களைப் பெய்து இலக்கியங்கள் படைத்துள்ளார்கள்.

மாலை, அந்தாதி, அம்மானை, உலா, கலம்பகம், கோவை, குறம், சிந்து, திருப்புகழ், தூது, பள்ளு, நான்மணிமாலை போன்றன மட்டுமல்லாது கிஸ்ஸா, நாமா, படைப்போர், மசலா, முனாஜாத்து போன்ற புதிய வகைகளையும் படைத்தனர்.

சிற்றிலக்கியங்களில் பெரும்பான்மையன, சிற்றின்பம் மூலமே பேரின்பப் பொருளை விளக்குவன. இதற்கு மாறாக இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் அமைகின்றன. "சிற்றின்பப் பொருளைப் பாடுவதாக ஒரு நூலைக் கூட முஸ்லீம் புலவர்கள் எழுதவில்லை."[8] யாவுமே பேரின்பப் பொருளையே பெரிதும் பாடுகின்றன. "பிற சிற்றிலக்கியங்களினின்றும் வேறுபடும் இச்சிற்றிலக்கியங்களின் முதன்மைக் கொள்கை, இஸ்லாமிய மதநெறியை மனித வாழ்வு சிறக்கும்படி எடுத்தியம்புதலாகும்."[9]

தண்டியாசிரியர் செய்யுள் வகைகளை விளக்குங்கால், முத்தகம், குளகம், தொடர்நிலை என நான்கு வகைப்படுத்தி, தொடர் நிலைச் செய்யுளை, 'பொருள் தொடர்நிலை', 'சொல் தொடர்நிலை' என இருவகைப்படுத்துவர். பெருங்காப்பிய, சிறு காப்பியங்கள் 'பொருள் தொடர்நிலை' எனில் சிற்றிலக்கியங் களைச் 'சொல் தொடர் நிலை' எனக் கொள்ளலாமென்பர்.[10]

## அந்தாதி

இச்சிற்றிலக்கியங்களுள் எண்வகையாலும், கருத்துச் செறிவாலும் முதன்மையிடம் பெறுவது அந்தாதி இலக்கியமே. இதன்

---

7. பீ.மு. அஜ்மல்கான், **இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள்** (மதுரை, 1982), பக். 10.
8. மு. சாயபு மரைக்காயர், மு. நூ. பக். 18.
9. ச. வே. சுப்பிரமணியன், "வாழ்த்துரை" **இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள்** (காரைக்கால், 1985), பக். 5.
10. மு. சண்முகம் பிள்ளை, மு. நூ. பக். 78.

தோற்ற காலம் கி. பி. 4-ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது கி. பி. 5ஆம் நூற்றாண்டென்பர். ஆயினும் தமிழின் 96 வகைச் சிற்றிலக்கியப் பகுப்பின் கண் இதனைத் தனித்துச் சுட்டாது ஒலியந்தாதி, பதிற்றந்தாதி, நூற்றந்தாதி என பகுப்புப் பெயர்கள் கொடுத்துப் பாட்டியல் நூல்கள் கூறுகின்றன.

அந்தாதியாகப் பாடல்களை அமைப்பது பழைய மரபு. நூலின் ஒவ்வொரு பாடலிலும் ஈற்றில் உள்ள எழுத்து, அசை, சொல், சீர், அடி ஆகிய இவற்றுள் யாதானும் ஒன்று வரும் பாடலின் முதலிலே அந்தாதித்துப் பாடுவதுடன் இறுதிப் பாடலின் இறுதியும் முதற்பாடலின் முதலும் ஒன்றாக இணையும்படி மண்டலித்து மாலை போலத் தொகுத்துப் பாடப்பெறுவதே அந்தாதி.

சங்க இலக்கியங்களில் பதிற்றுப்பத்து,[11] ஐங்குறுநூறு[12] முதலியவற்றில் அந்தாதி அமைப்புடைய பகுதிகள் உள. பத்துப் பாடல்கள் கொண்ட அந்தாதி வகையினைப் ‘பதிற்றந்தாதி’ என்றும் நூறு பாடல்கள் கொண்டதனை ‘நூற்றந்தாதி’ என்றும் சுட்டுவர். மற்றும் யமக அந்தாதி, திரிபந்தாதி, வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி, ஒலியந்தாதி, சிலேடையந்தாதி, நிரோட்டக யமக அந்தாதி என அந்தாதியில் பலவகைகள் உள.

ஈற்றுப் பாடலின் முடிவும், வரும் பாடலின் எடுப்பும் அந்தாதித்து வருதற் குறித்து, “அந்த முதலாத் தொடுப்ப தந்தாதி”[13] என்று இலக்கணம் கூறும். இஃது பெரும்பாலும் வெண்பா, கலிவிருத்தம், கலித்துறை, ஆசிரிய விருத்தம் போன்ற வற்றில் பாடப்பெறும். “அந்தாதி என்னும் சிற்றிலக்கியத்தில் பொருட்சிறப்பை விட யாப்புச் சிறப்பே மிகுதியாகும்.”[14] யாப்பின் அடிப்படையிலேதாம் அவை யமக அந்தாதி, (வந்த சொல்லே தொடர்ந்து மீண்டும் மீண்டும் வந்து அடிதோறும் பொருள் வேறு படுவது) திரிபந்தாதி, (செய்யுளின் நான்கடியிலும் முதல் எழுத்து மட்டும் திரிந்து, மாறுபட்டு ஏனையவை ஒன்றி நின்று பொருள் வேறுபட்டு விளங்குதல்) வெண்பா அந்தாதி (நேரிசை வெண்

11. பதிற். 4 ஆம் பத்து
12. ஐங். 118 ஆம் பாடல்
13. காரிகை. உறுப்பியல் நூ. 17
14. ந. வீ. செயராமன், **சிற்றிலக்கியச் செல்வம்**, (சிதம்பரம், 1979) பக். 47.

பாவானியன்றது) கலித்துறை அந்தாதி, (நூறு கட்டளைக் கலித் துறைப் பாடல்களாலாயது) சிலேடையந்தாதி, (இருபொருள் பயக்கும் சிலேடைப் பொருளோடு நூறு பாடல்கள் பாடுவது) நிரோட்டக யமக அந்தாதி (இதழ்கள் இரண்டும் ஒட்டாவண்ணம் செய்யுள் உச்சரிக்கப்படுவது) என்றும் பிரிப்பர்.

பாடல் முடிபே பாடலின் தொடக்கமாக இருத்தலின், வரிசை பிறழாது நினைவிலிருத்திக் கொள்ள இவ்வந்தாதி இலக்கிய முறை பெரிதும் உதவியது. "அந்தாதி யாப்பில் அமைந்துள்ளமையால் நூல் முழுவதையும் அடுத்தடுத்து நினைவு கூர்வது மிக எளிமை யாக இருந்தது. இக்காரணத்தால் அந்தாதி இலக்கியங்கள் பல்கிப் பெருகின".[15] அந்தாதி என்னும் சொல்லே அந்தம் + ஆதி என்னும் சொற்களின் கூட்டு வடிவமே.

## அந்தாதியின் வகை

அந்தாதி இலக்கியங்களில் இறைவன், இறைவி, ஞானக் குரவர் ஆகியோர் பாட்டுடைத் தலைவராய் வைத்துப் பாடப் பெறுகின்றனர். அழகர் அந்தாதி, அபிராமி அந்தாதி, முகையித்தீன் அப்துல் காதிறாண்டவர்களின் பெயரில் பாடப்பெற்ற பதிற்றந்தாதி போன்ற அந்தாதி இலக்கியங்களைக் காட்டாகக் கொள்ளலாம். பாடப்படும் திருத்தலங்களின் பெயரானும் அந்தாதி இலக்கியங்கள் அமையும். இதற்குக் காட்டாக மதீனத் தந்தாதி, திருநாகூர் திரிபந்தாதியைக் கூறலாம். மூன்றாவது வகையோ 'வடிவங்களின் அடிப்படையில் ஆறெழுத்தந்தாதி, ஒரெழுத்தந்தாதி என்றும் பெயர் பெறுகின்றன."[16]

காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியே தமிழில் எழுந்த முதல் அந்தாதி இலக்கியம். "அற்புதம் என்ப தற்குச் சிவஞானம் என்பது பொருள். சிவஞானம் கைவரப் பெற்ற, ஒருமை நிலையில் அம்மையார் அற்புதத் திருவந் தாதியைப்[17] பாடியதை "உற்பவித் தெழுந்த ஞானத் தொருமை யின் உமைகோன் தன்னை அற்புதத் திருவந்தாதி அப்பொழு

---

15. ந. வீ. செயராமன், மு. நூ. பக். 57.
16. பீ, மு, அஜ்மல்கான். மு. நூ, பக். 102.
17. ந. வீ.செயராமன், **சிற்றிலக்கியத் திறனாய்வு** (சென்னை, 1980), பக்.12.

தருளிச் செய்வார்''[18] என்பர் சேக்கிழார். பின்னர் அந்தாதி இலக்கியங்கள் பெருகின. தற்போது ஏறக்குறைய 250 அந்தாதி இலக்கியங்கள் வழங்குகின்றன.

பக்தி நெறியைக் கூறுவதற்குச் சிற்றிலக்கிய வழி மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது. இடைக்காலத்தில் எழுந்த பக்தி இயக்கம் இத்தகு இலக்கியங்கள் பிறக்க முக்கிய காரணமாக அமைந்தது. எனவே மிகப் பெரும்பான்மையான சிற்றிலக்கியங்கள் பக்திச் சிற்றிலக்கியங்களே. மேலும் பிற்காலத்தில் அந்தாதி இலக்கியம் தனி இலக்கிய வகையாகக் கிளைப்பதற்குரிய காரணக் கூறுகள் முன்பே பரவியிருந்ததை, ''தொல்காப்பியர் காலத்தில் வித்திடப் பெற்று, சங்க இலக்கியங்களில் தழைத்துச் செழித்த அந்தாதி அமைப்பு கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் தனியொரு சிற்றிலக்கியமாக முழுமை பெற்றுக் கனிந்தது. அறுபான் மும்மை நாயன்மார்களுள் சேரமான் நாயனாரால் உலா இலக்கியம் தோற்றுவிக்கப்பட்டது போன்று, பிறிதொரு நாயன்மாரான காரைக்காலம்மையாரால் அந்தாதி இலக்கியமும் தோற்றுவிக்கப் பட்டது''[19] என்ற கருத்தின் வழி அறியலாம்.

## இஸ்லாமும் சிற்றிலக்கியங்களும்

தமிழ் ஒரு சமயத்தார்க்கு மட்டும் உரிமையாகாது. அனைத்துச் சமயத்தார்க்கும் இலக்கியங்கள் படைப்பதற்குக் களம் வகுத்துத் தந்த மொழியானதால் சைவ, வைணவம் போன்று, கிருத்துவ, இஸ்லாமியச் சமயங்களும் தத்தஞ் சமயக் கோட்பாடு களை எடுத்துரைக்கலாயின. அறபு மக்களின் அற்றை நாள் வாணிபத் தொடர்பும், இஸ்லாம் இம்மண்ணில் பரவியதும், கலை, கலாச்சாரம், மொழி, அரசியல் போன்ற பல்வேறு நிலைகளில் கருத்தொருமை ஏற்பட்டதும் பல சிற்றிலக்கியங்கள் உருவாகக் காரணங்களாக அமைந்தன. தமிழ் கூறு நல்லுலக மண்ணில் இஸ்லாமியக் கலைக் குடியேற்றம் படர்ந்தது. 12 ஆம் நூற்றாண்டில் தமிழ் இஸ்லாமியச் சிற்றிலக்கியத் தொடக்க காலம் உருவாகியது. அது முதற் கொண்டு இந்நூற்றாண்டுக் காலம் வரை சிற்றிலக்கியம் பல்கிய நிலையில் இருந்து வருவதைக் காண முடிகின்றது. அவற்றுள் மாலை என்னும் இலக்கிய

---

18. பெ .பு. 1773.
19. ந. வீ. செயராமன்' சிற்றிலக்கியச் செல்வம், (சிதம்பரம், 1979), பக். 51

வடிவமே எண்ணிக்கையில் அதிகமான நூல்களைப் (200-இற்கும் மேற்பட்ட) பெற்றிருந்தது. பல்சந்தமாலை என்ற சிற்றிலக்கியமே தமிழ் இஸ்லாமிய வரலாற்றுக்கு அச்சாரமிட்ட பெருமை யுடையது.[20] முழுமையாக இந்நூல் கிடைக்கவில்லை.

சைவ, வைண சமய இலக்கியங்களுக்கு அடுத்ததாக எண்ணிக்கையளவில் அதிகமாக அந்தாதி இலக்கியங்களைப் பெற்றிருக்கும் சமயம் இஸ்லாமே. கிறித்துவ சமயத்தைச் சார்ந்தன வாக மூன்றும், சமண சமயம் சார்ந்ததாக நூற்றந்தாதி என்ற ஒன்றும் காணப்படுகிறது. "தமிழ் அந்தாதி இலக்கிய வடிவத்தி னடிப்படையில் எழுந்த பதின்மூன்று நூல்களை இஸ்லாமியத் தமிழிலக்கியப் பிரிவு தன்னகத்தே பெற்றுள்ளது"[21] இவ்வகைச் சிற்றிலக்கியங்களில் இஸ்லாமியக் கோட்பாடுகளைத் தொகுத் துரைத்த இறை நேசர்களின் பெருமை எடுத்துரைக்கப்படு கின்றன. இஸ்லாமியத் திருத்தலங்களான மக்கா, மதினா, பக்தாத், நாகூர், பதாயிகு குறித்தும் அந்தாதி நூல்கள் படைக்கப் பட்டுள்ளன. முகையதீன் ஆண்டகை பெயரில் இரண்டு அந்தாதி கள் பாடப் பெற்றுள்ளன. ஐவ்வாது புலவர் படைத்த மதீனத் தந்தாதி தமிழ் இஸ்லாமிய அந்தாதி நூல்களில் காலத்தால் முந்தி யது. இந்நூல் கிடைக்கவில்லை.

**நாகையந்தாதி**

தற்போது கிடைத்துள்ள தமிழ் இஸ்லாமிய அந்தாதி நூல் களுள் நாகையந்தாதியே காலத்தால் பழமையானது. புலவர் நாயகத்துக்கும் மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவருக்கும் இலக்கியத்துறையில் ஏற்பட்ட போட்டிகள், தமிழ் இஸ்லாமிய இலக்கியம் பல்கக் காரணங்கள் ஆயின.[22] இதனால் பல இலக்கி யங்கள் தோற்றம் பெற்றன.

நாகூர் பற்றியே பல இலக்கியங்கள் உள்ளன. புலவர் நாயகமே நாகூர் பற்றித் திருக்காரணப் புராணம் பாடிய பின்னரும் அந்தாதி யும் பாடுகின்றார். இதற்குப் புலமைப் போட்டியே காரணமாக இருந்திருக்க வேண்டும். நாகூரைப் பற்றியும், நாகூரில் அடங்கி யிருக்கும் ஷாகுல் ஹமீது நாயகம் பற்றியும், அவர்கள் எழுந்

20. பீ. மு. அஜ்மல்கான், மு. நூ. பக்.100
21. பீ. மு. அஜ்மல்கான், மு. நூ. பக். 102
22. ம. மு. உவைஸ், **இஸ்லாம் வளர்த்த தமிழ்**, (சென்னை, 1984), பக். 221.

தருளியுள்ள ஊரின் பெயரோடும் எழுந்த அந்தாதி நாகையந்தாதி. நாகையந்தாதியின் பொருளை யாரும் விளக்கிக் கூற முடியவில்லை. "புலமைக்கு அழகு பிறருக்குப் புரியாமல் எழுதுவது என்பது முன் காலத்து வழக்கமாக இருந்தது."[23] காண்போர் நோக்கிற்கேற்பப் பொருள் விரியட்டும் என்று அந்தாதி படைத்தார். கற்றறிந்தோரும் பொருள் உணர்தற்கு இடர்ப்படவே புலவர் நாயகமே தாம் படைத்த நாகையந்தாதிக்குப் பதவுரை, கருத்துரை எழுதியுள்ளார். காயல்பட்டிணம் கண்ணகமது மொகுதூம் முஹம்மதுபுலவரும் இதற்குப் பொழிப்புரை, கருத்துரை எழுதியுள்ளார் எனக் குறிப்பர்.[24] "பெருங்காப்பியப் புலவராகும் தகுதி இல்லாத சாமானியப் புலவர்கள் அதிகமாகப் பிரபந்தம் பாடியிருக்கிறார்கள்"[25] என்று சொல்லப்படும் கூற்றுக்கு முற்றிலும் மாறுபட்டவர் புலவர் நாயகம் என்பதை அவர் படைத்த காப்பியங்கள் உணர்த்தும்.

## நாகையந்தாதியின் அமைப்பு

இவ்வந்தாதியில் உள்ள எல்லாப் பாடல்களுக்கும் அப்பாடல்களின் கருத்தைச் சில சொற்றொடர் மூலம் விளக்கிக் காட்டுகின்றார். பாடலின் கருத்து விளக்கும் சொற்றொடரைக் கொளு என்று குறிப்பர். மாணிக்கவாசகர் திருக்கோவையாரில் செய்யுளுக்குப் பின்பு கொளு அமைத்து விளக்குவார். புலவர் நாயகம் பொருள் புரிந்து கொள்ள இடர்ப்படும் தன்மையைக் குறைக்க, பாடலின் முன்பு கொளு அமைத்துள்ளார். திருக்கோவையாரில் எட்டாம் பாடலுக்கு,

> "கொலை வேலவன் கொடியிடை யொடு
> கலவியின்பங் கட்டுரைத்தது'

என மாணிக்கவாசகர் கொளு அமைப்பர். நாகையந்தாதியின் ஐம்பத்தெட்டாவது பாடலுக்கு,

> 'ஒன்றிய பொதியத்துயர் தமிழ தனிற்
> றென்றல் நூதினைச் சிறப்பக் கூறியது'

என புலவர் நாயகம் கொளுவைக் குறிப்பர்.

---

23. வல்லிக்கண்ணன், **பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை** (சிதம்பரம், 1981), பக். 17
24. எம். கே. செய்யிது அஹமது, மு. நூ. பக். 102.
25. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு - பத்தொன்பதாம் நூற்றாண்டு** (திருச்சிற்றம்பலம், 1969), பக். 289.

புலவர் நாயகம் தம் நோய் நீங்குவதற்காக ஷாகுல் ஹமீது நாயகத்திடம் வேண்டுகின்றார். எகிப்து நாட்டைச் சேர்ந்த இமாம் ஷர்புத்தீன் முஹம்மது அல்பூசிரி அவர்கள் நோயால் துன்பப்பட்டு நலம் பெறமுடியாமல் நலிந்து கொண்டிருந்த காலை, நாயகம் (சல்) மீது, 'அமின் ததக்குரி ஜீரானின் பிதீ, ஸலமி' எனத் தொடங்கும் 'கஸீதத்துல் புர்தா' என்னும் நூலை அறபு மொழியில் பாடி நலம் எய்தியதாகக் குறிப்புள்ளது.[26] அந்த நூலைப் பின்பற்றிப் புலவர் நாயகமும், நோய்தீர்க்க இறைநேசர் ஷாகுல் ஹமீது அவர்களிடம் இறைஞ்சும் வகையில் பாடியிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது.

நாகையந்தாதி யமக வகையினைச் சார்ந்தது. யமகம், சித்திரக் கவிகள் போன்றன எளிதில் பொருளுணர இயலாது அமைந்தன. அரிதின் முயன்று வருந்திப் பொருள் கொள்ள நேரிடுவதால் இவற்றை மிறைக்கவிகள் என்றழைப்பர். மிறை என்ற சொல்லுக்கு வருத்தம் என்ற பொருளுண்டு. கடும் புலமையுடன் இதன் நடை இயலுவது. ஆன்றவிந்த கொள்கைப் புலம் படைத்த சான்றோரே பொருள் நிறுவத்தக்கது. முற்காலத்தில் ஆதீனங்களில், ஜமீன்களில் இக்கடுமையான யமகப் பாடல்களுக்குப் பெரும் வரவேற்பு இருந்தது. பன்முறை இதனை நிதானமாகக் கேட்டு இன்புற்றனர். ஒரு புலமைப் போட்டியையும் இது வளர்த்தது. இக்கலைஞர்களைப் போட்டியிட்டுக் கொண்டு ஜமீன்களும், ஆதீனங்களும் புரந்தன.[27] யமகம் என்னும் சொல்லணி வரப்பெற்று நூறு கட்டளைக் கலித்துறையான் அந்தாதித் தொடையில் அமைந்தது நாகையந்தாதி. அவையடக்கப் பாடலொன்றும், அந்தாதித் துறையின் அகவலும், காப்புப் பாடலும் கொண்டு தொடங்குவது நாகையந்தாதி.

நாகையந்தாதி என்ற தொடர் நாகையினது தொடர்புடைய அந்தாதி எனப் பொருள் கொண்டால் ஆறாம் வேற்றுமைத் தொகையாகவும், நாகையைப் பற்றிய அந்தாதி எனப் பொருள் கொண்டால் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகையாகவும் இலக்கண விளக்கம் பெறும். நாகூரில்

---

26. அப்துற்-றகீம், 'மதிப்புரை' **புதியவிணை** (சென்னை, 1979), பக். 23.
27. ப. இராமச்சந்திரன், **திருவரங்கத்தந்தாதி ஓர் ஆய்வு,** ஆய்வேடு (திருச்சி, 1986), பக். 38.

எழுந்தருளியுள்ள நாயகம் குறித்துப் பாடியதொரு அந்தாதி என்றும் பொருள்படும். இதனைத் தோத்திர இலக்கியம் என்றும் கூறலாம். "நமஸ்கரித்தல், ஆசிகூறுதல், சித்தாந்தத்தை எடுத்துரைத்தல், பராக்கிரமத்தைப் புகழ்தல், பெருமைகளைப் பேசுதல், பிராத்தனை செய்தல் என்று தோத்திரத்தின் இலக்கணம் அறு வகை என்று கூறுவர்."[28] இவ்வகையில் இவ்விலக்கணம் நாகை யந்தாதிக்குப் பொருந்தி வருகின்றது. புலவர் நாகை என்று நாகூரையே குறிப்பிடுகின்றார்.

## பதிப்பு

புலவர் நாயகம் படைத்த இலக்கியங்களுள் நாகையந்தாதி மட்டுமே படைப்பாசிரியரால் அச்சில் கொண்டு வரப்பட்ட பெருமையுடையது. இதுவரையில் நாகையந்தாதி ஐந்து பதிப்புகள் வெளி வந்துள்ளன. புலவர் நாயகம் 1842 ஆம் ஆண்டு ஒரு பதிப்பும் 1872 ஆம் ஆண்டு பிறிதொரு பதிப்பும் வெளியிட்டுள்ளார். மூன்றாம் பதிப்பைச் சென்னை மனோன்மணி அச்சுக் கூடத்தில் 1872 ஆம் ஆண்டு மகுதூ முகம்மதுப் புலவர் வெளியிட்டுள்ளார். அவரே நான்காம் பதிப்பினை 1895 ஆம் ஆண்டு ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக் கூடத்தில் வெளியிட்டுள்ளார். ஐந்தாம் பதிப்பைச் சென்னை கலராத்நாகரம் பிரஸில் 1914 ஆம் ஆண்டு எம். கே. எஸ். இபுராகீம் சாகிப் பதிப்பித்துள்ளார்.[29] புலவர் நாயகம் பல நூல்கள் படைத்திருப்பினும் நாகையந்தாதியை மட்டும் அவர் அச்சிட்டு வெளியிட்டது நூலின் நுவல் பொருளில் அவர் கொண்ட பெரு விருப்பமாக இருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

---

28. அண்ணா, (பு.பெ.), ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் (சென்னை, 1983), பக். 8.
29. பீ. மு. அஜ்மல்கான், மு. நூ. பக். 104

# 3. நூன்முகம்

## அவையடக்கம்

உலக உயிர்களைப் படைத்துக் காத்து அளி செய்யும் கருவினுக்குக் கருவான ஆண்டவனை வாழ்த்தித் தம் பிரபந்தத்தைப் பாடுதற்கு முன்பாக, புலவர் நாயகம் அவை யடக்கத்தை முன் மொழிகின்றார். இலக்கியம் நுகர வரும் உள்ளங் களில் தன் குறிக்கோளை விதைப்பதற்காக அவையடக்கப் பாடலைப் பாடுகின்றார்.

> ''தன்னுளத்தி னுறுமறிவைப் புறப்படுத்தி
> மறை பொருளைச் சார்ந்தோர் கொள்ளு
> மன்னுளத்தில் வெளிப்படுத்திப் பேறுகொள்வரான்
> வகுத்துரைத்த மதிதான் செய்யும்
> புன்னுளத்தின் பொருள்சிறிய தெனினுமதன்
> பயனோக்கிப் போற்றிக் கொள்வர்
> இன்னுளத்தி னுறுதிநிலைத் தவத்தினரென்
> றுவகையுண ரியல்பி னானே.''

என்பது பாடல். புலவர் தாம் கொண்ட அறிவைப் புறம் நிறுத்தி வேதமுணர்ந்த மக்களின் மனங்களில் ஒளியேற்றிப் பேறு பெற விழைகின்றார். எனவே தம் மதி கொண்டு வகுத்துச் சொன்ன இப்பிரபந்தப் பொருள் அற்ப உளத்தினின்று வெளிப்பட்ட வறிய தொன்றாக இருந்தாலும், அதிலும் பயன்நாடிப் போற்றுபவரே நல்லுளமும், தவச்சிறப்பும் கொண்ட தகைமையோர். இதனையே தாம் உவகையோடு வேண்டுவதாகக் குறிக்கின்றார். இதுவே அவையடக்கப் பாடல் தரும் பொருள். தாம் எழுதிய அளப்பரிய

புகழ் நூலை, ''புன்னுளத்தின் பொருள்'' என்று தகை குறைத்து மொழிவார். இராம காதையை யாத்த கம்பரும் 'ஆசைபற்றி அறையலுற்றேன்' என்று கூறுவது போல, புலவர் நாயகமும், மறைபொருளைச் சார்ந்த மக்களின் உளங்களில் ஒளியேற்றிப் பேறு பெறும் ஆசையில் பாடுகின்றார். மறை பொருளை வேத மொழிகளை - நல்லுளத்தில் விதைத்தால் நற்பேறு கிட்டும் என்ற ஆசை பற்றியே பேச முற்படுகின்றார். அதனைப் படிப்போர் தினையளவு பொருள் பெறினும், அதிலும் பயன் நோக்கி நுகரட்டுமே எனத் தவிக்கும் மனப்பாங்கும் உணரலாம். அங்ஙனம் நுகர்ந்த அளவிலேயே தன்னுவகை பெருகுமென மனஞ் சிலிர்த்துப் போகின்றார். பல நூற்கள் படைத்து, புலவர்க்கெல்லாம் அரிமா போன்ற நாயகமே இங்ஙனம் நாவடக்கம் கூறுவது அவர்தம் பெருமையாம் பணிதலை நன்கு விளக்குகின்றது. இஃது அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தானியன்றது.

## அந்தாதித் துறையினகவல்

நாகையந்தாதியின் பின் தொடரும் அந்தாதித் துறையினகவல் என்பது, 101 பாடல்களின் கொளுக்களாகிய ஈரடிப் பாடல்களை வரிசைப்படுத்திய அகவற்பாவாக உள்ளது.

''முதல்நபிக் குரிய முறையொடு புணர்த்தி
நுதலிய பொருளை நுவன்று கேட்டது''

என முதற் பாடலுக்குரிய கொளுவை முதற்கண் வைத்துத் தொடங்கி, நிரலே அனைத்துக் கொளுக்களையும் கூறி முடிக்கின்றார். எனவே அந்தாதி படிப்பவர் மறவாத வண்ணம், ஒன்றன் பின் ஒன்றாய் வரிசைப்படுத்தி, படிப்பது நினைவு கூரத்தகும் விதத்தில் யாக்கப்பட்டுள்ளது. அகவல் இறுதியில்,

''ஆகிய வனைத்து மகத்திணை புறத்திணை
பாகினிற் றெரிந்து பாடாண் பகுதியாற்
பண்புறு நாகைப் பார்த்திவ ராற்பெறு
நண்புறை பரிசில் நாடிய செய்யுட்குக்
கருத்துந் துறையுங் காரண
அருத்தமு மாக அமைத்தனர் கொளலே''

என்று முடிகின்றது. இதன்வழிச் சில செய்திகள் பெறப்படுகின்றன.

முதற்கண் இந்நூல் அகத்திணை வழியிலும், புறத்திணை வழியிலும் துறைகொண்ட பாடல்களைப் பெற்று நடப்பது எனலாம்.

பாட்டுடைத் தலைவனின் புகழ், அருள், கொடை போன்ற புறக் கூறுகளைத் தழுவியும், அவர்கள்பால் நெஞ்சங் கலந்த அடியா ராகிய தம்மைத் தலைவியாக உருவகித்து, தனிமை நோயுற்று, பசலைபடர்ந்து, அலர் பரவி, தூது விடுதல் போலும் நிலைக் காளாகிப் பரிதவிக்குங்கால் அகக் கூறுகளைத் தழுவியும் நடப்ப தாய் நூல் அமைகின்றது. அடுத்து அதைப் பாகுபோன்ற சொல்லினிமை கொண்டு, பாடாண்திணைக்குரிய ஒழுகலாறு களுடன் பாடப்பெற்று, பின் பார்த்திபருக்குப் புலவர் பிரபந்த மெனச் சூட்டுவதாய்க் கூறும்போது முறையே நூலின் துறை, இயலும் நெறி, பாட்டுடைத் தலைவர், பிரபந்த நெறி எனச் செய்திகளை வரிசைப்படுத்துவார்.

அடுத்து, இதனைப்பாடும் நோக்கம் — அதாவது பாடற்பயன் என்னவென்பதைக் கூற வரும் போது,

> ''நண்புறை பரிசில் நாடிய செய்யுள்''

என்பார். இதன்வழி, தம்மிடம் நட்பினைச் சேர்ப்பிக்கின்ற நல்லுணர்வுப் பரிசிலை ஆண்டகை அருளவேண்டும் என்பதையே நூற்பயனாகக் கூறுவர். பின் நுவலுந்திறத்தை,

> 'கருத்துந் துறையுங் காரண
> அருத்தமு மாக அமைத்தனர் கொளலே''

என்பார். செய்யுட்களுக்கான கருத்து, துறை, பொருள் போன்றன கொள்வார் இனிமையுடன் கொள்ளும் பொருட்டுப் படைக்கப் பட்ட தன்மை தெரியவரும். இங்ஙனம் நூல்மைந்த துறை, நூனெறி, நூற்பயன், நுவலுந்திறம் போன்றன இவ்வகவலில் வரிசைப்படுத்தப்படுகின்றன.

## காப்பு

தமிழ் இஸ்லாமியப் புலவர்கள் காப்பில் - ஏக இறைவனின் அருங்குணங்களையும் பண்புகளையும் விதந்தோதுவர். பிறப்பு முதல் இறப்பு வரை, தொடங்கும் எதையும் அல்லாஹ்வின் திருப் பெயரைக் கொண்டே ஆரம்பம் செய்வது அண்ணல் நபி (சல்) அவர்கள் வழிவந்த இஸ்லாமியர் மரபு. அல்லாஹ்வின் அருளையும் ஆசியையும் பெற வேண்டும் என்பதே அதன் அடிப்படை நோக்கம்.

பொதுவாகவே காப்புச் செய்யுள் புலவரின் பேரறிவுக்கு உரை கல்லாக அமையும். நூலாசிரியரையும் நுவலும் பொருளையும்

இனம் கண்டு கொள்ள காப்பு உதவும். மங்கல மந்திரக் கற்கண்டுச் சொற்கொண்டு அதனைத் தொடங்குவர். புலவர் நாயகம் சிலவாகிய சொல்லில் பலவாகிய பொருளைப் பெய்துள்ள பெற்றியில் வெற்றி பெற்றுள்ளார்.

"மணியொளி போலுமலர் மணம் போலு மருவியுயிர்க்
கணியொளி போன்றவுண்மைப் பொருளே யகமுஞ் சுகமுங்
கணியொளி மேதையுந்தந் தருள்வாய் அப்துல் காதிர் புகழ்ப்
பணியொளி யாநிதி நாகை யந்தாதி படிப்பவர்க்கே"

என்பது காப்புச் செய்யுள்.

## மணியொளி போலும்

இக்காப்புச் செய்யுளை மணி என்ற மங்கலச் சொற் கொண்டு புலவர் தொடங்குகின்றார். மணியின் ஒளி எனவும், மலரின் மணம் எனவும் இறைவனை உவமிக்கின்றார். புலவர் இரத்தின வாணிகர் என்பதனாலே, அவர் தினமும் பார்த்துப் பழகிய மணியின் ஒளியாக, மாணிக்க ஒளித் தொகுதியின் பேரொளியாக இறைவனைக் காண்கின்றார்.

உருவமிலா ஓரிறைக் கொள்கை இஸ்லாத்தின் தலையாய கொள்கை. உருவமில்லா "அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. எந்தப் பொருளுடனும் நீங்கள் இறைவனை உவமையாக்கிக் கொள்ள முடியாது"[1] என்ற இறைவனின் ஆணையை முழுமையாக அறிந்தே இறைவனை ஒளியாகக் காண்கின்றார். ஒளியை உளிகொண்டு செதுக்கியவர் யார்? உருவிலா அல்லாஹ்வின் நெறியைக் கூறும் போது ஒளி என்று கூறுவது உருவம் சுட்டுவதாகாதா? எனின், ஆகாது, "ஒளிக்கு உருவமில்லை".[2]

அஸ்மாவுல் ஹுஸ்னா என்னும் அல்லாஹ்வின் திருநாமங்கள் தொண்ணூற்றொன்பது. அவற்றுள் ஒன்று ஒளி (நூர்) என்பது. அல்லாஹ் என்ற நூரை ஒளி என்ற பதத்தில் குறிப்பிட்டிருப்பினும் அந்த ஒளிக்கு உவமையில்லை. அந்த ஒளியைப் பற்றித் திருக்குர்ஆனில் "அல்லாஹ் வானங்களுடையவும், பூமியுடையவும்

1. குர்ஆன் 42:11
2. கவி. கா. மு. ஷெரீப், **சீறாப்புராணம், நுபுவ்வத்துக் காண்டம், பாகம்-1** (சென்னை, 1982), பக், 3.

ஒளியாவான்; அவனுடைய நூருக்கு உவமை மாடக்குழி ஒன்றிலி ருக்கும் விளக்காகும். அந்த விளக்கு ஒரு பளிங்குக் கண்ணாடியுள் இருக்கின்றது. அந்தக் கண்ணாடி முத்துப் போன்ற விண்மீன் போல் தோன்றுகின்றது. பாக்கியம் பெற்ற ஒரு மரத்திலிருந்து கிழக்கையோ மேற்கையோ சேராதஜெத்தூன் மரம் ஒன்றிலிருந்து எடுக்கப்பட்ட எண்ணெயில் அஃது எரிகிறது. அந்த எண்ணெய் நெருப்புப்படாமல் வெளிச்சம் தருகிறது. வெளிச்சத்துக்கு மேலே வெளிச்சம். அல்லாஹ் தான் விரும்புவோர்க்குத் தன் ஒளியின் பாதையைப் போதிக்கிறான்'' (23:35, 36)[3] ஒளி என்ற சொல்லில் புதைந்து கிடக்கும் இஸ்லாமியப் பின்னணியை அறிந்த புலவர் அதனைத் தக்க இடத்தில் ஆளுகின்றார். புலவர் நாயகம் சமய அறிஞராகவும் (ஆலீம்) இருப்பதால் இஸ்லாமிய இறைக் கொள்கையை முதல் வரியிலேயே அழகுறக் கூறிவிடுகின்றார்.

சிறப்புக்குரியனவற்றை மணியென அடை கொடுத்தழைக்கும் மரபு நம் மண்ணுக்குரியது. மணிக்கொடி, மணிநகரம், மணி மொழி என்றே அழைக்கப்படுவதை நாம் அறிவோம். நபிகள் நாயகம் (சல்) அவர்களை நபிமணி என்றும், மணி விளக்கென்றும் இஸ்லாமியர் பகர்வர். அம்மையே அப்பா ஒப்பிலா மணியே என்று பாடும் தமிழ் மரபை அறிந்த புலவர் அவ்வாறே மணியின் ஒளி என்று பாடலைத் தொடங்குகின்றார்.

### மலர் மணம் போலும்

பல வண்ணங்களில் மலர்ந்து மகிழ்வூட்டும் மலர்களின் மண மாக இறைவனைக் காண்கின்றார் புலவர். மலரின் மணத்தை நாசியின் வழி உணர முடிகின்றது. மலரில் அழகும் மணமும் மட்டுமல்ல பயனாகிய தேனும் உண்டு. அதுபோலவே இறைவனின் இருப்பை அவனின் படைப்புக்களில் காணலாம். இறைவனைப் பற்றி எண்ணுகின்ற உள்ளங்களுக்கே அவனின் பேராற்றல் பற்றிய அறிவுத் தெளிவு தோன்றும்.

### உயிர்க்கு அணிபோலும் உண்மைப் பொருளே

உயிருக்கு ஆபரணம் போன்றவன் என்று இறைவனைப் பாடு கின்றார் புலவர். இறைவனையும் உயிரையும் பல நிலைகளில்

---

3. ஆர். பி. எம். கனி, **கலைமறை முஹம்மது என்னும் தாரணம்,** (சென்னை, 1961) பக். 18.

இணைத்துப் பார்க்கலாம். உடலில் உயிரின்றி இயக்கமில்லை. அந்த உயிர் கண்ணுக்குத் தெரிவதில்லை. ஆனால் அறிவுக்குப் புலனாகின்றது. ஒரே உயிர்தான் உடல் இயக்கத்துக்கும் காரண மாகின்றது. உடல் தோன்றுவதற்கு முன்பும் உயிர் இருந்தது, அழிவுக்குப் பின்னும் உயிர் இருக்கும். உடலில் எவ்விடத்தில் உயிர் உள்ளது என்று கூற முடியாது. அதுபோலவே இறைவனின்றி இப் பிரபஞ்சம் செயல்படா. இறைவனும் கண்ணுக்குத் தென்படுவ தில்லை. அறிவுக்குப் புலனாகின்றான். பிரபஞ்ச இயக்கத்துக்கு ஒரே இறைவனே காரணமாகின்றான். ஆதியும் அந்தமும் இல்லாது என்றும் நிலைத்திருப்பவன். அத்தகைய உவமையான இறைவன் உயிருக்கு ஆபரணம் போன்றவன்.

அல்லாஹ் தன்னுடை சாத்துவீகச் சுடரொளியிலிருந்து (நூர்) முகம்மது (சல்) அவர்களை ஒளி வடிவில் படைத்தான். பின் ஆதி மனிதரான ஆதம் (அலை) அவர்களைப் படைத்து, அவர்களின் நெற்றியில் பெருமானார் ஒளியை நிலைபெறச் செய்து ஆதம் (அலை) அவர்களுக்கு ரூஹ் (உயிர்) ஊட்டப்பட்டது. ஆதம் (அலை) முதலாகத் தோன்றிய மனித குலத்தின் உயிர் தழைக்கவும், அவ்வுயிருக்கே மனிதப்புனிதர் முகம்மது (சல்) அவர்களை வழி காட்டியாகவும் அனுப்பிய இறைவனை உயிருக்கு ஆபரணம் என்று குறிப்பிடுவது மிகப் பொருத்தமாக உள்ளது. உண்மைப் பொருள் என்பதன் வழி அல்லாஹ் உண்மையாளன் (ஹக்) நிலையானவன் (மத்தீன்) என்பதைக் குறிக்கின்றார். இறைவனுக்குப் பிறப்போ இறப்போ இல்லை என்ற இஸ்லாமியக் கொள்கை வழி நின்று இறைவனைச் சுட்டும் அழகு நினைந்து மகிழ்தற்குரியது.

## பணிதல்

அடுத்து அப்துல் காதிர் புகழ் என்பதில் பல பொருத்தங்களைக் காணலாம். இறைநெறியாம் காதிரிய்யா நெறி ஜீலானில் பிறந்து பாக்தாதில் மறைந்த முஹியித்தீன் ஆண்டகையைத் தலைவராகக் கொண்டது. அவர்களின் இயற்பெயர் அப்துல் காதிர். அவர்களின் பெருமையை, "குணங்குடி வாழும் முஹியித்தீனாம் என் குருபதம் சிரத்தின் மேற்கொள்வாம்"[4] என்று போற்றிய தமிழ்க் கவிஞர் மஸ்தான் சாகிபின் இயற்பெயரும் (சுல்தான்) அப்துல் காதிர்தாம். முஹியித்தீன் ஆண்டகையின் நெறியைத் தமிழ் மண்ணில் பரப்பிய

4. அப்துல் ரகுமான், மு. நூ. பக். 45.

வர்களில் தலையாயவரான நாகூர் ஆண்டகையின் இயற்பெயரும் அப்துல் காதிர்தாம். அவர்தம் அற்புதங்களைப் பாடி வியக்கும் புலவர் நாயகத்தின் இயற்பெயரும் அப்துல் காதிர்தாம். ஒரே நெறியைப் பரப்ப முயன்ற அவர்களின் இயற்பெயரெல்லாம் ஒன்றாகவே இருப்பது வியப்புக்குரிய ஒன்று. காதிர் என்பது அல்லாஹுவின் அழகிய பெயர்களில் ஒன்று. காதிர் என்றால் ஆற்றல் என்பது பொருள். பல்லாற்றல் மிக்க அந்நால்வருக்கும் அல்லாஹுவின், காதிர் என்ற பெயர் அமைந்தது மிகப் பொருத்தமே. அப்துல் காதிர் என்றால் அல்லாஹுவின் அடிமை என்பது பொருள். அப்துல் காதிர் பாடும் நாகையந்தாதியைப் படிப்பவர்க்குச் சில நலன்களை இரக்கின்றார் புலவர் நாயகம்.

ஒளி, மணம், ஆபரணம் என இறைவனின் பண்புகளை மூன்று உவமைகளில் எடுத்துக் காட்டி அவனிடம் மூன்று கொடைகளை அருளும்படி இரக்கின்றார். கேட்பவர்க்கு மறுக்காமல் ஈயும் மாண்புடையவன் அல்லாஹ். பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிவுடையவன். ‘இலட்சோப லட்சத் தாய்மார்களின், அன்பைக் காட்டிலும் மேலான அன்புடையோன் அல்லாஹ்’ என்ற நபி (சல்) அவர்களின் வாக்கை மறவாத புலவர் அவனிடம் முப்பயனை வேண்டுகின்றார்.

முதலில் சுகமான ஆரோக்கியமான நலிவு நீங்கிய உடலைத் தரும்படி வேண்டுகின்றார். சுவரில்லாமல் சித்திரம் வரைய முடியாதல்லவா? உடல் ஆரோக்கியமே அகமென்ற மன அமைதிக்கு, மகிழ்ச்சிக்கு அடிப்படை. எனவே தான் மன மகிழ்ச்சியுடன் அமைதியுடன் கூடிய திருப்தி தரும் சுகத்தை வேண்டுகின்றார். இவ்விரண்டு நலங்களோடு அடுத்து மெய்யறிவினை அருளும்படி வேண்டுகின்றார். ஏனெனில் மெய்யறிவின்றி இறையனுபவத்தில் ஈடுபட இயலாதென்பதை உணர்ந்தவர் புலவர் நாயகம். இப்படியாக அகமும், சுகமும், அறிவு நலமும் பொருந்திய மேலாந்தன்மைகளைப் படைப்பவரும், படிப்பவரும் பெற்று உய்யப் பணிகின்றார். நூல் செய்வோர் தம் நூலை நுகர்வோர்க்குக் கிட்டுகின்ற பயனை முன்னுரைப்பது நல்ல பண்பு. செஞ்சொற் கவியின்பம் தரும் அழகினை இக்காப்புச் செய்யுளில் காண முடிகின்றது. அழகிய பல உவமைகளைப் பயன்படுத்தும் ஆற்றலுடையவர் புலவர் என்பது புலப்படுகின்றது. புலவரின் திருமறைத் தெளிவிற்கும் இஸ்லாமிய அறிவிற்கும் ஒரு சிறந்த சான்றாகக் காப்புச் செய்யுள் அமைந்து சிறந்துள்ளது.

# 4. நலம் தரும் நாகை

விழித்திருந்தும், தனித்திருந்தும், பசித்திருந்தும் ஏக இறைவனை வழிப்பட்ட இறைநேசர்கள், வரலாறு படைப்பவர்கள். 'என் நேசர்கள் என் பரிவட்டத்திற்குள் இருக்கிறார்கள். அவர்களை நானே அறிவேன்' என ஹதீஸ்குத்சி* குறிப்பிடுகின்றது. இறைவன் இறைநேசர்களை இனம் கண்டு அவர்கள் அமர்ந்திருந்த பதியையும் பெருமிதத்திற்காளாக்குகின்றான்.

வடநாட்டில் அயோத்தியிலுள்ள அலஹாபாத் என்னும் பிரயாகை நகரத்தின் பக்கத்திலுள்ள, மாணிக்காப்பூரில் சையிது அப்துல்காதிறு ஷாகுல் ஹமீது நாயகம் பிறந்தார்கள்.[1] வடநாட்டில் பிறந்து, சற்குரு தேடித் தவமிருந்து குவாலியரில் முஹம்மது கவுது எனும் ஞான தேசிகரை நாடி அதன்பின் காரண நாமமாம் ஷாகுல் ஹமீது எனப் பெயர் பெற்று, பன்னாட்டுச் செலவு இயற்றி இறுதியில் தென்னாகைக்கு வந்து அவ்விடத்திலேயே தன் இருப்பினை உறுதியாக்கிக் கொண்டார்கள். இடையில் பர்மா சென்று அங்குள்ள மக்களின் அன்புக்கு ஆட்பட்டு மோல்மேனில் சமாதியாகி அன்றே நாகூர் வந்தடைந்தார் என்பர். அவ்வளவிற்கு நாகூர் இறைநேசருக்கு உவப்பினைத் தந்தது எனலாம். இவ்விறைநேசர் தம் வாழ்நாளில் பதினெட்டு ஆண்டுகள் பெற்றோருடனும், பத்தாண்டுகள் ஞானகுரு தேடலிலும், பன்னிரண்டு ஆண்டுகள்

---

* நபி (சல்) அல்லாஹுவிடமிருந்து பெற்று அறிவித்த செய்திகள்.

1. குலாம் காதிறு நாவலர், **கன்ஜுல் கராமத்து** (சென்னை, 1957), பக். 4.

பல்வேறு நாடுகளில் சமயப் பிரச்சாரங்களிலும் கழித்தார்கள். இருபத்தெட்டு ஆண்டுகள் நாகூரில் வாழ்ந்தார்கள்.[2]

உலகின் பல பகுதிகளுக்கும் போக்குவரவு வசதியற்ற அக் காலத்தில் இஸ்லாமியச் சுடரைத் தூண்டிய ஆண்டகை நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள நாகூரில் பலவகை மரங்கள் உள்ளன. அவற்றுள் புன்னை மரமே குறிப்பிடத்தக்கது. புன்னைக்கு நாகம் என்ற பெயரும் உண்டு. நாகமரம் சிறந்து விளங்கியதால் நாகலூர் எனப் பெயர் பெற்று பின்னர் நாகூர் என மருவியது என்பார் குலாம் காதிறு நாவலர்.[3]

அப்துல் காதிராளும் நாகையூர் என்று பலரும் பாராட்டி அருளாட்சி நிகழ்த்தும் இவ்விடம், "சமரசம் உலாவும் இடம் இது. சமய,கலாசாரங்களின் சங்கமக் களமிது"[4] எனப் போற்றப்பெறும்.

இலக்கியச் சுவை செறிந்த நாகையந்தாதியில் இத்திருத்தலம் தென்னாகை (39)* நன்னாகை (88) பொழினாகை (47) கதிநாகை (91) வண்ணாகை (95) மாநாகை (98) என்றெல்லாம் பாராட்டப் பெறும். "பாங்கு சத்தமும், மணி ஓசையும், ஷெனாயும், நாதசுர மும் ஒருங்கே ஒலிக்கும் ஒரு ஸ்தலம் இந்தியாவில் வேறெங்காவது இருக்க முடியுமா?"[5] கீழத்தஞ்சையில் வங்கக் கடல் அலைக்கரங் களால் நீராட்டப்படும் சோலைகள் சூழ்ந்த நாகூரே அச்சிறப்புக் குரிய ஊர். புலவர் நாயகம் நாகூரை 'சாதிப்பபடித் தண்டலைத் திருநாகை', (31) 'லக்கப் பலத் தண் பொழி நாகை', (42) 'கான் கெழுதீங் களிப்புண் டரீக மலர்வன நாகை" (85) 'வண்பொழிற்பூ மகரந்த வாசங்கமழ் நாகை', (93) 'கடிகமழ் பூங்கா திருவே தவ நாகை', (100) என பலவாறு அடை கொடுத்துப் பாராட்டுவர்.

ஒவ்வோர் ஆண்டும் நாகையில் நடைபெறும் கந்தூரித் திருவிழாவில் பங்கு பெற பல நாடுகளிலிருந்து முஸ்லீம் மக்கள் நாகூருக்கு வருகை தருகின்றனர். அவ்விழாவில் பங்கேற்றால் தம்

---

2. S. A. Shaik Hasan Sahib Qadhine, **The Divine Light of Nagore** (Nagore, 1985), p. 43.
3. ம. மு. உவைஸ், மு. நூ. பக். 257.
4. ஜே. எம். சாலி, **நாகூர் நாயகம் வரலாறு**, (சென்னை, 1985), பக். 2.
* அடைப்புக்குறியில் நாகையந்தாதியின் பாடல் எண் குறிக்கப்பெறும்.
5. ஜே. எம். சாலி, மு. நூ. பக். 4.

எண்ணங்கள் நிறைவேறும் என்பது அவர்களின் நம்பிக்கை. நேர்த்திக்கடன் வைத்து அதனை நிறைவேற்றவும் நாகூர் செல்வர்.[6]

நிமிர்ந்தும், நெடிதுயர்ந்தும் தோற்றமுறும் வெண்ணிற மினாராக்களும் இஸ்லாமியக்கலை நுணுக்கச் சிறப்பும், தஞ்சை நாயக்க மன்னர்களின் கலைச் செல்வாக்கும் சேர்ந்து இன்றைய நாகூரைப் பொலிய வைக்கின்றன. இப்பதி, தஞ்சை மன்னன் அச்சுதப்ப நாயக்கரால் ஆண்டகைக்கு அளிக்கப்பட்டது. தஞ்சை மன்னர் அச்சுதப்ப நாயக்கர் தீராத நோயினால் துன்பப்பட்டார். அவ் வமயம் அவ்வூருக்கு வருகை புரிந்த ஆண்டகையிடம், மன்னரின் உடல் நலிவு போக்க அமைச்சர்கள் முறையிட்டனர். ஆண்டகை இறையருளினால் அரசனின் பிணி போக்கினார். மன்னன் மகிழ்ந் தளித்த அந்தப்பதியில்தான் நாகூர் தர்கா நின்றிலங்குகிறது இதனைத் ''தந்திர வாளணி தஞ்சையர்கோன் தரு நாகை'' (33) எனப் புலவர் நாயகம் குறிப்பிடுவார்.

இம்மாதவர் தங்கி அணி செய்ததாலேயே நாகைப்பதி ''கலாமதி கார் அம்பொழில் அணி நாகைக்கதி'' (74), ''திசை செல் புகழ் முதிரும் உகமின் அணி நாகை'' (53), ''மந்திரங் கானின்ற நாகை'' (38) எனப் புகழப்பெறும் புண்ணிய நிலைக்காளானது.

இப்புண்ணியப்பதி, முஸ்லீம்களுக்குப் புனிதமாகவுள்ள நான்கினுள் நான்காவது எனக் கருதப்படுகிறது. பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் கல்லறை அமைந்துள்ள மதினாவையும் அண்ணல் (சல்) அவர்கள் பிறந்த மக்காவையும் முகியித்தீன் ஆண்டவர் அடங்கியிருக்கும் பகுதாது நகரையும் தவிர்த்து மேன்மையானது நாகூர் எனக் குலாம் காதிறு நாவலர்[7] குறிப்பிட்டுப் பாராட்டியுள்ளார்.

சேகுனாப் புலவர், நாகூர் ஆண்டகை இறையருளால் செய்த அற்புதங்களை, வாழ்ந்த உயர் வாழ்வை, பாடற் பொருளாகக் கொண்டு செய்த முதற்காப்பியம் 'திருக்காரணப் புராணம்'. அந்தப் புராணத்தின் கடவுள் வாழ்த்துப் பாடலில் 'புவிமுக்தி நாகை', 'நவமுறு நாகை' எனப் பாராட்டிக் குறிக்கின்றார்.

---

6. எம்.எம். உவைஸ், **இஸ்லாமும் இன்பத்தமிழும்** (சென்னை 1976), பக். 33.
7. ம. மு. உவைஸ், மு. நூ. பக். 258-259.

நானிலமே போற்றும் நாகைப் பகுதி வாய்த்த இடம் வளவயல் சூழ் தஞ்சைப் பகுதியாக இருக்கவே, யாங்கணும் பொழிலும், கயமும், காக்களும், கவின் மருதக் காட்சிகளும் சூழப் பெற்றிருந்தமையை அந்தாதி ஆங்காங்கே காட்டுகின்றது. கவிஞரின் கற்பனை இதனூடே பொலிகின்றது.

## பொழிலழகு

ஊரின் இயற்கை அழகு, பொழிலாலேயே பெருகுவதை, 'பழங்களையுடைய பொழிலிடங்களிலுள்ள பெரும்புனலடங்களும் தேனாகப் பாயும் செல்வ நாகூர்', (67) 'போராடும் அம்பும், அகங்கையும் போன்ற கண்களையுடைய மடவாரது முகங்களை நிகர்க்கும் வெள்ளைச் சங்கினது முத்துக்களையுடைய சிவந்த தாமரை மலர்கள் பூத்த குளமும், குங்குமம், அகில், வண்டு மொய்க்குஞ் சந்தனமரங்களுடைய அழகிய சோலையும் உள்ள நாகூர்', (90) 'கான்மலர்களும் வாகை மரத்தினது இலைகளும் சோதியாகிய கிரணத்தைத் தாவும் பொழிலுடை நாகூர்', (101) 'வெளியேறிய மலர்கள் விரிய மேகக்கூட்டத்தில் அளாவுஞ் சோலை யுடைய நாகூர்' (75) 'மதங்களையிறைக்கும் வேழங்களைக் கொடையாகக் கொடுக்கும் நிதியுடைச் செல்வரும், மணங்கமழ் வனங்களும், நிறைந்த கருப்பந்தோப்பும் பெருமையுள்ள நாடு முடைய நாகூர்', (84) 'நல்ல குங்குமமும், தக்கோலமும் பல மணப் பண்டங்களும் (தகரம்) மணங்கமழ் பூம்பொழிலுமுடை நாகை', (82), 'தேனூறிய பூக்களிடத்துத் தேனீக்கள் ஒலிக்கும் பொலிவும், தடம்பரப்பும் உள்ள காவு சூழ்ந்த நாகை' (99) என நாகை முழுக்கச் சோலை சூழ்ந்த வளங்கள்; கான் மலர்கள் பெருகியமை யும், அதனால் கடிமணம் கமழ்ந்து சிறந்ததையும், ஊரே இதனால் ஒளிமயம் சூழ்ந்து செல்வ நாகூராய்ச் செம்மாந்து, மருத மாண்பில் செழித்ததையும் கூறுவார். அவரின் பிறிதொரு காப்பியமான 'குத்புநாயக'த்தின் கடவுள் வாழ்த்திலும் 'மாரியிற் செழித்த வேலி மருதஞ்சூழ் நாகை' எனக் குறிப்பிடுகின்றார்.

## வயல்வளம்

வயல்வளம் சிறந்த நாகைப் பதியைப் புலவர் நாயகம், வளை யும் கங்கணமும் அணியும் முன்கையினையுடைய மின்னன்னார் குளிக்குங் குளிர்ந்த புனலாற் சரிந்த வரம்பினது பக்கத்தழகுடைய வெள்ளைச் சங்கின் முத்துக்களும் வெண்டாமரையும், வானத்தின் தாரகைகளுக்குங் குளிர்ந்த சந்திரனுக்கும் நிகரான மருதமுடை

நாகூர் (23) பூங்காவிலொழுகும் தேன்கள் வாய்க்காலிடத்துந் தாமரைத் தடாகத்தும் நிறையும் வயல் சூழ் நாகை (77) என்று முத்துக்களும், தாமரைகளும், தேன்வெள்ளமும் பெருகிக் கிடக்கும் மருதத் தன் பணைகளைக் குறித்துக் கூறுவார்.

அவ்வயலிடத்து முத்துப் பிறக்கும் பீடுடை நெல்லும், கரும்பும் செழித்தமையைத் தம் இலக்கிய வழி விளக்குகின்றார். 'மேகம் முற்பட வரிசிக்கும் அம்பணை நாகூர்' (72) எனக்கூறி ஆங்கு வாழும் உழத்தியர் கரும்பின் முத்தும், தாமரையில் பிறந்த முத்தும் எளியவர்கள் கைநிறையக் கொடுக்கும் பெருமித வாழ்வை விளக்குவார். ஏரடித்த கரும்பினது கணுக்களில் தெறித்த முத்துக் கள் இரவுக் காலத்தில் படர்ந்து பரவிய இருளை ஒதுக்குவதாகிய மருத நிலத்தையுடைய நாகூர் (3) தடாகத்தில் ஒளியுடைய மதியினால் அலை மேலன்னஞ் சேவலோடு ஊடா நிற்க அழகிய குளிர்ந்த வயலானது மகிமை உள்ள நென்முத்தும் அன்புடைய பொன்னையும் அடவாதப் பருவங்கள் தோறும் கொடுக்கும் நாகூர் (89) — இவற்றின் வழி நாகைப்பதி வயல்களில் நெல்லும் கரும்பும் தாமரையும் முத்தீனும் பெருமை உடைத்து என்பது போதரும்.

## உயிரின இயக்கம்

இனி அவ்வயல்களிடத்தும், சோலையிடத்தும் வண்டுகளும், நாரைகளும் இன்ப மிகுதியால் இயற்றும் பல்லோசைகள் குறித்தும் எருமைகளின் இயக்கம் குறித்தும் நயம்பட விளக்கப்படுகின்றது. 'வண்டினங்கள் அன்பாகப் படர்ந்து இசையாகிய சுவையைக் கொடுக்கும் இனிய பொழிலுடை நாகூர்' (48) 'இளமையும் அழகு முடைய கரிய வண்டுகள் மலர்கள் தோறும் துளிக்கும் நறவின் துவலையாகிய மழையுடை நந்தா வனங்கள் சூழ்நாகை' (50) 'மஞ்ஞையினங்கள் நாரைகளின் மேல் வலிக்கும் ஓசையானது புதுமையைத் தாரா நின்ற பொழிலுடை நாகை' (40) எனப் பறவைகளின், வண்டினங்களின் ஆரவாரம் செறிந்த வயலிடங் களைக் கூறுவார்.

அடுத்து தடாகத்திலும், வயலிலும் எருமைகள் துளைந்தாடு தலைக் கூற வருகின்றார் புலவர். எருமைகளின் செயல்களைக் கூற சில ஏதுக்களுண்டு. வளமைக்கும், பெருந்தீனி உண்ணலுக்கும் பெயர் போனது எருமை. அப்படிப்பட்ட எருமைகளே ஆண்டுத்

தம் பசியும் விடாயும் தீர்ந்து, உண்ணுதலிலும் மனமின்றிக் கறித்தவாறு சோம்பி அசைதலைக் கூறுமுகத்தான் நாகூரின் பெருஞ் சீர்த்தியைப் புனைகின்றார். இதனைக் கம்பர், ''நீரிடை உறங்கும் சங்கம் நிழலிடை உறங்கும் மேதி''[8] என்று கூறுவதன் வாயிலாக அஃறிணை உயிர்களே நிறைவெய்தி, உண்ணுதலில் ஈடுபாடின்றி உறங்கும் வளமையைக் கூறுவார். கம்பர் போல, புலவர் நாயகம் எருதுகளின் இயக்கங்களையும், அதன் தொழிலை யும் குறிப்பிடுவார்.

மேதிகள் தடாகத்தினது தாமரை மலர்களைக் குதட்டும் கடைவாய்தோறும் தேன்வெள்ளம் சிந்தும் நாகூர் (26); தடாகத்தை யுழக்கும் எருமைகளின் மடியிலொழுகும் பாலானது வாய்க்கால் வழியோடி ஈரப்படுத்திய வயலுடைய நாகூர் (45); செறிவாகிய கரும்பின் சோலையுள்ளே எருதினம் மறைந்து அவிடத்தியலா நிற்கும் நாகூர் (52); கடற்போலாகிய பெரிய குளிர்ந்த தடாகத் திடத்து ஆம்பல், செந்தாமரை இவைகளின் பூக்களைக் கறித்துத் தேனினைச் சிந்தும் பெண்ணெருமையானது, முத்துக்களின் ஒளி யுடைய ச(ல)ஞ்சலமென்னுஞ் சங்கின் குரவையால் உள்ளந் திகைத்துத் துவன்று ஆச்சா மரத்து நீழலின் மணலிற்றுயிலா நிற்கும் நல்ல நாகூர் (55); இரைத்து நிற்கும் பெண்ணெருமைகளின் முலை முறுகியொழுகு மிகுந்த வின்பமுள்ள பாலும், அரிய தேன் களும், கனிகளின் சாறும், செறியுமிடத்தையுடைய னாரிய கிரணந் தன்னிடத்து அணுகாத பொழில் சூழ் நாகூர் (70) எனவரும் பாடற் குறிப்புகளில் மருத நிலத்துக் கருப் பொருள்களுள் சிறந்ததாகிய வளம்படு பயிர்மேயும் மோட்டெருமைகளின் உண்ணுந் தொழிலும், உண்ணவும் அவசமுற்று உறங்குந் தொழி லும் கூறுவதன் வாயிலாக நீர்வளம் செறிந்த மருதத் தண்பணை களைக் காட்டுகின்றார் புலவர் நாயகம்.

## பொய்கை எழில்

மிக்கு நீர்ப்பெருகும் தடாகங்களை, நீர் வாவியிடத்துக் குளிக்கும் மடவாரினது யானையாகிய முலைகளைத் தாமரையின் அரும்புகளென்று கருதிய குளிர்ந்த பவளக்காலின் அன்னங்கள் ஒலித்தலைச் செய்யும் தடாகஞ் சூழ் திருநாகை (27); தரங்கத்தின்

8. கம்ப. நாட்டுப் படலம் 6

முத்தார்ந்த தடாகத்தையுடைய நாகூர் (28); பங்கயத்துப் பட்டத்தின் கண் உண்டாகிய வலம்புரிச் சங்குகள் மலருள்ளே ஊர்ந்து திரியும் செல்வ நாகூர் (44) எனப்பலவாறு புகழ்ந்துரைக்கின்றார்.

## மனை மாண்பு

இம்மேதகு வளம் ஏந்தப் பெற்றதால் அந்நாடும் வீடும் செல்வம் மேலோங்கிச் சிறந்தமையைப் பல பாடல் குறிப்புகள் உரைத்து நிற்கின்றன.

அகிலது புகையும் கட்டுண்ணும் கலியாணம் நிறைந்த மனைகளையுடைய நாகூர் (86); சந்திரனைத்தொட்டு வெள்ளொளியைக் குடித்து வட்டமாகிய மதில் சூழ்ந்த நாகூர் (97); மனைகளின் முன்றில்தோறும் கடலிடத்து வலம்புரிச் சங்கங்கள் ஊர்ந்து வந்து முத்துக்களைக் கொடுக்கும் நாகூர் (32); கதவிடத்தும் அதன் நிலையிடத்தும் தங்கம்தான் ஒளிரும் நாகூர் (87); தங்கத்தின் அழுத்திய மணிக்ளும், முத்துக்களும், பொருந்து மகரந்தங்களும், நீலங்களும் ஒளிர்ந்து ஒளியியற்றும் சாளரவாயிலின் மாளிகைகளது பெருமை, மலைகளைப் பொருவும் நாகூர் (71); பவன நாகை (96) போன்ற குறிப்புகள் நாகையின் செல்வச் சிறப்பைக் குறிக்கும்.

நாகூர்ப்பதியில் எப்பொழுதும் செல்வம் கொட்டிக் கிடக்கும் என்பதை, நிதிமகளும் கலைமகளும் பொருந்தி வாழும் பொழில் சூழ்ந்த நாகை (58) என்பார். அதற்கிடமான நாகூரின் தனித் தன்மையைக் கூறுங்கால், கடலாடை உடுத்த பூமியாகிய கொப்பு இலங்கும் மாதின், நெற்றிச் சுட்டி போன்ற நாகூர் (29) என்றும் குறிப்பிடுகின்றார்.

வடநாட்டுக் கோசலத்தின் குன்றா எழில் வளத்தைக் கூற வந்த கம்பர் நாட்டுப் படலத்திலும், நகரப்படலத்திலும் அந் நாட்டில் உடையாருமில்லை இல்லாருமில்லை என்றும், தானம் தவம் செய்கின்ற தாயகம் என்றும் காட்டுகின்றார். சிலம்பிசைத்த இளங்கோவும் நாட்டு வளத்துக்கெனத் தனிக்காதை ஒன்றைப் படைத்துள்ளார். திருத்தக்கதேவரும் தவம் செய்வார்க்கும் அஃதிடம் நற்றவம் செய்வார்க்கும் அஃதிடம் எனக் கூறிப் போந்தார். அத்துணை வளச் சிறப்பும் புனிதப் பெருமையும், அறத் தகைமையும் செறிந்த பதியாகவே புலவர் நாயகமும் இந்நானிலம் போற்றும் நாகையைப் படைத்துள்ளார் எனின் மிகையாகாது.

# 5. ஆண்டகை ஆற்றிய அற்புதங்கள்

புலவர் நாயகம் தம் 'சொர்க்க நீதி' எனும் படைப்பில்,

''அரியதொரு வல்லவனை வணங்க வேண்டும்
அவனருளும் பணிவிடைகளெடுக்க வேண்டும்
பெருமைதரு மிறசூலைப் போற்ற வேண்டும்
பெருகு நபிமார் கடம்மைத் துதிக்க வேண்டும்
தெரியு மறையோர்கள் சொல்லை மதிக்க வேண்டும்
சிறப்புடையார் திருப்பாதம் புகழ வேண்டும்''[1]

என்ற பாடலில் இறைவனைப் பணிந்து அவனின் திருத்தூதர்களைப் போற்றுவதுடன் ஆங்காங்கே இறைஞானத்தை ஏந்திவரும் இருளிரிய இமைக்கும் சுடர்மணிகளாம் மறையோர்களாகிய இறைநேசச் செல்வர்களின் சொல்லை மதித்து அவர்தம் திருப்பாதம் போற்ற வேண்டும் எனக் குறிப்பர்.

பல காப்பியங்களின் தோற்றத்திற்குக் காரணமான நாகூரில் குடிகொண்ட தவராஜ மேருவாம் ஷாகுல் ஹமீது ஆண்டகையின் பெருமை மிகு புகழை அந்தாதி அமைப்பில் பாடுகின்றார் புலவர் நாயகம். இறை அருட்பேற்றுடன் அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டியவர் ஷாகுல் ஹமீது நாயகம் அவர்கள். அந்த அற்புதங்களை இறைவனே இறைநேசச் செல்வர்களை மாண்புறச் செய்வதற்காக நிகழ்த்துகின்றான். நாகையந்தாதி என்ற சிற்றிலக்கியத்தின் வழி நாகூர் ஆண்டகையின் அற்புதங்களில் (கராமாத்துகள்) சிலவற்றினைப் புலவர் காட்டுகின்றார்.

---

1. மு. முஹம்மது ஹசன், சொர்க்க நீதிவிளக்கம் (காயல் பட்டணம், 1978), பக். 26.

அல்லாஹுவுக்கும், அவர் தூதர் நபி(சல்) அவர்களுக்கும் தொண்டராய் ஔலியா என்றும், குத்பு என்றும், கௌது என்றும் பெருமையோடு நினைவு கூரப்பெறும், அடியவர்கள் இஸ்லாத்தின் கோளான ஈடேற்றம் காண ஆவலுறும் கான் முளை போன்றோர். அவர்கள் இருவிதமாம் ஆற்றல் கைவரப் பெற்றோர் என்ற நம்பிக்கை உண்டு. வாழுங்காலத்தே, மரணத்துக்குப்பின் நிகழும் பெருவாழ்வின் கூறுகள் குறித்தும் இறையுலக இருப்பு பற்றிய கூற்றுகள் குறித்தும் இறையாற்றலால் உணரும் வல்லமை உடையராயிருந்தனர். இரண்டாவதாக, இறப்பு நிலையை அடைந்த பின்பும் இவ்வுலக வாழ்வின் கூறுகளை, செய்திகளைப் பார்க்கவும், கேட்கவும் ஆற்றலுடையோராயினர். எனவேதாம், ஏக இறைவனை வழிபடும் இஸ்லாமியர் தமக்கானவற்றை— வேண்டியவற்றை— இறைவனிடம் தமக்காக இரக்குமாறு, இறைவனின் அணுக்கமான அடியவர்பால் விண்ணப்பித்தலின் மூலம், அவர்தம் உதவியைத் தேடுவர். அல்லாஹ் தன் அணுக்க அடியவர் வேண்டி இரப்பின் உடன்நிறைவேற்றி அருள்வான் என்ற நம்பிக்கையே இதற்குக் காரணம். இந்த அடிப்படையில்தான் இறைநேசர்கள் இடம்பெறும் இலக்கியங்கள் பிறக்கலாயின. அவ்வகை இலக்கியங்களில் பாட்டுடைத் தலைவரின் புகழை மிக உயர்த்திப் பாடும் பாங்கு ஏற்பட்டது.

அல்லாஹ் தன் கலியாண குணங்களின் ஒளியிலிருந்து (நூரே-ஸிபாத்து) இறைநேசர்களான ஒலியுல்லாக்களைப் படைத்தான். ஒலியுல்லாக்கள், ''அல்லாஹுத்தாலாவின் அஸ்மாஸிபாத்துகள்* வெளியாகும் தானம்''[2] என்று கூறப்பெறுவர். இறைநேசர்கள் தாமே ஆற்றாது இறையருளால் மட்டுமே அற்புதங்களை நிகழ்த்தினர். ஏனெனில், 'இறையருளாலன்றி இறையடியார் யாருக்கும் எந்த ஆற்றலுமில்லை. இறைவன் ஆற்றலில் இறையடியார் யாருக்கும் எவ்விதப் பங்குமில்லை என்ற உண்மை இஸ்லாத்தில் எள்ளளவும் ஐயமின்றித் தெளிவுபடுத்தப்பட்டிருக்கின்றது.''[3]

---

* அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களின் கலியாண குணங்கள்.

2. குலாம் காதிறு நாவலர், மு. நூ. பக். 3
3. மு. அப்துல்கறீம், **சீறாப்புராணத் திறனாய்வு** (அதிராம் பட்டணம், 1980), பக். 113

பீடுடைய இறைநேசர் வரிசையில் தோன்றியவரே ஷாகுல் ஹமீது ஆண்டகை. நாகூர்ப் பள்ளியில் ஒரு கல்லறையில் நல்ல டக்கம் செய்யப்பட்டுள்ளார். அவர்கள் அடங்கியுள்ள நாகூர் மேன் மைக்குரிய தர்கா என்றும், மகத்துவமுடையது என்றும், பிணி போக்கும் பெருமையுடைத் தலமென்றும், உலகோர்க்குக் கருணை சுரக்கும் கடல் என்றும் பாராட்டப்படுகின்றது.

நாகூராண்டகை கருவில் தோன்றி புவி வாழ்வை முடிக்கும் வரை அற்புதங்கள் பல செய்துள்ளார்கள். சையிதுமார்களுள் ஒருவராகிய சையித் குத்தூசு என்பார்க்கும் குலத்திலும் நலத் திலும் சிறந்த சையிதத்து பாத்திமா என்னும் பெருமாட்டிக்கும் அல்லாஹ் அளித்த நற்பேறே ஷாகுல் ஹமீகு ஆண்டகை. தாயார் சீர்மிகு சையிதத்து பாத்திமா அவர்களின் கருவில்—ஒன்பதாம்— மாதத்தில்—வாழுங்காலத்தில் மாணிக்காபூரைக் கொள்ளை யிட்டுக் கலகம் நிகழ்த்த வந்தோரை எதிர் கொள்ளும் ஆற்றல் எவருக்குமில்லாது போகவே ஆண்டகையின் பெற்றோர் இறை வனைத் தொழுது இரக்க, நிறை கர்ப்பத்தில் வாழ்ந்த ஆண்டகை இறைவனின் ஆணைப்படி யாருமறியாமல் வெளிப்பட்டு இளவய தினராய்ப் போர்க்கோலம் பூண்டு அக்கள்ளரைத் தெருட்டி விரட்டியோடச் செய்தார். இதனை,

''வை அம்பு அடரும் திருக்க அன்னை கெற்பத்துள் வாழ்
பொழுது ஊர்
வையம் புடரும் திருக்கரை வென்றவ'' (94)

எனப் புலவர் குறிப்பர். கூரிய அம்பனைய நெருங்கிய கண்ணை யுடைய அன்னையின் கர்ப்பத்துள் வாழும் பொழுதில் ஊரும் சிவிகையொடு படர்ந்த பகைவரை வென்றவர் என்பதே அப்பாடல் தரும் பொருள்.

பிறப்புக்கு முன்பே அற்புதங்களை நிகழ்த்திய ஷாகுல்ஹமீது நாயகம் பிறப்புக்குப் பின்பு செய்துள்ளதைப் புலவர் பல பாடல் களில் குறிப்பிட்டுள்ளார். ஆண்டகை ஒரு சற்குருவை நாடும் நாட்டத்தினராய், அருட்சீடர் ஆதற்குரிய மறைமொழியைத் தேர்ந்து உணர்தற்குக் குவாலியர் செல்லும் வழியில் காடு ஒன்று இடைப்பட்டது. ஆங்கு வாழும் புலிகள் திரண்டு நாகூராண்டகை முன்பு பணிந்து நிற்க, பெரும் வேங்கை முன்வந்து வழிகாட்ட விழைய, ஆண்டகை அன்போடு அவ்விலங்குகளைத் திருப்பி அனுப்

பியதை, "தீவி நையா வழிகாட்டச் சென்றோர்" (54) என்று புலவர் குறிக்கின்றார். மேலும் "தீவுநையா வகை காத்தவ" என்று அப்பாடலிலேயே விளிப்பதன் மூலம் முகல்லதீவின் மக்களுக் குத் தீங்கு வராவண்ணம் அருள் செய்ததையும் வெளிப்படுத்து கின்றார்.

நாகையின் வள்ளல், கள்வர்களையும் செவ்வியராக்கும் வல்லமை வாய்க்கப் பெற்றிருந்தார். குவாலியர் செல்லும் வழியில் கள்வர் சிலர் ஆண்டகையைத் துன்புறுத்தக் கருதி, வாளோச்ச, அவ்வாட்கள் கள்வர் மேனியில் பட்டு உடல்கள் சிதைந்து விழுந்தன. ஆண்டகையின் ஆற்றலை உணர்ந்து கள்வர் மன்னிக் கும்படி வேண்ட இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் சால் பினரான ஆண்டகை இறையருள் கொண்டு அவர்களை மீண்டும் எழுப்பினர். அக்கள்வர் மனம் திருந்தி அஞ்ஞான இருளை விரட்டி, மெய்ஞ்ஞானச் சுடரை மனத்தில் கொண்டு ஷாகுல் ஹமீது நாயகத்தின் திருக்கைப்பற்றி இஸ்லாத்தில் இணைந்தனர். கள்வர் மனம் திருந்திய அந்தச் செய்தியை, "செப்பங் களவரும் பாவச் செய் நாகையர்" (59) என்று குறித்துள்ளார்.

நாகூர் ஆண்டகை ஷாகுல் ஹமீதெனும் காரணப் பெயர் பெற்ற தன்மையைக் கூறுகின்றார் புலவர். சற்குருவைத் தேடிப் புறப்பட்ட ஆண்டகை குவாலியரின் வெளியிடத்தில், பாழடைந்த ஒரு பள்ளியின் கண் இறைச் சிந்தனையில் ஈடுபட்டிருந்தார். ஊன் உண்ணுதலும், உறங்குதலும், தவிர்த்தவர்களாக இருந்த காலை அசரீரி ஒன்று 'ஷாகுல் ஹமீது' என விளித்து காரண நாமம் சூட்டப்பட்டதனைப் புலவர்,

"கமழ் கழல் புகல் வித்தவாரணம் மாநாகைச்
சாகுல் கமீதொலியே" (98)

எனக் குறிப்பர். அதன்பின் ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் ஆண்டகையைச் சற்குருவாகிய முகம்மது கவுது என்பார் முஷா ஹதா எனப்படும் தனியறை வழிபாட்டில் வைத்துப் பழக்கு, அடிக்கடி ஆண்டவன் அருளால் இறைக் காட்சிகள் கண்டார். பல கால் இறைக்காட்சி கண்டு வழுத்தினார். இதனைப்

"பலகால் இறையைப் பார்த்திட்ட மாதவ நாகை மன்னா" (4) என்ற பாடல் வரி மூலம் உணரலாம்.

பின் ஞானாசிரியர்பால் தமக்கென நானூற்று நான்கு தபோதனரைச் சீடராகக் கொடுப்பக் கொண்டு, மாணிக்கப்பூர் அடைந்து, தாய்தந்தையரைக் கண்டு பின் பல்லூர்ச் செலவு புரிந்தார்.

லாகூர்ப்பதியில் ஷைகு நூறுத்தீன் என்னும் ஆளுநருக்குற்ற மகவிலாக் குறையைக் கேள்வியுற்று, தம் காரணப் புதல்வர் உருவாகும் வழியுமுணர்கின்றார். தாம்பூலம் சிறிதெடுத்து, சிறப்பானத் தம் திருவாயிலிட்டுச் சற்றுநேரம் மென்றபின் அவர்பால் அளித்துத் தின்னும்படிப் பணிக்கவே, மகப்பேறும் வாய்த்ததென்பார். இதனைப் பல்லாலாகிய தம்பலம் முன்னம் தந்தது போல இன்னமும் ஈந்தருள்க எனும் பொருளிலே, "நும்பல் தாம்பலம் இன்னுந் தந்தருள்வீர்" (6) என்றுரைப்பார். அதுபோல, நாகூர் நாயகரின் வாயமுதம் கிடைத்தால் வண்ண வண்ண அரும் பண்டமும், பொன்னின் செல்வமும், பூமியின் செல்வமும் கிடைக்க ஐயமில்லை என்ற பொருளில்,

"வண்டு ஆரம் மரத்த அம் பொழில் நாகையர் வாயமுதால்
வண் தாரம் அரத்தம் அம்புவிச் செல்வமும் வாய்ப்பதுவே"
(90)

என மற்றொரு பாடலிலும் கூறுவர்.

மக்கா யாத்திரை மேற்கொண்ட காலை கன்ஜுப்பர் மாகாணமடைந்த போது, அந்நகரதிபதி நலியுங் குட்டத்துடனும், கரு எய்தியும் மகப்பேறு எய்தாமல் பெருவருத்தத்துடன் நலியும் தன் மனைவியுடனும் ஆண்டகை பால் வந்து முறையிட, அவருடைய நோய் தீர்ந்து, அவருடைய மனைவியும் மகவீன்று மகிழ்ந்த செய்தியினை,

"கோக்குஞ் சரமணிப் பூண்டகையாட்குக் குழந்தையும் அக்
கோவுக்கும் சரம் அணி யாக்கையும் ஈந்து" (83)

என்ற பாடற் குறிப்பின் வழி உணர்த்துவார் புலவர்நாயகம்.

தார்த்தாரி தேசத்தைச் சார்ந்த மக்கள் ஒருகால் ஆண்டகையவர்களை அச்சுறுத்தி வெருட்ட, அவர்களின் மனத்தைத் திருத்துகின்றார். பின் அவர்கள் தம் மூதாதையரின் கருவூலத்தைப் பூதங்களின் பிடியினின்றும் மீட்டு ஒப்படைக்கின்றார். களவு செய்து காக்கப்பட்ட அந்தக் கிஸ்தியினை ஆண்டகையின் பால் ஒப்படைந்து அவர்நம் பாதந்தநைப் போற்றியதை,

''கிஸ்தியேந்தி அந்த இரா சித்தரும் பதம் போற்றச்
செய்தீர்'' (8)

என்ற பாடல் கூறும். செல்வத்தின் பயனே வயலில் விழும் மழை நீர் போல் பிறருக்கு வழங்கவும், தொல்லையின்றி வாழவும்தான் என்பதை உணர்த்துகின்றார். செல்வத்தின் நிலையாமையைக் கூறி மனத்தைத் தெளியவைக்கின்றார்.

பின்பொருமுறை குடகுநாட்டு மன்னனும், அவனுடைய குரு ஜாபாயோகி என்பானும் ஆண்டகை பால் பகை கொள்ள, அந்தக் குரு மடிந்தும் போகவே, ஆண்டகையை எங்ஙனமாயினும் வஞ்சித்துக் கொல்லக் கருதி நஞ்சு கலந்த உணவைப் படைக்குங் கால், இறைவனுக்காக அதனை அள்ளிப் புசித்து உண்ணவே, மன்னவனுக்கு அந்த நஞ்சேறி மாண்டு போகின்றான். 'செய்த தீவினை செய்தவர்க்கே எய்திடும்' என்ற உலக விதியின்படி நிகழ்ந்த இச்செயலை,

''.........மன்னன்
அகத்து அடைபட்ட நஞ்சு இட்டவர்க்கு ஆக்கினையால்'' (12)

என்று குறிப்பர்.

தேசிகன் என்ற பொல்லாக் குருவின்பாலும், அந்நாட்டு மன்னன் பாலும் ஒருமுறை கருத்து வேறுபாடு கொண்டபோது திரண்டு வந்த நாற்படையையும் எதிர்த்து உயர்ந்த தவச் சிறப்பு டையர் என்பதை,

''தந்தக் கரியர் அரியர் பொற்றேரினர் தம் படைகள்
தத்தமக்கு அரியர் அமர்புரிந்து ஆர்தவ நாகையர்'' (24)

என்ற பாடல்வழி உணர்த்துவார். முகல்ல தீவிலும் ஆண்டகை யோடு கருத்து வேறுபாடு கொண்ட மன்னன் அவர்களை அழிப்ப தற்காக, நஞ்சூட்டிய கனிகளைக் கொணர்ந்து விருந்தோம்ப, அவற்றை அருந்தி, யாதொரு சுவடுமின்றி இனிதாயிருந்த அற்புதத்தை,

''இரவி நாயகர் தண் கனி வைத்த கரந்த கரம் தகர
அயின்றதும்'' (25)

''கை அடையார் கரம் தண்ணமுது ஆக்கினீர்'' (101)

என்ற பாடல்கள் மூலம் மல்லல் கரமே மகிமையுடையது என விளக்குவார். எத்திசைச் செலினும் எதிர்ப்பட்ட பிணிகளை

இடர்களை விலக்கி இறையருளால் அற்புதங்கள் நிகழ்த்தியமையை இலக்கியம் காட்டும்.

இலங்கை செல்ல முற்பட்டக்கால், கடல் கடக்கக் கப்பலின்றி, அத்துறையருகு கிடந்த பாரிய கருங்கற் பாறையின் மீது தாம், தம் காரணப் புதல்வர், அருட்சீடர்கள் அனைவருமாய் அமர, அஃது இறையாற்றலால் மரக்கலம் போல் கடலையூடுருவி இலங்கை அடைந்தது. அனைவரும் ஆதம் மலையைத் தரிசித்தும் மீண் டனர். இதனை,

"பார்த்திட்ட மாயை யொழிந்தாரோடு பஃறிக்கிணை கற்
பார்த் திட்டமாக நடத்தி வித்தோய்" (4)

என்ற பாடலால் உணரலாம். சைவ சமயச் சான்றோராகிய அப்பர் பெருமான் கல்லைக் கட்டிக் கடலில் பாய்ச்சியபோது தெப்பமாய் மிதந்ததும், பகைவர் நஞ்சூட்டியபோதும் இறையரு ளால் இனிதிருந்ததாகக் கூறப்படுவதும் இவண் ஒப்புநோக்கத் தக்கன.

தச்சன் ஒருவன் குன்மம் பற்றித் தீராத் துன்பமடைந்து அலமர, கருணை நெஞ்சம் கொண்ட ஆண்டகை, ஆண்டவன்பால் பலமுறை யிரந்து பிணி களைய வேண்ட, அவனும் நலம் எய்தித் தன் பெரு நன்றியைப் புலப்படுத்தச் சந்தனக் குறையெடுத்து மிதி யடிகள் இயற்றி, குமிழ்மட்டும் பொருத்தாதிருந்தபோது, ஆண் டகை அவ்வூர் விட்டுப் புறப்படுகின்றார் என்பதறிந்து, ஓடோடி வந்து தன் கையுறையைக் கொடுக்க அவற்றை வாழ்நாளிறுதிவரை கொட்டையின்றி (குமிழின்றி) இனிதணிந்திருந்தார் என்ற அற்புதத்தை,

"அற்புதன் அன்று இட்ட கொட்டையில் பாதுகம்
அம்புயத்தான்
அற்புதம் நன்று இட்டமாகத் தொட்டீர்" (17)

என்ற பாடல் மூலம் விளக்குகின்றார்.

இவையன்றியும் நாகூர் நாயகம், தருவோடும் பாம்போடும் மேகத்தோடும் புட்களோடும் பேசவல்லவர் (32) என்பதனைப் பல சூழல்களில் அவர்களது வரலாற்றில் கூறப்படுகின்றது. நாகையில் ஒரு புளியமரம் தான் வித்தின்றி முளைத்து, பூ, காய், பழம் என்ற நிலை மட்டுமே பெற்று, அசுத்த இடங்களில் முளைவிடாதிருக்கக் கேட்டு, நாயகத்தின் அருளால் அவ்வித்தமையப் பெற்றதென்பார்.

பெண்கொலை புரிந்த ஒருவன்பால் பழி வாங்குவதற்காக நாக மொன்று அவன் நாசியிற் புகுந்து வதை செய்தபோது ஆண்டகை விடுவித்துக் கேட்கின்றார். அப்போது அவன் புரிந்த பாவத்தை நாகம் கூறியதாக ஓர் அற்புத நிகழ்ச்சியைக் கூறுவார். அதுபோல் பறவையினங்களும் தாங்கள் மக்களால் வேட்டையாடப்பட்டுக் குலமழியும் இடரிலிருந்து காக்கவேண்டும் என ஆண்டகையின் பால் மன்றாடி, அடைக்கலம் பெற்றதாகவும் ஒரு நிகழ்ச்சியுண்டு. மேகத்தோடும் பேசவல்லவர் என்றும் கூறுவதுண்டு. இந்நிகழ்ச்சி களால் நாயகம் தருவுடனும், பாம்புடனும், மேகத்துடனும், புட்களுடனும் பேசி அற்புதம் நிகழ்த்த வல்லவர் எனத் தெரிய வரும்.

இதுபோல் முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்ணும் நனி நாகரிகராய் இருந்தார்; செல்லுமிடமெல்லாம் திரண்டு வரும் சண்டகர், பாதகர், அந்தகர், அறிவந்தகர் போன் றோரின் குற்றங்கள் தீர்த்துக் குணங்களை வழங்கினார்; கலிறு நபியவர்களின் துணை கொண்டு ஆண்டவனின் சித்தத்தால் இலங் கையின் சித்திரகூடம் சென்று, ஆண்டு சிக்கந்தர் துல்களுனைன் இயற்றிய கூடம் நுழைந்து, இரத்தின பீடத்தில் தம் மூதாதை யரின் சந்தனக்கரக் குறிகளின் அருகே தம் கையையும் பதித்து அற் புதங்கள் செய்தமையை,

"தகர் அந்த கரந் தக ரவி நாகையர் தண் கனி வைத்
த கரந்த கரம் தகர அயின்றதும் சண்டகர் பா
தகர் அந்தகர் அந்தகர் அவம் நீப்பதும் சார் கலிர் சொல்
தகரம் தகர் அந்தம் கரம் என் துன்பத்தைத் தட்டுவதே" (25)

என்று பாடி, அத்திருக்கரம் கொண்டு தம் துயர் துடைக்க வேண்டு கின்றார். சித்திர கூடத்தில் சந்தனக் கைபதித்த காலையில், 'குத்பு' பட்டம் பெற்றதாகக் கூறுவார்கள். ஆண்டகை, 'குத்பு' எனும் பட்டம் பெற்ற அற்புதர் என்பதை,

"ஆரணந் திகழ் வாயர் குத்து பெனும் வண்பட்டமே" (43)
என்ற பாடல் வரி கூறும்.

'முதுபக்கு' எனக் கூறப்பெறும் நாகூரின் தங்குமிடத்தில் உறைந்த காலையிலும், ஞானாசிரியர் தேடி அலைந்த ஒருவரின் காய்ந்த பற்கொம்பைத் தளிர்க்க வைத்ததால், ஆண்டகையின் அருட்சீடரானமையை,

"தலக் கொப்பு அரும்பும் கனி குற்றி தந்ததும்
சார்ந்தவன் பார்த்
தலக்கு ஒப்பரும் புதை தன்னிற் புதுமை" (29)

என்ற பாடலில் குறிப்பர்.

முகல்லதீவிலுறைந்த போதும் ஒரு கன்னிப் பெண்ணைப் பற்றிய பேயின் தொல்லையை அழித்து, அதனைக் கடலில் ஆழ்த்தி அழித்து அருளுகின்றார் ஆண்டகை. பாரசீக நாட்டிலும் பிரபு ஒருவரின் பெண்ணைப் பிடித்த பேயை வதைத்து, அப்பேயினங் களை அடக்கி அருளினார். இவற்றை,

"இறைக் குங்குலிக விரல் பதுமக்கை இளம்பிடிதான்
இறைக்கும் உயிர்க்கும் பொருந்தி அம் மண்ணையை
ஈடழித்தீர்" (7)

என்ற பாடலால் உணரலாம்.

தென்னாட்டுச் செலவு மேற்கொண்டபோது, தென்காசியில் கோயில் காளை ஒன்றை, பகீர்மார் உணவாக்கிப் புசித்துவிட, உயிரிழந்த காளையின் தோல், எலும்பு போன்றவற்றைக் குவித்துக்கோலாலடித்து எழுப்பி உரியாரிடம் சேர்ப்பித்தமையை,

"ஆ நந்த மாறுபட்டார் முகி அங்கோல் கொண்டு
அடித்தெழுப்பி
ஆநந்தம் மாட்டில் அளித்தீர்" (14)

என்பார்.

தஞ்சாவூரிலே, மன்னன் அச்சுத நாயக்கன் பிணி கொண்டு வருந்த, அவன் பகைவரியற்றிய செய்வினையை உணர்ந்து அதனைப் புறவின் மூலம் அறிந்து, அதன் உடலில் செருகியிருந்த ஊசிகளைக் களைவதின் மூலம் நன்னலம் உய்விக்கின்றார். பண்டை நலமெய்தி அவனும் அரச பதவிக்கும் பொறுப்பானவ னாக இனிதிருந்தான் என்பர். இதனை,

"......நாகையர் தாள் திறம் மஞ்
சரி கங்கு அணங்கு உயர் வேல் வலனுக் கிறை தந்துவே" (23)

என்ற பாடலால் அறியலாம். மன்னவனுக்கு இறைமாட்சியை அவர்களின் தாள்திறமே வழங்கியது என்பது இதன் பொருள்.

திருவாரூரில் திருவிழாவின் போது தேரினை நகர்த்த இயலாது போகவே, பதினாயிரம் பேர் கூடி ஈர்க்க வேண்டிய தேரினைத் தனியராய் ஈர்த்து ஓடச் செய்தமையை,

''கார் அணங்கு ஆட்டுக் குபிரர் பொன் தேர் செலக்
கற்பித்து முற்
காரணங் காட்டுக் குரிசில் நன்னாகையர்'' (88)

என்று குபிரர் ஆகிய முஸ்லீமல்லாதாரின் பொன்தேரினை நடத்திக் காட்டியவர் என்று கூறுவர்.

ஒரு மாடு மட்டும் வைத்திருந்த ஏழை விவசாயி, தன் குடும்ப வறுமையைத் தீர்க்க இன்னொரு மாடு இருந்தால் உழவுத்தொழில் இயற்றலாமே என்று ஆண்டகை பால் தன்னிலை கூறிப் புலம்ப, ஒரு மரத்தடியில் அவன் மாட்டைப் பிணித்து, மற்றொரு மரத்தில் கயிறு மட்டும் பிணித்து வைத்து விடுமாறு கூறி, இறைவன் பால் பெரிதும் வேண்டி, அவனுக்கு இணையாகிய மாடுகளை அளித்த அற்புதத்தை,

''......பாசமணி
பசுமைப் படலம் அராம் மரத்தெய்தச் செய'' (47)

என்ற பாடலால் விளக்குவார்.

இறையருளின் ஏவலால், நாகையைத் தம் வாழ் பதியாகத் தேர்ந்து, பல தொண்டுகள் மக்கட்குலத்துக்காக அவராற்றி வாழ்ந்து வந்தார். அதுகாலை, அந்தமான் தீவு சென்று மக்களை நன்னெறிப்படுத்த விழைந்தபோது, நாகையிலிருந்தவாறே அவர்கள் அந்தமான் காட்சிகளைக் காண இறையவன் அருளினான் என்பதை,

''மகரம் தவா சங்கு அலை கடல் தீவு அந்தமான் உறையோர்
மகர் அந்த வாசம் கனம் பொருள் கண்டவர்'' (93)

என்ற பாடல் மூலம் அறியலாம். ஒருவர் சென்று காண வேண்டிய இடங்களை யெல்லாம் செல்லாமலேயே கண்டு கொள்ள வல்லவர் என்பது இதனான் போதரும்.

நாகூரில் நாயகம் பர்மா நாட்டைச் சார்ந்த மோல்மீன் நகரை அடைந்து ஆண்டிருந்த மக்கட்கெல்லாம் அருள் பாலித்து, பல நற்செயல்களை, நோய் போக்குதலை, இயற்றி, அப்பதியின் கண் வாழ்கின்றவர் தம் மன அழுக்குகளை அகற்றி நன்னெறி உய்த்தார். அம்மக்களின்பால் ஈடற்ற அன்பினை வளர்த்த தன்மையால், பிரிவதற்கு மனமின்றித் தவிக்க, அவர்களின் விருப்பப்படியே அங்குச் சமாதியாகி, அன்றிரவே கபுறிலிருந்து* வெளிப்பட்டு

---

* புதைகுழி

நாகூரை அடைந்து என்றும் போல் வீற்றிருந்து, பிறப்புக் காட்டி னார் எனும் பேரற்புதத்தினை,

''ஐயம் படும் கசம் குன்மம் பன்மூலம் அகற்றி மெய்யில்
ஐ அம் படும் கசம் போல் வலி ஈந்து அப்பதி முழுதும்
ஐயம் படும் கசம் போம்படி செய்து அங்கமைந்து புலன்
ஐ அம்பு அடுங்க சங் காட்டினர் நாகையிலற்புதமே'' (16)

என்ற பாடல் விளக்கும்.

மேல்மீனில் உருவ வழிபாடு புரிபவரின் மனத்தை மாற்றுதற் காக அவ்விக்கிரகங்களையே பேச வைத்து, அவர்தம் நெறியை உணர வைத்த தன்மையினை,

''கல் வித்த வாரண மா வலர் காரணக்களியுரைபு
கல்வித்த வா ரணமா இழிநோய் அகல்வித்து உடற்குஇ
கல் வித்த வரரண மாநிதி'' (98)

என்று, கல்லிலானாகிய உருவத்தைப் பொன்னணிந்த யானை, குதிரைகளின் மீது இவர்ந்து வந்த அரசர் காணும்படிப்பேசவைத் தவர்; புண்ணாலாய நோய்களை விலக்கிய சங்க நிதி என்றெல் லாம் போற்றுவார் புலவர்.

நாகைக் குளக்கரையில் வீற்றிருந்தகாலை, மங்கையொருத்தி குளித்து, நீர் மு. ந்து சென்றபோது நாணமின்றி அங்கம் வெளிப் பட அவள் நின்ற கோலம் ஆண்டகை கண்ணுக்கு இலக்காக, உடன் அருவருப்புக்கொண்டு கூசியபோது, அவளுடைய தனங்கள் மறைந்த தன்மையும், அதை உணர்ந்து பாலுக்கு அழும் தன் குமரன் நிலையும் உணர்ந்து அந்தப்பெண் வேண்டியக்கால் அக் குறை நீக்கியமையும்,

''ஆக்கத்து அரும்பு இகல் பார்ப்பிணி கொங்கை யழித்துப்
பின்னர்
ஆக்கத் தரும் பெருஞ் செல்வம் பெற்றீர்'' (19)

என்பதால் உணரலாம்.

ஒருமுறை ஆண்டகையின் சட்டைக்கை நனைந்து இருந்த தால், எங்கோ சிக்கித் தரை தட்டிய கப்பலைத் தள்ளிவிட்ட அற்புதச் செயல் என்று கொண்டாடினர். இதனை,

''திரு புக்கு அதி வன நாகையர் கோன் மனைச் சென்று ஒலிய
திர் உப்புக் கதி வன வாரியின் ஏகரை சேர்ந்த வங்கம்
திருப்புக் கதி வனசம் பொருங் கை'' (61)

என்று தாமரை போலும் திருக்கையினால் வங்கம் சேர்த்தவர் எனக் கொண்டாடுவர்.

இங்ஙனம் எண்ணிறந்த இறையருளாலாகிய அற்புதங்களைச் சீர்தூக்கிப் பார்க்கின், அவர்கள் இறையருள் பிரதிநிதிகள் என்பது விளங்கும். எப்படி வாழ வேண்டும் எனக் கற்பித்து, வாழ்ந்தும் காட்டியவரானார்கள். மரமானது பெரிதாய் வளர்ந்து வித்தைத் தர, பின் வித்து மரத்தைத் தருவதே இயற்கையின் விதி. அது போலக் காலங்காலமாய் நபிமார்களும், அருட்சீடர்களும் மாறி மாறித் தோன்றி இசுலாமியப் பயிர் தழைக்கக் காரணமாயினர். அவர்களுள் தலையாய அருட் சீடர்களாய், அப்துல் காதிர் ஜீலானி, நாகூர் நாயகம் போன்றோரைக் கூறுவர்.

இவர்கள் ஆற்றிய கராமத்துகள் பற்றியும் சில கூறுவர். இறையோனின் வல்ல சக்தி இவர்களிடம் ஊற்றாகப் பெருகி, குறைபோக்கவும், நோய்க்கறை தீரவும், நலிவு தீரவும், பொலிவும் வலிவும் பெருகவும், நிகழ்ந்ததை அறியவும், நேர்வருவதை உணரவும், அழிந்ததை ஆக்கவும், ஆக்கத்தை மேலோங்கவும் வைக்க இவர்களால்—இவர்கள் மீது பொழியப்பெற்ற இறையருளால் – இயலும் என்பார்.

வணங்குதல், வேண்டுதல் இவ்விரண்டிற்கும் பேதமுண்டு. வணங்கப்பட வேண்டியவன் இறைவன் ஒருவனே. வேண்டப்பட வேண்டியவர்கள் இப்பிரதிநிதிகள். ''தீர்ப்புக்கூறும் நீதிபதியிடம் வாதாடும் வழக்கறிஞர் போல் இவர்கள் நாம் மனமுருகி வேண்டுவதை ஆண்டவன் பால் எடுத்துவைத்து நாம் வேண்டுவதைத் தருவார்கள்''[4] என்ற கூற்றும் இதனை மெய்ப்பிக்கும்.

இறைக்கும், நபிக்கும், மறைக்கும் இனியவரான ஆண்டகை பர்மாவில் சமாதியாகி, நாகூரில் வெளிப்பட்ட தன்மையால், ''ஆன்மாவைப் போலாதல், மகத்துவமாதல், உடல் கண்டிப்பின்றி கண்டிப்பானவைகளை ஊடுருவிப்போதல், இலகுத்துவமாதல், வேண்டியதை அடைதல், நிறையுள்ளோராதல், ஆட்சியுள்ளோர் ஆதல், எல்லாந் தம் வசமாக்க வல்லமை பெறுதலாகிய இவ் வெட்டுச் சித்தியாதிப் பலவிதச் சாதனங்களெல்லாம் கைவச

4. சு. ர. செய்யது ஹாஜா முஹையதீன், **கருணைக்கடல்** (நாகூர், 1982), பக். 144

முள்ளவர்''[5] என்று கூறப்பெறுகின்றது. இதனையே ''அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிரார்த்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்'' என்ற அட்டமாசித்தி என்பர். இஃதன்றி 'கீமியா' என்கிற இரசவாதம், 'ஹீமியா' என்கிற உருவழிதல், 'சீமியா' என்கிற மறையுணர்வு, 'றீமியா' என்கிற பரகாயப் பிரவேசமும் உணர்ந்தவரென்பர்.

இத்தனையும் கைவரப்பெற்றும், அனைத்தும் சமுதாய ஈடேற்றத்துக்கும், மேன்மைக்கும் வித்திட வேண்டி எல்லை இகவாது மேற்கொண்டார். எனவேதான் ஒலி என்ற நிலை யினின்றும் மேலேறி, 'குத்பு' 'கௌது' போன்ற உயர்களன்களை எய்தி மேன்மையுற்றதாகப் புலவர் நாயகம் கூறுவர்.

ஆண்டகையின் சீர்மை விரிக்கின் வளருந்தன்மையுடையது. பலராலும், பல பின்னணியாலும் அன்னாருக்கு அளிக்கப்பட்ட, சுல்தானுல் ஔலியா, குத்புல் அக்தாபு, கௌதுல் இஸ்லாம். மீறான் சுல்தான், சையது அப்துல் காதிறு, ஷாஹீல் ஹமீது, கன்ஜசவாயீ, கன்ஜபக்ஷ், பாதுஷா சாஹிப் போன்ற சிறப்புப் பெயர்களே அவர்களின் அருமையை உணர்த்தும்.

| | | |
|---|---|---|
| ''சுல்தானுல் ஔலியா | — | பிரதிநிதிகளின் அரசர் |
| குத்புல் அக்தாப் | — | ஆன்மீகத்துறையில் இறைவனால் நியமிக்கப்பட்ட அதிகாரி களில் மிகச் சிறந்தவர்கள். |
| கௌதுல் இஸ்லாம் | — | தூதுமத ரட்சகர். |
| மீறான் சுல்தான் | — | பிரபுக்களின் வேந்தர். |
| செய்யிது | — | திரு நபிவழித் தோன்றலார் |
| அப்துல் காதிறு | — | சக்தி வாய்ந்த ஆண்டவனது அடிமை. |
| ஷாஹூல் ஹமீது | — | ஆண்டவனின் புகழ்பெற்றவர் களில் அதிபர். |
| கன்ஜ சவாயீ | — | களஞ்சியம் |
| கன்ஜ பக்ஷ் | — | கொடைப்பொக்கிஷம் |
| பாதுஷா சாகிப் | — | பாக்கியம் உள்ளவர்களுக்கு மன்னன்''[6] |

---

5. குலாம் காதிறு நாவலர், மு.நூ. பக். 383.
6. அ.ர. செய்யது ஹாஜா முஹையதீன், மு நூ. பக்.140

பன்னாட்டார், பன்மொழியினர், விண்ணவர், மண்ணவர், மெய்ஞ்ஞானியர், விஞ்ஞானியர், சிம்மாசனாதிபதியர், சிறப்புடை வலிமார் - என, நாயகத் தலமான நாகூரை வந்தடைந்து 'ஜெய ஜெயா' எனப் போற்றிய திருக்காட்சியினை மஸ்தான் சாகிபு, தாம் நாகூர் வந்தகாலை பாடியதன் வழி உணரலாம்.

"திக்குத் திகந்தமும் கொண்டாடியே வந்து
தீன் கூறி நிற்பர் கோடி
சிங்காசனாதிபர் கையேந்தியே வந்து
ஜெய ஜெயா வென்பர் கோடி..."[7]

என்ற பாடல் வழி நாகூரில் எழுந்தருளிய நாயகத்தின் மகிமை சொல்ல வாயுமுண்டோ என தவராஜ செம்மேருவை, சற்குணங் குடி கொண்டவரை வாழ்த்தியமைவர் மஸ்தான் சாகிபு அவர்கள்.

பொதுவாக அற்புதங்கள் குறித்துச் சில கருத்துக்கள் நிலவு கின்றன. "மனித வெற்றி இடையறாக் கூடும் உழைப்பால் அமையக்கூடியது. அற்புதங்களுக்குச் சற்றும் தொடர்பில்லாதது என்பது இசுலாத்தின் தெளிவான கொள்கை"[8] என்பதை நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டும். "பூப்பெய்திய கன்னிப் பெண் எவ்வாறு அதனை எடுத்துரைக்க நாணமுறுவாளோ, அதே போன்று வலிமார்கள் அற்புதங்கள் நிகழ்த்தித் தங்களை வெளிப் படுத்த நாணமுறுவர்"[9] என்ற கருத்தின் வழி வலிமார்கள் தங்கள் மூலம் அற்புதங்கள் வெளிப்படாதிருக்கவே விழைந்தனர். ஆனால் "அறிவுக்கு அப்பாற்பட்ட இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் எல்லா மொழிப் பெருங்காப்பியங்களிலும் இடம் பெற்றுக் காப்பிய மரபாகக் காட்சி தரும். இம்மரபைப் போற்றியதோடு தமிழ்க் காப்பிய மரபைத் தழுவ வேண்டிய"[10] கட்டாய நிலையில் புலவர் நாயகம் இருந்ததால், ஒருவேளை அவர் படைத்த அந்தாதியில் அற்புதங்கள் அதிகமாக இடம்பெறச் செய்தார் போலும். ஓரிறைக் கொள்கையை நிலைநாட்டி இறை மறுப்பாளர்களை இஸ்லாத்தில் இணைக்கவும், பகைவர்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ளவும் இறை நேசர்கள் அற்புதங்கள் சில நிகழ்த்தியிருக்க லாம். அவற்றைப் புலவர் நாயகம் தமக்கே உரிய புலமையாற்றலி னால் உயர்வு நவிற்சியுடன் பாடியிருக்கலாம் என்று கருத இட முள்ளது.

---

7. அப்துல் ரகுமான், மு. நூ. பக். 153
8. மு. அப்துல் கரீம், மு. நூ. பக். 100
9. அப்துற் - றகீம், **வலிமார்கள் வரலாறு**, (சென்னை, 1972), பக்.7.
10. மு. அப்துல் கரீம், மு. நூ. பக். 101.

# 6. பிணி போக்கப் பணிதல்

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பர். மனிதனுக்கு உடல் நலமுடை வாழ்வென்பது இறைவனின் அருட்கொடை. எத் துணைப் பேறுபெற்றோரும் நோயினால் அவதிப்படுவாராயின் அது தீரா இடும்பையே தரும். எனவே அனைத்துச் செல்வத்தை யும் விட நோயற்ற செல்வத்தையே நாடி வேண்டினர். நலமான வாழ்வை நாடுவதற்கும், நோயற்ற வாழ்வை விழைவதற்கும் காரணம் உலக வாழ்வின் இனிமைகளைச் சுவைப்பதற்காக அன்று; அல்லாஹ்வை வழுத்துதற்காகவே என்பது இறைநேசர்களின் கொள்கை.

உடல் நலமின்மை என்ற கயிற்றின் மூலம் இறைவன் பெரி யோர்களைத் தன் பக்கம் இழுத்துக் கொள்கிறான். "சுகக்குறைவு என்பதே இறைவனைப் பற்றிய ஞானத்தை அடைவதற்கான அனு பவங்களில் ஒருவகையானதுதான். 'உடல் நலக்குறைவு என் ஏவ லாள்; என்னால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுடன் இதற்குத் தொடர்பு உள்ளது' என்று இறைவன் கூறி உள்ளதாக நபிபெரு மான் வாய்மொழியுள்ளது."[1]

நோய் தீர்க்க இறைவனிடம் வேண்டும்போதே அவனோடு ஒரு நெருக்கம் ஏற்படத் தொடங்கி விடுகின்றது. இடையீடற்ற இறை வணக்கம் புரிதற்காக, நோய்தீர்த்து அருளும்படி இறைவனிடம் புலவர் வேண்டுகின்றார். "அண்ணல் நபி (சல்) அவர்கள் எந்த நோயாளியிடம் சென்றாலும் அல்லது எந்த நோயாளி அவர்களிடம்

---

1. ஆர்.பி.எம். கனி, **பேரின்ப ரஸவாதம்** (சென்னை, 1972), பக். 36.

வந்தாலும் 'மக்களின் இறைவனே! கடும் வேதனை தரும் நோயை நீக்குவாயாக! மேலும் குணமாக்குவாயாக! நீயே குணம் அளிப்பவன்! நீ குணமளித்தாலொழிய குணமில்லை. உன்னுடைய குணமளிக்கும் தன்மை எந்த வியாதியையும் விட்டு வைத்ததில்லை என்று கூறினார்கள்.''[2] மேற்கூறிய நபி மொழி வழி, பிணிபோக்கும் ஆற்றலுடையவன் இறைவன் ஒருவனே என்பதை அறிய முடிகிறது. இறைமறையிலும் உடல்நலத்தைப் பேணுதலின் இன்றியமையாமை, அதற்குரிய நெறிமுறைகள், பழக்க வழக்கங்கள், உண்ணும் முறைகள் போன்றன தெரிவிக்கப்படுகின்றன.

புலவர் நாயகம் எவ்வகை நோயினால் துன்பமெய்தினார் என்ற குறிப்பு இவ்வுரையாளருக்குக் கிட்டவில்லை. தீராப் பிணியில் உழன்றிருக்கலாம் என்று கருத அந்தாதியில் பல செய்திகள் காணப்படுகின்றன. அவர் வாயுத் தொல்லைக்காகச் சென்னைப் பட்டணத்து ஐயா என்னும் மகாபண்டிதரிடம் லேகியம் பெற்று உண்டார் என்ற செய்தியை மட்டும், அவரின் நிருபம் வழி அறிய முடிகிறது.[3]

புலவர் நாயகம் தம் வாழ்வில் இறைப்பற்றை உயிரெனப் போற்றியவர். சிந்தனையில் செயலில் இறைப் பற்றிலே இயைந்து விட வேண்டும் என்பதற்காகவே மேலான சுகவாழ்வைக் கல்லுங் கரைய வேண்டுகின்றார். வாழும் நாட்கள் யாவும் வல்ல நாயகனை வழுத்தும் நாட்களாகவே இருக்க வேண்டும், அதற்கு நோய் தடைக்கல்லாக இருந்துவிடக் கூடாது என்பதற்காகப் பணிந்து கேட்கின்றார். ஏனெனில், ''இறைவன் நோயையும் மருந்தையும் நிச்சயமாக இறக்கி ஒவ்வொரு நோய்க்கும் ஒரு மருந்தை உண்டு பண்ணியுள்ளான்.''[4]

தம் யாக்கையில் நோய் கொண்ட ஆளுகையைக் கூறுங்கால், எத்தகு நோய்கள் உடலை அணிவகுத்துத் தாக்குகின்றன என்பதனைக் கூற வரும்போது,

> ''ஐயம் படுங் கசங் குன்மம் பன்மூலம் அகற்றிமெய்யில்
> ஐ அம் படும் கசம் போல் வலியீந்து'' (16)

---

2. ஏ.எம். அப்துல் அஸீஸ், **இஸ்லாம் காட்டும் ஆரோக்கிய வாழ்வு**, பக். 130
3. எம். சையிது முகம்மது ஹசன், மு.நூ. பக். 21
4. ஏ.எம். அப்துல் அஸீஸ், மு.நூ. பக். 123

என்னும் பாடல்வழி கபம் உண்டாகும் காச நோயையும், குன்ம நோயையும், மூலமாகிய வியாதிகளையும் நீக்கி, உடலில் அழகுமிக, யானை போலும் நல்வலி பெறுதல் வேண்டும் என வேண்டு கின்றார்.

அடுத்து,

> ''வல்ல மை கும்ப வனக்கோவை பாண்டு மூலமெனும்
> வல் அமை கும்ப வனத்து உழலாது வழி விளக்கின்
> வல் அமைகும்'' (96)

என்ற பாடலில் மனித உடலைக் கொதித்து அழல வைக்கும் நீர்க் கோவை, பாண்டு, மூலவியாதிகள் பற்றிக் குறிப்பர் புலவர். நோய்களினால் படும் இடரினை,

> ''.........பையல் இத்துயரால்
> இராசித்து அரும்புவதோ உள நாகை யிருப்பவரே'' (8)

என்று பாடுங்கால் உள்ளங் குவிந்து பொடியாவதைப் புலவர் குறிப்பிட்டு அத்தகு நோய்களைப் போக்குமாறு வேண்டுகின்றார்.

நோய் தீர்க்க வேண்டும் என்ற பொருளில்,

> ''மா தவக்கம் ஆக்கையன் நோய்க்கறை போக்குக'' (1)
>
> ''கலையா அருள் ஈக என் நோய்த்துயர் பற்றறவே'' (5)
>
> ''அடியேன் பிணி ஆச றவே'' (14)
>
> ''விசையம் பெற ஏழையைக் காத்தி மன்னே'' (68)

எனப் பல பாடல்களில் உடல்நலம் வேண்டுகின்றார்.

நோயறு யாக்கையை யாசிக்கும் நோக்கமே, தூய உடல் கொண்டு தூய்மையான இறைவனைத் தொழவே என்ற கருத் தினைப் பெய்கின்றார் புலவர் நாயகம். சுத்தமான தேகமே, ஆரோக்கியம் செறிந்த நல்லுடலே இறைக்கு உவப்பான தொண்டு இயற்றுவதற்கு ஏற்ற கருவி. இதனை இஸ்லாம் சுத்தமுடைய தாகும். ஆகவே, நீங்களும் 'சுத்தமுடையவர்களாக இருங்கள். ஏனெனில் 'சுத்தமுடையவரே சுவர்க்கத்தில் நுழைவர்' என்ற அண்ணல் நபியின் வாக்கு நினைவூட்டும். யாக்கையின் அழியாப் பயன்களை,

> ''கடன் இறை வேழந் தவழ் உடல் வாய்மை சுமைதயைசீர்
> கடம் நிறை ஏர் அம் தருமங்கள் பூண்டு களிப்பறவே'' (84)

எனப் புலவர் குறிப்பர். அதாவது உயிர் தங்கும் உடலின் பயனே வாய்மை, பொறுமை, கருணை, புகழ், நீதி போன்ற அழகிய நன்மைகளைப் பெற்று இறைக் கடனாற்றி இன்புற்றிருக்கவே என்பது புலவரின் கருத்து. இஸ்லாத்தின் தூணாகவும், சன்மார்க்கத்தின் அடிப்படையாகவும், வணக்கங்களின் தலையானதாகவும், சுவர்க்க வாயிலின் திறவுகோலாகவும் உள்ள ஐங்காலத் தொழுகைக்காகவே தூயஉடலைத் தரும்படி இறைவனிடம் புலவர் வேண்டுகின்றார்.

அழியும் உடல்கொண்டு அழியாப் பயன்பெற வழிகாட்டும் புலவர் கழுத்து, மூட்டு ஆகிய இடங்களில் தோன்றும் பிணிகளைப் போக்கி நோய் தீர்ந்த நல்யாக்கையைக் கொடையாகத் தரும்படி வேண்டுகின்றார். அதனை,

> ''கண்டம் கந்து ஆன விடத்து மற்றுள்ள கடும்பிணியும்
> கண்டு அங்கந் தானம் இயல்போடு அருளிர்'' (87)

நோய்தீர்க்க வேண்டும்போது அண்ணல் நபி (சல்) அவர்களின் மீது ஆணையாக ஆண்டகையின் கை தம் முகம் நீவி அருள்புரிய வேண்டிப் பாடுகின்றார். அதனைப் புலவர் இவ்வாறு குறிப்பர்.

> ''பூம்பதத்து ஆணை! என் நோய்த்துயர் கட்டு அற மு
> கம் மீது வை பூம்பதத் தண் கரமே'' (99)

இமாம் பூசிரி அவர்கள் பக்கவாத நோயினால் படுத்த படுக்கையினராய் நபி (சல்) அவர்கள்மீது 'கஸீதத்துல் புர்தா' என்னும் நூலை இயற்றியபோது நபி (சல்) அவர்கள் கனவிலே தோன்றி தம் திருக்கரங்களால் இமாம் அவர்களின் உடலைத் தடவிக் கொடுத்துத் தங்களின் போர்வையை அளித்ததாகக் கூறப்படும் கருத்தினை[5] மனங்கொண்ட புலவர் அவ்வண்ணம் நாகூர் ஆண்டகையின் பூங்கரம் தம்மை நீவப் பெறவேண்டும் என விழைகின்றார் போலும்.

பிணி தீர்க்கும் நன்மருந்தாய் எவையெவை வேண்டுமெனப் பணியும் போது தம் மன ஆவல்களைப் புலவர் வெளிப்படுத்துகின்றார். ஆண்டகையின் கடைக்கண் அருளே தம்பிணி தீர்க்கும் பெருமருந்து என்பதனை,

---

5. செ. பசுலுமுகியதீன், **நோயறுபனுவல்** (நாகர்கோயில், 1977), பக். 12

"......சிற்றடியவன் பால்
திருமுக மின் நலங் கண்ணாற் கணித்தீர் இத்தீவினைக்கே"(53)

எனக் குறிப்பர். நன்மையிலங்கும் கண்ணாற் தம்மைக் காக்கும்படியும் வேண்டுகின்றார்.

நபி (சல்) மரபில் உதித்த ஆண்டகையின் கண்ணோட்டமுறு மேல் புள்ளி படிந்த மேனியாகிய கருங்குட்டமும், விஷக்கடியால் வரும் வருத்தமுடைய பல குட்ட ரோகங்களும் சென்றொழியும். இதனை,

"......நாகையர் கண்ணுறிற்பு
கர் துவக்கு உம் கடி யாதனையும் செல்லும் கை கண்டதே"
(86)

என்று புலவர் குறிக்கின்றார்.

கடைக்கண்ணோக்குடன் திருப்பாதங்களும் பிணிக்கு மருந்தென அமையும் என்பர். அதனை,

"என் நோதலுக் கொப்பு அரும் புகழ் தாங்கல் நும்
பாதத் தகுதியதே" (29)

எனவும், நோயச்சவயப்பட்ட உள்ளத்தின் மனநோய் போக்குதற்கும் பச்சைப் பொற்கழலே பசு மருந்தாமென்பதை,

"பயப் பங்கயப் பதமே யென்றன் நோய்க்குப் பசு மருந்தே"
(46)

எனவும், புண்ணாய் அழியும் பிணிகளை விலக்க மணங்கமழ் கழலே தஞ்சம் என்பதை,

"......இழிநோய் அகல்வித்து உடற்கு இ
கல்வித்த வாரண மாநிதி! ஏற்கும் கமழ் கழல் புகல்" (98)

எனவும் புலவர் குறிப்பிடுகின்றார்.

இனி ஆண்டகையின் வாயமுதமாம் திருமந்திரமும் பெற்ற பிணிக்கு மருந்தாகும் என்பதனை,

"மலினத்து இரு கரம் வெண்மேனி செவ்விதழ் மஞ்சள் முகம்
மலினத்து இரு கண்ட மாலை சித்ராங்கம் வரட்சி இரு
மல் இனத்து இரு கசம் மற்றுள நோய்க்கு மருந்து நற்செம்
மல் இன் அத்திருகதி நாகையர் வாய்மலர் மந்திரமே" (37)

எனக் குறிப்பர். அதாவது கருங்கை, வெண்மேனி, செவ்விதழ், மஞ்சள் முகமுடைக் கருங்குட்டம், வெண்குட்டம், காமாலை,

குற்றமுடைக் கண்டமாலை, பெருவியாதி, பித்தநாகம், இருமல், துக்கமுள்ள கசரோகம் போன்ற பல நோய்களுக்கு ஆண்டகையின் வாய் மலர்ச்சியானெழும் திருமந்திரச் சொல்லே மருந்து என்பார் புலவர். எத்தகைய அரும் பிணிக்கும் நலம் தரும் மருந்தே நாகூரார் என்பது புலவரின் கருத்தாகும்.

ஆண்டகையின் கருணையினால் தான் நோய் விலகும். வேறு மருத்துவமில்லை என்பதனை,

''......நும்மையன்றி இனிக் காமருந்தின்
கைஅடையார் இரந்து அருள்வார் எங்கள் மாதவமே'' (101)

என வெளிப்படுத்துகின்றார் புலவர்.

இறுதியாக ஆண்டகையின் பெரும்பதியான நாகூரின் கண் அமைந்துள்ள அணியுடை மனாறாவை, அருகில் கூட அல்ல தொலைவில் நின்று பார்த்த அளவிலேயே நோய்த்துயர் விலகும் என்பர். அதனை,

''......நன்னாகை தங்கக் கலசங்
கண்ணிக் கொடிய மனாறா உதயத்தைக் காண்டவர் தம்
கண்இக் கொடிய துயர் நோய்கள் போம் ஒரு காத கட்டே''(66)

எனப் புலவர் குறிப்பிடுகின்றார்.

விசித்திர வித்தாரக் கவிமாலையான அந்தாதியைப் பாடு வதற்கே காரணம் அகத்திலும் ஆகத்திலும் சுகம் கிடைக்க வேண்டும், அதற்கு நாகூராண்டகையின் அருள் கிட்ட வேண்டும் என்ற புலவரின் விருப்பமே.

இஸ்லாமியர் பன்னெடுங்காலம் முன்பே நோய்கள் குறித்தும் நோய் முதல் நாடுதல் குறித்தும், அது தணிக்கும் வாயில்கள் குறித்தும் ஆய்ந்து சிகிச்சை முறைகள் வழங்கிப் பெருமை பெற்றி ருந்தனர். அதற்கான சீரிய கருவிகள், மூலிகைகள், மருந்துக் கல வைகள், உலோக பஸ்பங்கள் போன்றன குறித்த அரிய செய்தி களை அளித்துள்ளனர். நோய் தீர்க்கும் துறையில் ஆர்வம் கொண்டதால் ஆரோக்கிய வாழ்வை இஸ்லாமியர் விரும்பினர். அதிலும் இறைவனுக்குத் தொண்டாற்றத் துடிக்கின்ற அடியவர் களோ 'சுத்தமே ஈமானின் வழி' என்ற நபி (ஸல்) வாக்குக்கேற்ப தங்களின் உடலைத் தூய்மையாக வைத்திருக்க விரும்பினர்.

நல்லாரோக்கியத்தைத் தருமாறு நாயனை வேண்டும் தன்மையைத் தான் நாகையந்தாதியில் பரக்கக் காண முடிகின்றது. தம்மையும் தூயவராக்கிக் கொண்டு உலகத்தையும் தூயகளமாக்கத் துடிக்கும், புலவரின் நெஞ்சப்பாங்கைக் காண முடிகின்றது. ஏனெனில், "நோய்கள் ஒருவரிடமிருந்து ஒருவருக்குத் 'தொற்றும் தன்மை' உடையவை என்பதை முதன்முதலில் உலகுக்கு அறிவித்தவர்கள் முஸ்லீம்களே"[6] என்ற கருத்தினைக் காணுங்கால் இவ்வுலகம் நோய் பரவுதற்குரிய களஞ்சியமாக இருப்பதைத் தவிர்க்க இஸ்லாமியர் விழைந்தனர் என்றறியலாம். ஆரோக்கியம் என்பது வருவதல்ல—பெறுவது.

மனங்கவர் மாளிகையொன்று எழுப்பப்படவேண்டும் என்றால் சார்ந்த நிலத்தைத் தூய்மைப் படுத்தல் போல, வளமிக்க பயிர் விளைந்து பயன் தரவேண்டும் என்றால் முளைவிடும் களைகளைக் கிள்ளி எறிதல்போல, அரிய ஆன்மீக வாழ்வுக்கு ஆரோக்கியமே அச்சாணி. எனவேதான் புலவர் நாயகம் வணங்கி, வாயூறிப் பாடி, உடல்நலத்தை இறைவனிடம் வேண்டுகின்றார்.

---

6. ஆர்.பி.எம். கனி, இஸ்லாமிய இலக்கியக் கருவூலம் (தென்காசி, 1963), பக். 64

# 7. இலக்கிய எழில்

சமுதாயத்தில் உருவாகின்ற இலக்கியச் செல்வங்களை வரலாற்றுக் கண்ணாடி எனக் கூறுமளவில் அவ்விலக்கியம் எழுந்த காலப் பின்னணி, சமூக அமைப்பு, சமய, பண்பாட்டு மேம்பாடுகள் போன்றன பிரதிபலிக்கப்படுகின்றன. இலக்கியம் பற்றி "தேவையான எல்லாம் தேவையான அளவு தேவையான அழகில் சொல்லப் படுவதே இலக்கியம். இலக்கியம் பல பொருள்களின் கூட்டுக் கலவை"[1] என்னும் கருத்து நிலவுகின்றது. கூட்டுக் கலவை என்னும் போது இலக்கியத்துக்கு எழில் சேர்க்கும் உணர்ச்சி, பயன், குறிக் கோள், கற்பனை, கருத்து, அணி, வடிவம் போன்றனவற்றைக் கூறலாம். இக்கூறுகளின் கூட்டுக் கலவையில் மிளிர்வதே அழகுணர்ச்சி. அழகே அழியாத நல்லின்பம் என்பர். அந் நல்லின்ப வசப்பட வைக்கும் அரிய நற் கூறுகளைக் கொண்ட இவ்வந்தாதி இலக்கியத்தில் முதற்கண் பாடுபொருளாகவும், சமய சன்மார்க்கச் சிதறலாகவும் அமைந்த குருவணக்கத்தின் சிறப்புக் குறித்தும், அதன் பயன்குறித்தும் காணுதல் நன்று.

## குருவணக்கப் பயன்

நாகை ஆண்டகையைக் குறித்துச் சிற்றிலக்கியம் பாடிய புலவர் நாயகம், அடியவரைப் பிறிதொரு அடியவர் போற்றும் பாவமைப்பில் இதனைப் பாடுகின்றார். சைவ நெறியில் மாணிக்க வாசகரைப் பாடிய வள்ளலாரைப் போலவும், வைணவ நெறியில் நம்மாழ்வாரைப் பாடிய மதுரகவியாழ்வாரைப் போலவும் பாடிய

---

1. திருச்சி ஜமால் முகமது கல்லூரி ஆண்டு மலர் (1980) இல் மேற்கோள்.

மரபை ஒட்டியது இவ்வமைப்பு. எனினும் அப்போது ஏகஇறைக் கொள்கைக்கு இடர் ஏற்படாத வண்ணம் எச்சரிக்கையுடன் இவர் தம் பிரபந்தத்தை அமைப்பார்.

பிரபந்தத்தினைக் குருவைப் பராவுதலாக அமைக்கின்ற இம் மரபு, ஆசாரிய அபிமானம், பாகவ பக்தி என்று கூறப்படும் மரபை ஒட்டியதாகும். அந்நெறியில் ஒரு குஃபியினை — ஆண்டகையை— (மெய்ஞ்ஞானி) நல்வழிகாட்டியாகத் தேர்ந்து நடந்த தன்மையைப் புலவர் நாயகம் விளக்குவார். இந்த வழிகாட்டியின் மூலமாக, இறைத்தூதர்பால் இரத்தலையும், அதன்பின் இறையோனிடம் பணிதலையும் படிப்படியாய்ச் செயற்படுத்து கின்றார். 'என்னைக் கண்டவன் இறைவனைக் கண்டான்' என்ற நபிபெருமானாரின்(சல்) மொழியே இதனை உணர்த்தும். எனவே நற்குரு நல்வழிகாட்டி எனலாம்.

குருவணக்கப்பிரபந்தம் கூறுங்கால், அரிய தத்துவங்களை, கருத்துக்களைக் கலந்து வழங்குகின்றார் புலவர் நாயகம். இத் தத்துவ ஞானம் இஸ்லாத்தின் நன்கொடை எனலாம். இமாம் கஸ்ஸாலி, அல்பாரபி, இப்னுல்அரபி போன்றோர் தத்துவ ஞானக் கொடை பெற்றுப் பயனுய்ந்தது இவ்வுலகம்.

''இஸ்லாமியத் தத்துவ ஞானத்தின் முக்கியத்துவம், கிரேக்க உண்மைகளை விளக்கித் தந்ததுடன் தத்துவம், சமயம் ஆகிய இரண்டும் ஒன்றோடொன்று இணங்கும் படியும் செய்து காட்டிய தாகும்''[2] என்ற கூற்று இதனை மெய்ப்பிக்கும்.

ஆதியை அறியவேண்டிய அழகிய நிலைமை நாலாம் எனும் நானெறிப் பாதை வழியில், இருந்து ஜீலானியின் காதிரிய்யா தரீக்கா நெறியைப் பின்பற்றிய மஸ்தான் சாகிபு, சேகுனா போன் றோர் குருபரனைப் பணியும் பாணியில் தம் பனுவல்களைப் படைத்தனர்.

குருபரன்பால் மனநிறைவு தரவும், மறைநெறியில் நிலைக்க வும், ஒழுக்கச் சிறப்பில், உலக நலனில் குறைவற்ற கொள்கை மேவவும் அருளுமாறு வேண்டும் பாடல்களைப் படைக்குங்கால், அவற்றை அள்ளித்தரும் குருச்சிறப்பும், அவரைப் பணிதலால் ஏற்படும் மிகு பயனும் குறித்துப் பேசுவார் புலவர் நாயகம்.

2. ஆர். பி. எம். கனி, இஸ்லாமியக் கருவூலம், (தென்காசி, 1963) பக் 83

## குருவின் சிறப்பு

காந்தமும் இரும்பும் பொருந்தும் தன்மைபோல, இறைவனோடு இணையத் துடிக்கும் புலவர் அதற்கு ஞான வாயிலாகச் சற்குருவை நாடினர். அச்சற்குருவையே தாயாய், தந்தையாய் சமயங் காட்டும் மணிவிளக்காகக் கருதி மனஇருளை விரட்டி அம் மனத்தில் இறையோனின் இருப்பிடம் காண விழைந்தார். மனித குலத்துக்கு மாண்புறு நலம் புரிய இறையோனிடம் தமக்காக வேண்டுமாறும், அதற்கு முதற்கட்டமாக நோயுற்ற தன் யாக்கைக்குச் சீர்நலம் அளித்துச் சித்திரம் தீட்டச் சுவரைச் செப்பமாக்கும் விதத்தில் குருபர வணக்கப் பாடல்கள் அமைக்கின்றார். அக்கருணைக் கொடை நிகழ்த்தும் குருச் சிறப்பைக் கூற வருங்கால், அண்ணலாரின் அணி கழலாம் அரவிந்தம் பூக்க என் கண்ணும் கருத்தும் அதற்கு இடமானது என்பதுபட,

"களிப் புண்டரீகம் மலர் வன நாகையர் காலிணையாம்
களிப் புண்டரீகம் மலர்வது என் கண்ணுங் கருத்தினுமே" (85)

என்ற பாடல் வழி விளக்குவார். திருப்பாத மலர்ச்சி, கருத்தில் நீடித்த நன்மணத்தைப் பரப்பி, ஞானக் கண் திறக்க வைத்து, நல்லொளி பாய்ச்சியதைத் தத்துவக் குழையலாகக் கூறுவார்.

இவ்வாண்டகை, வேந்தர் தம் விழுமிய தொண்டினும் எளியவரின் வாயுறை வாழ்த்தைப் பெரிதெனப் பேணும் ஞானகுருவென்பதை,

"கோடிய சிந்தையர் துன்பஞ் சிதறியுடல் திகைப்பு பல கோடிய
போது அவர் வாழ்த்தும் திருப்புகழே" (60)

ஒருகோடி வேந்தரியற்றும் அடிமைத் தொழிலினும் சீரியதென்பார். எளியவர் வாழ்த்தைத் திருப்புகழ் எனக்காரணம், வாழ்வுதான் ஏழ்மைக்குரியதேயன்றி வாக்குகள் செல்வத்துக்குச் சொந்தமானவை; அத்தகையார் வாய்ப்பட்ட சொல்லே உண்மையான புகழ்ச் சொல் என்பதாகக் கருதியிருக்கலாம். மேலும் ஒருறுப்பின் செய்கை மட்டும் அல்லாது, உடலின் அவயவம் அடங்கலும் உள்ளத்தோடொன்றி அந்தப் பக்திப் பரவசத்தால் வாழ்த்தவரும் நெஞ்சார்ந்த தூய புகழாதலின் திருப்புகழ் என்றார்.

நந்நபி மரபின் உதித்த அந்நவமணி, சிந்திப்பார் உள்ளத்துத் தவமணி, வேதச்சுவை ஆர்வலர்க்கு விழுமணி, தம்மை நாடிவரும் மார்க்கத் தாகமுடையார்க்குக் கிருபையாம் கருணை மதுவை

ஊட்டுபவர். எனவே அவரைக் கண்ட அளவில் தம்முடலம் கருப்பின் சாறும், சோறும், குளிர்ச்சி தங்கிய கனியும் ஆய என்றுரைத்து, நாயகத்தின் இன்னருள் காட்சியே எழிலுணவு (97) என்பதனை,

"பசித்த பொழுது எதிர்கிடைத்த பாற்சோற்றுத்திரளே"[3]

என்ற பாடல் மூலம், கருணை அனுபவநிறைவே பேரின்பம் எனும் கருத்தாலும் உணரலாம். உண்ணும் உணவிலும் தின்னும் வெற்றிலையிலும், பருகும் நீரிலும் அருளை உணர்ந்தாரின் அனுபவ நிறைவே இது, 'வடித்தொன்றாய்க் கூட்டிய கனிச் சாற்றில் சர்க்கரை, கற்கண்டு, நறுந்தேன், பசுவின்பால், தனிப்பால் தீம்பருப்பிடி, நறுநெய் போன்றன அளைந்து, இளஞ்சூட்டி லிறக்கிய சுவைக்கட்டியினும் இனிதான தன்மையை நினைந்து பாடிய நிறைவே இது. இந்த அருளினிமைக்கு, எழிலுணவுக்கு நிகராக எவ்வொன்றும் ஈடாகாது என்ற எண்ணமாகவும் இருக்க லாம். இத்தகு குருவணக்கத்தால் பெறும் அரும்பயனையும் கூறுவார் புலவர் நாயகம்.

## வணக்கத்தின் பயன்

தன்னையறிந்து, தன் தலைவனை அறிந்து பின் வல்லவனோடு வன்மையாக இணைய வகுத்துக் கொண்ட இவ்வழியில் ஓரிறைக் கொள்கை மாசுபட்டதென மாய்ந்து போகக் கூடாது. நமக்கென நாயகன்பால் பணியுமாறு, இவர் தாள் பற்றிக் கேட்கும் தகைமை யிலேயே இந்நெறி அமைவது. அங்ஙனம் குருபரனையே ஒரு பரனாகக் கருதிக் கேட்குங்கால் கிட்டும் பயன்களாக, முதற்கண், ஐந்துமயங்களான அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் ஆகிய ஐஞ்செருக்காகிய மயக்கங் கள் மருவிய பாவக்கடலில் அழுந்தாது, ஆண்டகையின் புகழாகிய கப்பல் அருமையாம் கரையில் மலைவுறாமல் சேமமுடன் சேர்க்கும் என்பார்.

> "மயங்கலக்கப் பல ஆக்கம் உண்டாக மருட்பட ச
> மயங் கலக்கப் பலன் இன்றி மெய்யே பவ்வாருதியில்
> மயங்க" (42)

என ஐந்துமயங்களும் பாவக்கடலில் அழுத்தும் தன்மையைக் கூறுவார். திருவடித் துணை பெற்றால், பாவக்கடலைக் கடக்க லாம் என்பர்.

---

3. திருவருட்பா, அருள்விளக்கமாலை.

கண்டபொழுதே கதி தரும் முகம் என திருமுகச் சிறப்பை,

''கரந்தாங்கி யருள் செயு மெய்மைத் திருமுகம்'' (52)

என்றுரைத்து, மனித குலத்தைத் தீமையிற் புகுதாது, பாவிகளைக் கையைப் பற்றிக் காத்துக் கிருபை புரியும் திருமுகமெனப் பொருளும் கூறுவார். பின், புயச்சிறப்பை,

''முரண்படு நெஞ்சினர் முதுசின வெஞ்சினர்
சரண்படும் வென்றித் தார்புயர்'' (49)

என மறங்கொன்று அறம் பெருக்க, தர்க்கிப்பவர், வெகுளியர் போன்றோரைச் சரணடையச் செய்யும் தார்புயத்தார் என்பார். திருமுக, திருப்புயப்பெருமை கூறித் திருப்பதச் சிறப்பைக் கூற வருங்கால்,

''செய் வனம் மாதவம் நாகையர் சீர்பதம் சேகரமே'' (51)

என்ற பாடல்வழி நாகையதிபதியின் இரண்டாகிய நற்கழலை நல் வகையில் அனைவரும் உசப்பர் என்று கூறுவார் பெருமிதத்துடன். காரணம் அவர் வேதமணிந்த வாயர்; உலகெலாம் நிலைக்குமொரு முளையெனத் தோன்றும் நலனுறு நாமநாயகர் என்றெல்லாம் வாயூறிப் பாடுவார்.

நற்குண நாயகரின் பொற்பதம் பெற்றார் பெறும் பயன்களை மேலும் கூற வரும் போது,

''பாவையர் கண் பட்டு அம்பு அடா கம்பு காட்டுவர்'' (44)

எனக் குறித்து, அசனாரின் வீரவழித் தோன்றலாராதலின் மங்கையர் தம் கண்ணம்புப் பகை முடித்து, அடர்ந்து, வென்று, ஓர்மைப் பயன் நெறிக்கு அறிவாகிய ஊன்றுகோல் அருளுவர் எனச் சரண்படுவார். 'கூற்றமோ, கண்ணோ பிணையோ' எனக் கலங்க வும், கவரவும் ஆன விழியம்பு கொண்ட வனிதையார் கூட்டு — கழிகாமம் - ஓர்மைப் பயனெறிக்கு உதவாதென்பதை,

''தூமகேது புவிக்கு எனத் தோன்றிய
வாம மேகலை மங்கையரால் வரும்
காமம் இல்லை எனின் கடுங்கேடு எனும்
நாமம் இல்லை நரகமும் இல்லையே''[4]

என்ற பாட்லும் புலப்படுத்தும்.

---

4. கம்ப. மந்தரை சூழ்ச்சிப்படலம், பா. 29.

குருபரப்பணிவில் பொங்கும் அரும் பயன்களைக் கூறும் பின்வரும் பாடலில் புலவர் நாயகத்தின் சமயக் காதலும், ஞான வேட்கையும், மெய்ப்பொருளறிவும் தெற்றெனப் புலப்படுகின்றன.

நல்லோர்கள் ஒரு பெரும் படை போன்றவர். இப்படை நற்றவத்திற்கு நம்மைத் தூண்டி, தவப்படையைத் திரளவைத்து, தீவினை தரும் அவப்படையை நெருங்காது எதிர்த்து விரட்டி நெறிப்படுத்துவது. இதனைச் ''செய்தித் தவப்படை ஆக்கம்''(56) எனத் தொடங்கும் பாடலில் தவப்படை பற்றியும், ''செய்தித்து (பொய்) அவப்படை'' என தீப்படை பற்றியும் பேசுகின்றார். தவத்தின் ஆயுதமெடுத்த கொடிப்படைகளாக இவர் குறிப்பிடுவன புத்தியாகிய தலைவன் சேனை, துறவாகிய தலைவன் சேனை, தனையொழித்து அவனை நினைத்தலாகிய தலைவன் சேனை என நாற்படையால் நமக்குத் துணை புரியும் சேனையைத் தவப் படை எனக் குறிப்பர்.

தீவினை புனையும் அவப்படையாக, கலகங் கொண்ட உலக மாயையாகிய தலைவன் சேனை, காணத் தோற்றும் ஆணவமாகிய தலைவன் சேனை, ஏமம் பெறாத காமம் ஆகிய தலைவன் சேனை, மிகைப்பிற்செலுத்தும் அகப் பேயாகிய தலைவன் சேனை என மனித மனங்களை ஆட்டுவிக்கும் மாயப்பேய்ப் படையாய், தன் முனைப்புப் படையாய்க் குறிப்பார். இதன்வழி, தவப்படை எடுத்து அவப்படை தகர்க்கும் - உட்பகை, புறப்பகை யொக்க முடிக்கும் - ஆற்றலுடையார் நாகூர் ஆண்டகை என்பார்.

இறுதியாக நாகூரின் நாயகத்தார் தரும் உவகையானது ''இருநிதியாகி, புத்தியாகி, அளவிடா தவமுமாகி, அமுதமாகி, மருந்துமாகும் (92) என்று கூறி, உலகத்துள்ள மேன்மையும், நன்மையும், அருமையும் உடைய பொருட்களிலே விருப்பத்திற் குரியார் தரும் நற்பயன்களே இணை வைத்து நோக்கும் இன்பம் பற்றிக் கூறுவார். சீதச்சந்தம் பெய்யும் திருவிழாவில் முரசொலிக்க, ஒளிவு கொண்ட ஒழுக்கமுடையார் உடலங்கள் துன்பம் நீங்கிச் செழுமை கொள்ளும் நற்பயனையும்,

> ''மழைச் சீதச் சந்தம் தெளிக்கப் பகலரு நாகையினும் புகழ்
> சேர் முரசந்
> தெளிக்கப் பகலவிர் வாகைய ராகஞ் செழித்திடுமே'' (57)

என்று விளக்கியுரைத்து, ஒழுக்கம் விழுப்பம் தரலாகும் மேன்மையை, நம்பினார் கெடுவதில்லை என்ற உண்மையை உணர வைக்கின்றார் புலவர் நாயகம்.

இறைவனைக் குருவாயிலாகக் காணவேண்டி நின்ற தன் மையை, இதுகாறும், உணர்ந்து பாடியதன் வழியுணரலாம். "இறைவனே குருவாயிலாகத் தன்னை உணர்த்துகிறான் என்று கூறலாம். 'அல்லாஹ் தான் நாடியவர்களைத் தன் ஒளியின் பால் செலுத்துகின்றான்' என்பது திருமுறை வாக்கு... குருவுக்குக் கௌரவம் அளிப்பது அல்லாஹ்வுக்குக் கௌரவம் அளிப்பதாகும். குருவுக்கு உரிய உரிமைகள் அல்லாஹ்விற்கு உரிய உரிமைகளாம் என்று 'புதூஹாதுல் மக்கிய்யா' என்ற நூல் கூறுகிறது"[5] என்ற கூற்று குருவணக்கம் பற்றிய விளக்கத்தைச் செவ்வனே தருமென லாம். பற்றற்றவர்பால் (சற்குருவின்பால்) பற்றுக்கொண்டு பிற பற்றறுத்து ஒழுகின் இறைப் பற்றுக்கு ஆளாகலாம் என்பதையும் உணரலாம். இதனையே - இப்பற்றறவையே - புலவர் நாயகமும், தம்மைச் சார்ந்த தாய், தந்தை, மனை, கிளை, நண்பெல்லாம் ஆண்டகைக்கு அடைக்கலம் எனக் கூறி, உலக உறவுகள் யாவும் அளித்தவனுக்கே அடைக்கலம் (100) என்றுரைத்து, இறுதியில் உலகவாழ்வில் எஞ்சப் போவது ஏதுமில்லை; ஏகநாயனைத்தவிர என்பதைக் குறித்துரைப்பார். காதற்ற ஊசியும் கடை வழிக்கு வராத இவ்வாழ்வில், பற்றறுதலே இறைப்பற்றுக்கு வழி என உணர்ந்து, அதற்கு வாயிலாகச் சற்குருவைப் பற்றிய நோக்கம் இனிது புலனாகும்.

அடுத்து இலக்கியத்தில் ஆண்டகையை ஏத்திப் பாடும்போது, ஆற்றலுள்ள அகபாவ அடிப்படையிலும் பாடுவார். தனக்கும் ஆண்டகைக்கும் இடையே சற்குருவுக்கும், சீடருக்கும் இடையே முளைவிட்ட நேயபாவத்தினை, நாயக, நாயகி பாவத்திலும் எடுத்துக்காட்டி, அதன் மூலமாகவும் இலக்கியச் சுவையை எழில் பட விரித்துக் கூறுவார். தத்துவப்புதையலாகவும், சமயக் குழைய லாகவும் தோன்றும் நாகையந்தாதியை, அக அனுபவத்தை விளக்கும் அகப் பாடலாகவும் நோக்கி யின்புறலாம் என்பதையும் காட்டுவார். அகப்பெற்றி அனுபவம் புலவர் நோக்கில் விரியும் பான்மையைக் காண்போம். இலக்கிய எழில் பொங்கும் சோலை இது.

---

5. அப்துல் ரகுமான், மு. நூ. பக். XIII

## நாயக, நாயகி பாவம்

இஸ்லாமிய மெய்யறிவு நாட்டம் பரந்து விரிந்த ஒன்று. மாசற்ற அகப்புற வழிபாட்டை உணர்த்தும் அந்நெறியை இலக்கியங்கள் பலநிலைகளில் பாடவரும்போது, நாயக-நாயகி பாவத்தையும் கடைப்பிடித்தார்கள். தமிழ் மக்களுக்காகப் படைக்கப்பட்ட அந்த ஞான இலக்கியங்கள் தமிழ் இலக்கிய நெறியிலேயே, கையாண்ட வழியிலேயே, அம்மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் விதத்திலேயே படைக்கப்பட்டன. இறைப்பற்றை மக்கட் குலத்துக்குப் புரிய வைக்க இம்மைக் காதலைக் கருவியாகக் கொண்டனர். இறைநேசத்தை வலியுறுத்தி உருவாக்க அரும்பாடு பட்டனர். ஏனெனில் ''என்னை நேசிக்கின்ற மனிதன் கேட்கின்ற கேள்வியாக நான் ஆகிவிடுகின்றேன்; அவன் பார்க்கின்ற பார்வையாக நான் ஆகி விடுகின்றேன். மேலும் அவன் நடக்கின்ற காலாக நான் ஆகி விடுகின்றேன்.''[6] என்று இறைவன் கூறியதாகப் பெருமானார் கூறிய பொருள் மொழியை நோக்குங்கால் இறை நேசப் பெருமையுணர முடிகின்றது. இந்த மெய்ஞ்ஞான வாழ்வை அகப்புறத் தூய வாழ்வை, உயர் பண்பு விளக்கும் பக்குவமுடைய வாழ்வை அடிப்படையாகக் கொண்ட சூஃபித்துவமாகிய கருவூலத்தைத் தாயகமாகக்கொண்டதே இஸ்லாமியச் சமயம்.

அந்த ஞான நெறியைப் பின்பற்றிய பெரியார்கள், தமிழ் நாட்டில் வாழ்ந்த சித்தர்களுக்கு இணையான பொதுநலம் பேணுவாராய், பகட்டான வாழ்வை வெறுத்தவராய், அப்படிப்பட்ட கருத்துக்களை, உள்ளடக்கி, ஞான இலக்கியங்களை உருவாக்கினர். அப்போது அதை எளிய மக்களும் புரிந்து கொள்ளும் விதத்தில், அனைவரும் அறியும் அளவில், நாயக-நாயகி பாவத்தில் எழுதினர். சிற்றின்பம் மூலம் பேரின்ப விளக்கம் தர விழைந்தனர்.

தத்தம் பொறுப்பும், கடமையும் உணர்ந்து ஒருவர் பிறருக்காக அன்பு செய்தும், ஆட்பட்டும், உருகியும், உருகவைத்தும் உருவாகும் காதல் என்பது நேரிதான அனுபவமாகும். அதனை அடிப்படையாக வைத்து, கருத்தொருமித்த அந்த ஆதரவுபட்ட நல்லின்பத்தின் வழி, மெஞ்ஞானப் பற்றை விளக்க வரும்போது கூறவந்ததைத் தெளிவுறக் கூறி வெற்றி அடைகின்றார்.

---

6. மு. அப்துல் கறீம், **இஸ்லாமும் தமிழும்** (சென்னை, 1982), பக். 90.

பாட்டுடைத் தலைவராக இறைவனையோ, இறையீடு பாட்டாளரையோ தலைவனாக்கித் தன்னைத் தலைவியாக்கிப் பாடுகின்ற நாயகநாயகி பாவத்தில் பக்தி உணர்வும், மெய்யன்பும் செறிவாகக் கூறப்பெறுகின்றன. இதுவன்றியும் நாயக நாயகி பாவத்தில் சில சூஃபிகள், இறைவனை நாயகியாகவும், தன்னை நாயகனாகவும் கருதிப் பாடுவர். இதுவும் தமிழிலக்கிய மரபை ஒட்டியதே. இவற்றில் நாகையந்தாதி, ஞானகுருவைத் தலைவனாகவும், பாடும் புலவனைத் தலைவியாகவும் வைத்துப்பாடும் அகத் துறையைச் சார்ந்தது.

ஜீவான்மா, பரமான்மாவோடு இணைதற்குச் செய்யும் முயற்சியை சூஃபிகள் ஆன்மாவின் பயணம் என்பர். "ஆன்மா கடக்கும் படிகளைப் பொதுவாக ஏழென்று கூறுதல் மரபு. முதற்படி மானுடம். (உபூதிய்யத்) எனப்படும். பயணி தன் பாவங்களுக்கு வருந்தித் தன் ஆன்மாவைத் தூய்மைப் படுத்துதல். இரண்டாவது படி காதல் (இஷ்க்). பொறி இச்சைகளைத் துறந்து இறைக் காதலில் ஆழ்தல்."[7] என்றுரைத்து துறவு, ஞானம், பரவசம், சத்தியம், ஒருமை போன்ற பிற படிகளையும் கூறுவர். இந்த ஏழு படிகளையும் கடந்த ஜீவான்மாவே 'தான்' என்ற நிலை மறந்து பரமான்மாவோடு ஒன்றி அத்துவித நிலையடையும் என்பர். அவ் விதத்தில் இறையோடு கலப்பதற்கு இறைக்காதல் புரியும் அருந் துணை அறியலாம்.

ராபியத்துல் அதவிய்யா என்ற பெண் சூஃபி ஞானி, "இறைக் காதல் என்னை முற்றிலும் ஆட்கொண்டு விட்டது. எனவே வேறு எதன்மீதும் எனக்கு விருப்போ வெறுப்போ இல்லாமலாகி விட்டது."[8] எனத் தன் பக்தி நெறிக்கு இறைக்காதலே முதற் காரணம் எனக் குறிப்பார். எனவே பக்தி இலக்கியத்தில் அகபாவத் துடன் சித்திரிக்கப்படும் அனுபவம் பெருகியது. "இந்திரியங்களின் துணை இன்றி, சிந்தனை நிலையில் சிற்றின்பத்தைப் பேரின்பமாக மாற்றவல்ல ஒரு வித்தை இது"[9] என்று கூறி, இத்துறையில் விளக்கப்படும் கருத்து எளிதில் சென்று சேரவல்லது என்பதையும் உணர்த்துவார்.

---

7. அப்துல் ரகுமான், மு. நூ. பக். XII
8. மு. அப்துல் கறீம். மு.நூ. பக். 90
9. ந. சுப்பு ரெட்டியார், (வைணவ இலக்கியக் கருத்தரங்கில் தெரிவித்த கருத்து), **தெய்வத்தமிழ்**, ந. சஞ்சீவி (ப.ஆ) ப. 543

நாகை அந்தாதியிலும், ஆண்டகையின் பால் தாம் கொண்ட ஆராக் காதலைக் கூறவரும் புலவர் நாயகம் அகக்குறிப்பு முறையைக் கையாளுவார். தலைவன் தந்த நோய்த்தனிமை, மேனி நலம் வேறுபட்டதுணர்ந்து ஆற்றாமை கொள்ளல், தலைவன் வரவுக்குத் தாமதக் காரணம் வினவல், அலர் தூற்றல், கடைக்கணோக்கம் வேண்டல், பசலைபடர் மெலிவு உரைத்தல், வண்டுவிடு தூது, தென்றல் விடு தூது எனப் பல அகக்கூறுகள் இடம்பெற்று, நாயக - நாயகி பாவத்தைச் செவ்வனே விளக்குகின்றன.

தலைவனும், தலைவியும் களவில் காணுங்கால், காட்சி, ஐயம், தெளிவு அனைத்தும் கண்டு தேர்ந்து, பின் தங்கள் இருப்பிடம் மீள்வர். இதுநாள்வரை உணர்ந்திராத தனிமையானது தலைவியின் உள, உடல் வேறுபாட்டுக்குக் காரணமாகி, பிரிவு நோயைத் தருகின்றது. அதனை ஒரு பாடலில்,

''தன் மயம் நாட்ட அம்பதி நாகை யண்ணல் தம்பால்
வைத்தகா
தன் மயல் நாட்டம் மனமும், சோகம் சந்தாபம் அயர்
தன் மயல் நாட்டம் துயிலாமை யாவுந்தர'' (65)

என்று கூறி, செவிலியானவள் தன்னினிய மகளின் வாட்டமுணர்ந்து தோழியின் பால் தலைவி கொண்ட செயலறவு பற்றிக் கூறுவாள். 'மௌனமும், சோம்பலும், வெப்பமும், உடலயர்ச்சியும் உள்ளுழற்சியும், விழிகள் துயிலாமையும் அன்றி மற்றை மெய்ப்பாடெல்லாம் தருகின்றதால் தனிமைத் துயரத்தை அந்நாட்டில் தலைவி எங்ஙனம் பொறுப்பாள்' என்று நினைக்கின்றாள். அன்பு கொண்டார் தம் உள வேறுபாட்டால், உடல் மாறுபடுதலும் இயற்கைக்காக அயர்ச்சி கொள்ளுதலும் இயல்பாகின்றது.

சீறாவில் அழகு வெள்ளமாம் கதீஜா நாயகியார் கொண்ட தனிமைத் துயரைக் கூறுங்கால்,

''பஞ்சணை பொருந்தார் இருவிழி துயிலார்
பழத்தொடு பாலமு தருந்தார்
கொஞ்சுமென் குதலைக் கிளியொடு மொழியார்
கொழுமடற் செவிக்கிசை கொள்ளார்

கஞ்சமென் மலர்த்தாள் பெயர்ந்திடவுலவார்
கடிமலர் வாச நீராடார்
வஞ்சி நுண்ணிடையார் தம்மிடத் துறையார்
முகம்மது மனத்திடத் துறைந்தார்''[10]

எனத் தாப நிலை மேலிட்ட தலைவியர், துயிலார், உண்ணார், மொழியார், இசையில் மூழ்கார், உலவார், நீராடார் என, அத்தகு மங்கையர் கொண்ட மயக்கம், ஓவாது நினைத்தல், சோம்பல், சோகம், உடலயர்வு, உள்ளுழற்சி என அனைத்து மெய்ப்பாடு களையும் அதனால் உண்டாகும் செயலறவுகளையும் ஒருங்கே யுணர்த்துவார்.

நாகை மகீபதியின்பால் அன்புவைத்த தம் நெஞ்சம் இப்படித் தாப நிலையுற்றுத் தாளாது வருந்துதலைப் பாடல் வழி, புலவர் தெரிவிக்கின்றார். ஊர் துஞ்சினும் தலைவி துஞ்சா நிலையினை,

''நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கள் முனி வின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே''[11]

என்று ஊருறங்கினும், விழிகள் துயிலாமையை விளக்குவார்.

இங்ஙனம் அன்பு பூண்ட தன்மனத்து ஆவலைப் புரிந்து கொள்ளாதது ஏன் என்று, தோழியோடு வினவுவதுபோல் ஒரு பாடலை அமைக்கின்றார். அதில் உறவை உருவாக்கிய தலைவன் உரிமையாகத் தான் அளித்த மேனியின் வண்ணத்தை, இப்படி வாட வைத்தானே எனக் கலங்குவதை,

''ஏன் இவந்தம் அளித்து உளம் வாடத் தமக்கு உரிமை
தரும் மேனி வந்த பசலையுங் காண்கிலர் தார்குழலே'' (62)

என்று பாங்கியிடம் தலைவி கூறுவது போலவும், மாறுபட்ட இப் பசலை வண்ணத்தை, இதுகாறும் காணாதிரா நின்ற தன்மைக்கு - தன்னைக் காண வாராமைக்கு - யாது காரணமோ என்று வினவுவது போலவும் பாடுகின்றார் புலவர் நாயகம்.

'பொறையரு நோய்' தந்த காதலன் விட்டுழி விட்டுழித் தோன்றி, தொட்டுழித் தொட்டுழி விலகும் பசலையின் ஆதிக்கம்

10. சீறாப்புராணம், பா.
11. குறுந். 6

பெண்டிரின் மேனியை ஆளவந்தால் தலைவி கொள்ளும் தன்னிரக்கநிலை பெரிது. மாமை உருவினை மாய்க்க வரும் பசலை குறித்து,

''திதலை மாமை தளிர் வனப் பழுங்கப்
புதலிவர் பீரினெதிர் மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலேனாகி...''[12]

எனப் பேதுற்ற நிலை கூறுவார். தலைவராகிய ஆண்டகைக்குத் தம் உடல், பொருள், ஆவியைக் காணிக்கையாகக் கொடுத்தும் அவர் பிணிதந்து வருத்துவதை, பிரிவு நோய் வருத்தம் மிகுந்து பசலைபடர்ந்த மேனி என்று புலவர் நாயகம் கருதியிருக்கக் கூடும். எனவேதான் கண்கொண்டு பாராரோ என வினவியிருக்கலாம்.

ஊரிலே இக்களவினால் அலர் பரவியமையை,

''அலர்வன மாமையுருவினர் சீர்த்தி அணிகவியின்
அலர் வனமாலை புனைதலினாற் பல வாயத்தின்பொய்
அலர் வனம் ஆய இரத்தல் எவ்வாறு இனி?'' (18)

எனும் பாடலில் ஆண்டகைக்குக் கவியாகிய வனமாலை சூட்டிய தால், ஊரில் பலவாயிடத்தே அலராகிய காடு தழைத்துப் படர்ந்தது; அவரிடம் சென்று எப்படி இரப்பேன்? எனப் பொருள் தருவார். அவர்மீது பிரபந்தம் பாடியதால் அடிமையென்று ஆகி விட்ட தன்மை குறித்து, இதனால் அலர் பரவியதால் தான் இனி நெருங்கி இரப்பது எங்ஙனம் எனத் தவித்து, எவ்வாறாயினும் அடிமையைக் காத்தல் ஆண்டகைக்கே உரித்த கடன் என்று அருளிரக்கும் தலைவி போல் அலமருவார்.

இங்கு 'பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்' என்றாற் போல, பிரியாத வாழ்வுக்கு அலர்படாத வாழ்வுக்கு - ஆளாகும் நாட்டத்தினால் வாடுதலாகிய குறிப்புண்டு. அலர் குறித்து ஆற்றாமை அடைதலை,

''சுரனே சென்றனர் காதல ருரனழிந்
தீங்கி யான் றாங்கிய வெவ்வம்
யாங்கறிந் தன்றிவ் வழுங்கலூரே''[13]

என்று அகப்பாடலும் கூறும்.

---

12. அகம், 135
13. குறுந். 140

மேலும் நாகையின் வாழ்வுடை வள்ளலின்பால் தான் மயக்கத் தாற் புனை நலம் பேணாது, நிறையும் நாணுமழிய, இல்லிருத்த லாகிய மாட்சி சுமந்து பிரிவில் இரங்கி வாடியிருக்குமளவும் தலைவன் தாமதிப்பதன் காரணம் யாதோ என்பதை,

"......மம்மரால் அணி வா
மம் திரங்கா நிறை நாணழியா இல்லின் மாட்சிமைசு
மந்து இரங்கா நிற்பத் தாமதியார் என் மடக்கொடியே"(38)

என்று கூறித் தலைவனில்லாக் காலத்தில் துயராற்றி இல்லிருத்த லாகிய முல்லை சான்ற கற்பொழுக்கத்தைக் குறித்து, இதன்வழி எத்துயர் ஏற்படினும் ஏக இறைவன்பால் இச்சித்தலாகிய நேயம் மறவாச் சிந்தையை எடுத்துரைப்பார். நிறையும், நாணுமழிந்த நிலையினை,

"நாணட்டு நல்லறிவிழந்த் காமம்"[14]

என்று கூறுவது அகப்பாடல்.

இதற்கு மருந்தாக ஆண்டகையின் கடைக்கண் அருளப் பெற் றால்,அன்புத் தாகமேலிட்ட தான் உய்தற்கும், அலர் தீர்தற்கும், நோய் தணிதற்கும், பசலை பிரிதற்கும் வழியுண்டு என்பதனை,

"மோகத்தா தவனம் கைப்பால் அலைவேனைக் கருத்தன் சமு
கத்தா தவம் நகைப்பால இரட்சி கடைக்கணித்தே" (70)

என்ற பாடல் வழி, மோகக் கசப்பில் உழலுந்தனக்கு, பிரிந்து றையும் வாழ்வைவிடக் கடைக் கண்ணளித்து அருளப்பெறும் இனிய வாழ்வைத் தந்தருள வேண்டுமென இரப்பது விளங்கு கின்றது. 'யானை கைமடித்துயவும் கானமும் இனியவா" எனக் கருதி வாழும் எண்ணமேயிது. எல்லாம் வல்லவனிடம் ஆண்டகை தனக்கென மனங் குவித்து இரக்கும் இரட்சித்தலை அருளவேண்டு மென்ற புலவர் கொண்ட ஆவல் இதனால் விளங்கும்.

தலைவனின் கூட்ட இடையறவினாலும், பிரிவு நீட்சி யினாலும், நோதலுற்ற மேனி பசலை பூத்தலையும், அதனால் சுற்றுப்புறச் சூழல்கள் தன் அயர்ச்சியை மிகுவித்தலையும்,

---

14. குறுந். 231

"கொண்டற்கு அளிக்கும் கடற்கும் மதிக்கும் குயிற்கும் அக்
கொண்டற்கு அளிக்கும் மலர்க்கும் அலர்க்கும் குழற்கும் திசை
கொண்டு அற்களிக்கும் அயர்வாள் பசலைக் குணம்பலவும்
கொண்டல் களிக்கும் திருநாகையர் செய்த கோலமன்றே"(81)

என்று கடல், மதி, குயில், தென்றல், வண்டு, மலர், அலர் தூற்றல், ஆயரது குழலோசை, இரவு போன்றன இவளை அயரவைக்கவே, துன்பத்தால் நிறம் பேதித்துப் பசலையுற்றாள் என்பர். உலகப் பொருட்கள் தனக்கு இன்பம் விளைத்தலுக்கு மாறாகத் தீராத் தவிப்பையே பெருக்கின எனக் காட்டுவார். இதனால் உலக இனிமைகளில் நாட்டமிராதது மட்டுமின்றி அவற்றால் துன்புறு கின்ற தம் சிந்தையையும் புலப்படுத்துவார்.

இப்பாடலில் மேனியை ஒளியிழக்கச் செய்யும் பசலையைக் கூட, தலைவன் கொடுத்தது என்றதால், 'ஒப்பனை' என்று பெரு மிதத்தோடு உணரும் தன்மை புதுமையானது. அன்றியும் தலை வனைப் பசலையாகிய இக்கோலம் அளித்தீரே எனப்புகழ்வது போலப் பழிப்பது என்றும் பொருள் கொள்ளலாம்.

தனிமைக் காலத்தே தென்றல், கடல், மதி, குயில் போன்றன துயரை மிகுவிக்கும் என்பதனை, மன்மதனை முன்வைத்துப் பாடும் குறவஞ்சிப்பாட்டில்,

"இந்தச்செக்கரும் பாவி நிலாவுமே போதாதோ......
திக்கெலாம் தென்றற் புலி வந்து பாயுதே...
குயிற் சின்னம் பிடித்தபின் அன்னம் பிடியாதே"[15]

எனக் காட்டுவார். திருவாய் மொழியிலும்,

"மல்லிகை கமழ் தென்றலீருமாலோ
வண் குறிஞ்சி மிசை தவழுமாலோ
செங்கதிர் மாலையும் மயக்குமாலோ
செக்கர் நன் மேகங்கள் சிதைக்குமாலோ"[16]

என்று இயற்கையினில் விளைந்த அயர்ச்சியினைக் கூறுவார். பெண் ணுடன் பிறந்த வெண்ணிலவு, தண்ணமுதுடன் பிறந்த வெண் ணிலவு, பெண்மையைக் காய்தல் என்ன நீதி என வினவும் பாங்கும் உணர்த்தப் பெறுகின்றன.

---

15. திருக்குற்றாலக் குறவஞ்சி, பா. 34.
16. திருவாய்மொழி மல்லிகை - 1.

பின்வரும் பாடல்களில் உள்ளக் கிடக்கையை எடுத்தோத அஃறிணைப் பொருள்களை - வண்டினை, தென்றலை - தூதாக விடுக்கும் குறிப்புகளைக் காணலாம். உயர்திணை உயிர்களிடம் உரைப்பின் காரண காரியத் தொடர்பு, விளக்கம் போன்றன அளிக்க வேண்டும் என்பதற்காகத் தனித்த முறையில் அஃறிணை உயிர்களோடு மனம்விட்டுப் பேசித் தூதனுப்பும் குறிப்பினை உணரலாம். வண்டினைத் தூதாக அனுப்புங்கால்,

> ''தாமதியா கருணைப் பெற வெந்துயர் சாற்றிப் பொற்றோள்
> தாம தியாகம் இன்னே வாங்கி வம்மின் கள்சார் பிரபந்
> தா மதியாகப் பிணி நீங்கு எனச் சஞ்சரீகங்களே'' (22)

எனப்பாடுவார். தாமதிக்காது கருணையுடன் பொற்றோள் மாலை பெற்று, என் துயர் சாற்றி வாருங்கள் என்பார். அதுபோல்,

> ''செழியன் அகமலையாய தென்றால் வரு செந்தமிழுஞ்
> செழிய நகமலையாச் சுடர் கீர்த்திச் சிறந்தமையால்...'' (58)

நாகையாரின் உடலில் ஒளியுடைப் புளகஞ் செய்தலோடு, என் துயரும் கூறுக என்று தென்றல் தூதையும் மொழிவார் புலவர் நாயகம்.

> ''அருளாத நீரருளி அவரா விது வராமுன்
> அருளாழிப் புள்கடவீர் அவர் வீதியொரு நாளென்று
> அருளாழி அம்மானைக் கண்டக்காலிது சொல்லி
> அருள் ஆழி வரிவண்டே யாமும் என் பிழைத்தோமே''[17]

என்று வண்டை நோக்கித் தூதுவிடும் பாடல் மரபு இலக்கியத்தில் இயல்வது பற்றிப் புலவர் நாயகமும் பாடி அமைகின்றார். புண்ணியத் தென்றலைப் பொதியத் தென்றல், தமிழ்த்தென்றல் எனப்புனைவர். உயர்ந்த பொருளையே தூதாய் அனுப்புவர் என்பது இதனால் அறியலாம். புலவர் நாயகத்துக்குத் தமிழ்ப் பற்று மிக்கிருந்த தன்மையினை, பொதியமலைத் தமிழ்த்தென் றலே என விளித்து, மலை விளக்குப்போல தமிழின் புகழ் எங்கும் சிறந்திருந்தது என்பார்.

இங்ஙனம் பாடப்படும் நாயக, நாயகி பாவத்தில் எளிதாகச் சொல்லவாரா உணர்வுகளை, ஆற்றலுடன் விளக்குகின்றார்.

17. திருவாய்மொழி 6

''காதல் மற்ற உறவுகளையும் உதறச் செய்யும் பேருணர்வு - தியாகம் செய்யத் தூண்டும் புனித உணர்வு. இறைவனிடம் தொடர்பு கொள்ளஇதைவிடச் சிறந்த உறவு வேறென்ன இருக்க முடியும்''[18] என்ற கூற்றின்படி விருப்பமானவரிடம் கொண்ட உறவின் பெருமையைக் கூறுதற்கு நாயக-நாயகி பாவம் பெரிதும் கை கொடுத்து உதவுகின்றது எனலாம்.

## கற்பனையும், கருத்தும்

கற்பனைகள் நூலின் அழகுணர்ச்சியை மிகுவிக்கின்றன. உணர்தலும், உணர்ந்ததைப் பிறருக்கு உணர்த்தலுமே இலக்கியத்தின் ஆற்றல் மிக்க கூறுகள். புலவன் தான் உணர்ந்ததைப் படிப்பவனுக்கு உணர்த்த வருங்கால் தன் குறிப்பை ஏற்றியும், உணர்வு நவிற்சியோடு உரைத்துச் சொல்ல கற்பனையின் துணையை நாடுகின்றான். அரிய சொல் வல்ல புலவனின் புலமையைச் சோதிக்கும் களமாகவே கற்பனை அமைகின்றது. இதனை (கற்பனையை) வென்றவன், எதனையும் வென்றவனாவான்; குறிப்பாகக் காலத்தை வென்றவனாவான். புலவர் நாயகமும் இயற்கை வருணனையில் தோயும்போது சிறந்த கற்பனைகளையும் வடித்துத் தருகின்றார்.

## கற்பனை வளம்

நாகைப்பதி வயலும், பொழிலும், தடமும் சூழ்ந்த பதியாதலின், புலவரின் கற்பனைத் திறனுக்கு வளமான புலத்தையமைத்துத் தருகின்றது. முடிந்த நாற்றுக்கள் வயலெங்கும் கிடக்கின்றன. அவ்வயலில் ஏரடிக்கின்றார்கள். அங்குப் பொதிந்துள கரும்பினது கணுக்கள்தெறித்து, முத்துக்களைச் சிதறவே, அவை இராக்காலத்திற் செறிந்தஇருளை ஓட்டி ஒளியைக் கட்டும் மல்லல் மருதமாயிருந்தமையை,

''படர் பாயிருள் சீப்பது இக்கு மணிமுடி நாற்றெங்கும்'' (3)

என்றும், பிறிதொரு பாடலிலும் கரும்பினின்று சிதறிய முத்துக்களை மகளிர் அம்மானை ஆடுதலை,

''கண் இக்கு ஒடியமுத்து அம்மானை ஆடும்'' (66)

என்றும் கூறுவதினால் முத்துப் பிறக்கும் கரும்புப்பணைகள் சூழ்ந்த வயல்வளக் கற்பனையைப் பாடுவார் (இக்கு - கரும்பு)

---

18. அப்துல் ரகுமான், மு. நூ. பக். XIV

கரும்பில் மட்டுமல்லாது, தாமரையிலும் முத்துக்கள் பிறக்க, அவ் விருவகை முத்துக்களையும் எளியார் கைநிறையக் கொடுக்கும் உழத்தியருடைய நாகூர் என்பதனை,

''கரும்பும் கமலமும் தந்த முத்து ஏழையர் கைநிறைக்கும்'' (72)

உழத்தியர் உளர் என்றும் கூறுவார். மேலும் நெல்லிலும் முத்து பிறப்பதை,

''தண்வயல் மாமணியும்'' (89)

எனும் பாடலில் கூறுவார். கமுகமரங்களினின்றும் முத்துதிர்தலை,

''கமுகின் பழக்குலையின் பாக்கு அலையாமுத்துதிர்
பொழில்'' (5)

என்ற பாடலிலும், வலம்புரிச் சங்குகள் ஊர்ந்து முத்தளிப்பதை,

''சங்கம் தரமணி முன்றிலின் நாகை'' (32)

என்ற பாடலிலும்,

''பொன்மெய் வளைகுவித்த ஆரம்'' (80)

என்ற பாடலிலும் ''வெள்ளை வண்டு (சங்கு) ஆரம்'' (90) என்ற பாடலிலும், வலம்புரிச் சங்குகள் முத்தீன்ற பெருமையைக் கூறுவார். இதுபோல் கரும்பு, தாமரை, நெல், கமுகு, சங்கு முதலான பொருட்கள் முத்தீனும் பெருமை பெற்றதால் வளஞ்செறிந்த நாகை என கற்பனைத் திறத்துடன் பாடுவார். உண்மையில் இவற்றில் முத்துப் பிறக்குமா என்பது குறித்து அறிவியல் வழி ஆராய வேண்டுமெனினும், புலவர் ஈண்டு இங்ஙனம் குறித்ததன் காரணம் கரும்பு முதலான பொருட்கள் எல்லாம் உயர்ந்து செழித்த தரத்துடன் இருந்தமையால் அவற்றில் முத்துக்கள் பிறழ் வதன் மூலம் அந்த உயர்வளச் சிறப்பைக் கற்பனை செய்து பாடு வார். முத்துக்கள் பிறக்குமிடமாக இருபது இடங்களைக் குறித்த ஒரு பழம்பாடல்:

''தந்தி வராக மருப்பிப்பி பூகந்தனிக் கதலி
நந்து சலஞ்சல மீன்தலை கொக்கு நளின மின்னார்
கந்தரஞ் சாலி கழை கன்ன லாவின் பல் கட்செவி கார்
இந்து வுடும்பு கரா முத்தமீனு மிருபதுமே''

என்ற பாடலில், பன்றிக்கொம்பு, யானைத்தந்தம், சிப்பி, கமுகு, வாழை, நந்து, சங்கு, மீன்தலை, கொக்கு, தாமரை, பெண்களின் கழுத்து, நெல், மூங்கில், கரும்பு, பசுவின் பல், பாம்பு, மேகம்,

சந்திரன், உடும்பு, முதலை போன்றன முத்துக்களைப் பிறப்பிப்பன என்பார். இவ்வரிய முத்துப் பிறக்கும் தகுதியுடைக் கரும்பும், கமுகும், செந்நெலும், சங்கும் முத்தீன்ற நாகூர் என கற்பனைத் திறனோடு பாடுவார்.

ஊர்ச்சிறப்பு கூறவருமிடத்தில், பண்டைய இலக்கியங்களில் நூற் தொடக்கத்திலேயே நாட்டு, நகரப்படலம் பற்றிக் கூறிக் காப் பியத்தை அமைப்பர். அதுபோல் இவ்வந்தாதியிலும், ஞான குருவின் மரபுத்தொன்மை கூறி, அடுத்து ஆண்டகை பிறந்த ஏழிற் பதி குறித்து,

''பதிக்கு மணிமுடி மீதே சிறக்கும் பருமணிப் பேர்
பதிக்கும் அணி'' (3)

எனக் கூறுங்கால் அரசரும் சூடும் மாணிக்கம் எனும் பேர் கொண்ட பதிஉலக ஊர்க்கெல்லாம் அணி எனுங்கால்,

'பட அரவரசனாம் ஆதிசேடனின் திருமுடி மணியைப் பதித்தது போன்றிருக்கும் மக்கமாநகரம்' எனும் சீறாவின் வாக் கோடு இணை வைத்துணரலாம்.

ஆண்டகையின் புகழ் இரும்பாலாகிய கடலைப் பயிறாயிருப் பினும், என்னுடைய நாவு மெழுகாயிருந்து இன்பம் பெறும் எனுங் கால்,

''நும்மிசையெனினும் இருப்புக் கடலை என் நாமெழுகேனும்
இன்பம் பெறுங் காண்'' (9)

என்றுரைத்து, இரும்பால்ாகிய கடலை நாவாகிய மெழுகில் பொருந்தும் எனப் போற்றிக் கூறும் கற்பனை அழகானது.

பெண்களின் வண்டு மொய்க்கும் அன்றலர்ந்த பூச்சூடிய குழலின் மணிநிறத்தால், ஏழுலகும் இருள் கவிந்ததென்பார்.

''அரிக்கும் அரிக் குழலாலும் உலகேழு மமையுமிருள்
அரிக்குமரி'' (13)

என்பதே அப்பாடல்.

மாமரம், பலாமரங்கள் செறிந்த தோப்புச் செல்வமுடை நாகூர் என்பதை,

''மாம்பிர நல் ஆசினி மைத் தண்டலைத் திருநாகை'' (15)

என்றுரைப்பார். இஃது,

'சோனை மாமுகில் தவழும் மயிற்குலம் ஆடுகின்ற
நாண்மலர்களில்
தேன்ததும்பி மலர் செறிந்த சோலை சூழ்மக்கம்'

என்ற காசீம் திருப்புகழில் இடம் பெறும் கற்பனையோடு இணைத்து நோக்கலாம்.

நாகைப் பதியின் வளம் முழுக்க வயலால்தான் என்பதைக் கூறும்போது, அம் மருதப்பரப்பில் ஆவின்பாலும், பூவின் தேனும், கனியின் சாறும் பாய்ந்து வளப்படுத்தியதால்தான் என்று சிறப்பு செய்வார். அதை அழகாகக் கற்பனை செய்தும் பாடுவார். எருமைகளின் இயக்கத்தால் வளஞ்சிறந்த மருதம் என்பார். 'எருமைகள் தடாகத் தாமரை மலரைக் குதட்டும் கடைவாயில் தேன்சிந்தும் நாகை' (26) என்றும், 'தடாகத்தில் உழக்கும் எருமையின் மடியிலொழுகு பால் வாய்க்கால் வழியோடி ஈரப்பதப் படுத்தும் வயலுடை நாகூர்' (45) எனும்போதும்,

''மாங்கனியின் செழுந்தேன் வெள்ளம் மடையினைச் சாடிச் சென்று வயல்களில் பாயும்'' என்ற ஆலிப்புலவர் தம் கூற்றாலும் உணரலாம்.

மேலும் பெண்ணெருமைகளின் மடியினின்று பெருகி வழியும் பால், அரியதேன், கனிக்கூட்டத்தின் சாறு அனைத்தும் ஒருசேரத் திரண்டோடி பொழிலின் கண்செறியும் (70) என்பதை,

'தேமாவின் அமுது, பழுத்து ஒழுகுங் கனியின் சாறு, தேன்
அனைத்தும் ஒழுகி, விரைந்தெழுந்து தண்பணை வயலூடே
ஆவினங்களின் மடிசுரந்து வீழும் பால்வெள்ளமும்
தழுவத்தோன்றும் வயல் சூழ்ந்த வளமையாமைக்கம்'

என்ற காசிம்புலவரின் திருப்புகழ்ப்பாடற் பொருளோடு இணைத்துக் காணலாம். இத்தகு நலம் சூழ் நாகைப்பதி குறித்துக் கூற வரும்போது,

''சந்தனம் போதகில் குங்குமஞ் சண்பகந் தாந்தவழ் வ
சந்தன் அம் போர்த்த மணி மாட நாகை'' (20)

என வாசமரங்களை ஊடுருவும் தென்றலும், அழகும் ததும்பும் திருநாகை என்பார். மணிகள் பதித்த மாளிகைகள் மலைகளைப் பொருவும் எனும்போது,

"கனகத்தின் மணிகள் நித்திலம் பாடுமரகதம் நீலம்
கதிர்செய் பலகணித்து இலம்பாடு மலை பொரு
நாகைக் கரும்புயலே" (71)

என்பார். அழகிய கற்பனை சுடர்விடும் பகுதிகளாக இவை உள.

கள்வரையும் செவ்வியராக்கும் ஆண்டகையின் செம்பாதங்கள் நடந்து சென்றால், களாவும் (முள்மரம்) அரிய பாலையும் உடனே பழுத்துத் தேனினைச் சிந்தும் (59) எனப் பாடுவார். தண்ணாகை வாழ் தகையாரும், தாமும்,

"மோதத்து அளிக் குஞ்சரத் தாயாதி கன்றொத்த
தன்மையற்கே" (64)

என யானைத்தாயும், கன்றுமாய் அமைந்த நிலை கூறுவார். பொருள் பொதிந்த கற்பனையிது. பாசத்துக்குப் பசுவையும் கன்றையும் கூறுவதே மரபு. ஈண்டு யானையையும் அதன் கன்றையும் கூறுவார். ஆண் யானை, பெண் யானைபால் ஈடற்ற அன்பு கொண்டு ஒழுகுவது, பாலையில் தின்னத்தழை பறித்துத் தருவது, ஈன்றணிமைப்பட்ட காலத்தில் வருத்தந்தீர உணவுதந்து காப்பது போன்ற செயல்களால் அதன் பாசப் பெருமையைக் கூறுவர். அந்த நோக்கோடு யானையாக ஆண்டகையையும், கன்றாகத் தன்னையும் கற்பித்துப் பாடுவது அழகிது.

ஆண்டகையைக் கேசாதி பாத வருணனையாகக் கூறும்போது,

"மலர் அளித் தாரின் நறுங்குஞ்சியார் புவி மன்பதை பால்
மலர் அளித் தாஅங் கருணைக் கண்ணினார் மையலற்ற நிரு
மலர் அளித்தாளுந் திருநாகையார் மலிசீர் பதக் க
மலர்......" (35)

என்ற பாடல்வழி நறுங் குஞ்சியார், கருணைக் கண்ணினார், சீர் பதக் கமலர் என்றுரைப்பார்.

மேலும் 'நெற்றிச்சுட்டி போன்ற நாகூர்' (29); 'பூமிக்கு ஆபரணம் போன்ற நாகூர் (53); "விண்போல் மலர்ந்த பண்ணை" (14); 'வயலில் சங்கும், முத்துக்களும் மதியும், தாரகைக் கணமும் போலிருக்கும் நாகூர்' (23); 'நறவாம் மழை நந்தனம் சூழ் நாகை' (50), 'வாய் அலர் வனம் ஆய' (18) போன்றன சிறந்த கற்பனைகள். இவையேயன்றி அறிவாகிய அறுபத்து நான்கு கலைகள் (74); நோயால் எழுந்த பசலை நாயகம் தனக்குச் செய்த ஒப்பனை (81);

நடையுள பொருளுக்கெல்லாம் ஆபரணமாகிய கை' (83) போன்றன புதுமையாய் எழுந்த அரிய கற்பனைகள்.

## கருத்து நலம்

உயரிய கருத்துக்களின் திரட்சியே இலக்கியம் எனலாம். இலக்கியத்தின் ஊடாகப் பல்வேறு துறைப்பட்ட கருத்துக்களைச் செய்தியாகச் சொல்லுதலே முறை. குறிப்பாகச் சமய இலக்கியங் களில் இக்கருத்தோட்டம் என்பது இயல்பாகவே கலந்து விடுகின்றது. இலக்கியத்தின் உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் எனும் நான்கு தூண்களுள் கருத்து தவிர ஏனைய மூன்றும் இலக்கியச் சுவைக்குப் பயன்பட, கருத்து ஒன்று மட்டுமே வாழ்வுக் குப் பயன்படும் தேவையுடையதாகின்றது. வாழ்க்கைக்கு நன்மை களைச் செய்வது இலக்கியத்தின் அரும்பணியாகவும் உள்ளது.

இஸ்லாமிய இலக்கியங்கள் வாழ்வியல் ஒழுங்கு முறைகளை, மெய்ஞ்ஞான அனுபவத்தை, வாழ்வில் கொள்ளத்தக்கன எவை, தள்ளத்தக்கன எவை என்பன குறித்துப் பாடற்பொருளை அமைப்பன. புலவர் நாயகமும் அந்தாதியின்கண் அடிப்படை யாகப் பல அரிய கருத்துக்களைக் கூறுவார். நோயினால் பெரிதும் நோதலுற்ற நெஞ்சத்துடன் பாடியதால் துயரின் எல்லையில் அவருக்குப் பிறந்த கருத்துக்கள் ஏராளம். சில உலக மாயையை வெறுத்துரைக்கவும், சில அவற்றை விலக்க வேண்டியும், சில உலகம் படைத்துத் தந்த பல இடர்கள் குறித்தும், அதற்கு மாற்று குருவணக்கம் மூலமாகப் பெறவிழையும் அருளுணர்வு குறித்தும் மொழிவார்.

பலரும் பற்றாக - உறவாக இருந்து ஆவதேது என்று மனஞ் சலித்துப் பேசுங்கால்,

> ''பற்றாம் பலருமிருந் தாவதென்னை பகைப்பிணியால்
> பல் தாம்பு அலம்பும் துரவாய உள்ளம் பயன்பெற'' (6)

என்று பாடி, பலர் உறவாயிருந்தும் ஆவதொன்றுமில்லை, பகைப் பிணிகளாகிய பல கயிறு விடப்பட்டுத் தளும்புகின்ற கிணறு போன்ற என்மனம் பயன்பெற வேண்டுமெனில் ஆண்டகையின் பல்தாம்பூலம் - வாய்ச்சொல் மந்திரம் - திருவருள் - வேண்டும் எனக் கூறுவார். பட்டினத்துப் பிள்ளையார் பாடலொன்றில்,

''மனையாளு மக்களும் வாழ்வும் தனமும் தன் வாயின்மட்டே
இனமான சுற்ற மயான மட்டே வழிக்கேது துணை'' [19]

என்று பல உறவுக் கிளைகள் சூழல்கள் இருந்தும் வழிக்குத் துணை யாகா. பெறும் பலன் யாவது என்று கூறுவார். காதற்ற ஊசியும் கடைவழிக்கு வாராத உலகில்தான் நாம் வாழ்ந்து வருகின்றோம் என்பார் புலவர்.

மனித குலத்தை வருத்துகின்ற இடர்கள், கழிகாமவசப்பட்டு இன்பத்துறையில் எளியராகா வண்ணம் இழிபெண்டிரின் வலையிற் சிக்காது காக்கவேண்டுந்தன்மை, எவற்றையெல்லாம் மனிதகுலம் ஒழிக்க வேண்டும் என்ற குறிக்கோள், அதற்குக் கையாள வேண்டிய வழிமுறைகள் என்ற வகையில் தன் கருத்துக்களைக் கூறுவார்.

## வருத்தும் இடர்குறித்து

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த் மயம் – ஆகிய ஐந்து மயக்கங்களும் பண்புகளைத் திரியவைத்து, நெறிமுறையை மயங்க வைத்து மனத்துக் கண் அச்சமென்பதையே அகற்றி, பாவக் கடலில் ஆழவைக்கும் உடல்'' (42) என்று கூறும்போது மனிதகுலம் கண்டு அச்சமுறும் பேரிடர்களாக இவற்றைக் கூறுவார். மேலும் இவ்வுடலமானது, அச்சமாகிய சேற்றையுடைய நீரில் வலிய கழிகளில் உழலா நின்றது (46) என்றும் கூறுவார். இவையேயன்றி சினம், தன் மதிப்பு, அகங்காரம், அழுக்காறு, பகை, களவு, நயஞ்சேராத புத்தி, தீவினைகள் ஆகிய இருள்கள் எனும்போது,

''கலாம் மதி காரம் பொறாமை விரோதங் களவு நயங்
கலா மதி கார் அமையா வினை யாவும்'' (74)

என்ற பாடல் வழியுரைப்பார். இதனையே வள்ளலாரும், 'காம மாகிய பகைவன், கோபவெங்கொடியன்,லோபமாகிய முழுமூடன், கடுமோகமாகிய வீணன், கொடுமதமெனுந்துட்டன் கண்கெட்ட ஆங்காரி, மாச்சரிய விழலன், கொலைப்பாதகன் ஆகிய எழுவரும் இவருக்கு உறவான பேர்களும்...' என தீவினைகள் ஆகிய இருள் கள் எவை என்று வரிசைப் படுத்திக் கூறுவார்.

---

19. பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், பொது. 11

மேலும், 'மனத்தையும், பண்புநலத்தையும் தகைக்கவரும் கேடன் (இபுலீசு) அவா, பொன்மேகலை புனைமாதர், பூத விகற்பத்தால் உண்டாகும் ஐந்து பகைப்பிரிவு' (76) என உயிர் களை வருத்தும் இடர்களைக் கூறுவார்.

மனித சிந்தையானது, விளக்கம் தரத்தரத்தேறாது யானை யுண்ட விளங்கனி போல வெறிதாகும் (79) எனும்போது, வற்புறுத்திக் கூறுகின்றதனை, பக்குவமடையாச் சிந்தையானது ஏற்காது வெறிச்சென்றே பண்டு போலிருக்கும் என்பார்.

## பெண்டிர் குறித்து

மேலும் இழிகாமத்தைத் தூண்டுகின்ற பெண்டிர்தம் நாட்டத்தை நாடாதிருத்தல் வேண்டும் என்ற கருத்தைப் பல பாடல்களில் வற்புறுத்துகின்றார். ஞானநெறி நாடுதற்குக் கழி காமநெறி தடையாக இருக்கின்ற தன்மையை நினைந்து கூறியிருக் கலாம்.

> "காத மட்டாயுதம் போல் வெட்டி நஞ்சங் கலந்து அடர்ந்து
> காதமட்டாய் உகளத் திருக்கால் உள்ளம் கைக்கொள்வர்க்கு ஆ
> காத மட்டாயும் அறிவோடு காத்தி" (67)

எனக் கணிகையிற் படாது காத்தி என்னும் பொருள்பட, கல்வத்து நாயகம் இன்னிசைப் பாமாலையிலும் இதே கருத்தை, 'வேல் பிடித்த கண்ணுடை மடவாரின் வெய்ய மையலாகிய காட்ட கத்தே, மால்பிடித்த யானையென மாழ்ந்து போகலாகாது' எனும் பொருளில் காணலாம்.

கோல் அம்பும் குடங்கையும் நிகர்த்த கண்ணழகும், கொங்கை யழகும் உடைப் பெண்டிர் தம் கோலத்தால் அறிவாகிய கடல் கலங்கிச் சேறாடியது (82) என்னும்போது,

> "பார்க்கின்ற மாதரைப் பாராதகன்று போய்
> ஓர்க்கின்ற உள்ளம் உருக அழல்மூட்டிப்
> பார்க்கின்ற கண்ணாசை பாழ்பட" [20]

என்ற பாடல் பொருளுடன் ஒப்பு நோக்கத்தோன்றும்.

---

20. திருமந்திரம், விந்து ஜயம்—1

புத்தியானது தீவினை செறிந்த கெடுநிலமாம் பரத்தையர் பால் ஆசையுற்று உழன்ற நிலையில் மத்தால் கடையப்படும் தாழியகத்துத் தயிர்போல் தகர்ந்தது (34) எனப்பொருட் பெண்டிரின்பால் கொண்ட இழிகாமம் மனத்தில் மாசு மண்ட வைப்பது என்ற கருத்தைக் கூறுவார்.

இத்தகு இழிபெண்டிரைப் பற்றி மட்டும் கூறாது, நன்னெறிப் பெண்டிரைப் பற்றிக் குறிக்கும் கருத்தும் இடம் பெறும். 'பெண்டிர் தலைவரைப் பிரிந்தக்கால் பிரிவு மயக்கத்தாற் புனை நலம் பேணாதிருந்து, நிறையும், நாணும் அழியவும் துன்ப மீதூர்ந்தபோதும் இல்லின்கண் இருத்தலாகிய மாட்சிமை சுமந்து முல்லை சான்ற கற்பு நெறிப்படி வாழ்வர்' (39) என்ற கருத்தைக் கூறுவார்.

## தள்ள வேண்டியன குறித்து

மக்களது தராதரத்தைக் கண்டறியாதவரிடத்திற் சார்வதை யும், சார்ந்தவர்களுக்கு யாதேனும் தராத தகுதியை - ஈயாக் கருத்தை – கொண்டார் தம் உறவை ஒதுக்கி, பாத ஆதரவு தர வேண்டும் என்பதனை,

"தராதரங் கண்டறியாதவரிடஞ் சார்வதுஞ் சார்ந்தவர்க்கே
தரா தரம் கண்டவர் தம் உறவு ஒட்டி" (28)

என்ற பாடலால் விலக்க வேண்டிய உறவு பற்றிக் கூறுவார். பின்பும் 'இழிவு பெருகி உயரவும், மனிதன் கொண்ட பெருமை புறம்கொடுத்து ஓடவும் செய்யவல்ல பொய்யொழுக்கம் உடை யாரை உறவு கொள்ளுஞ் சார்பினை ஒழித்து நல்லொழுக்கம் அருள வேண்டும்; அதற்கு மெய்யறிவு பொழிய வேண்டும்' என்ற கருத்துப்பட,

"தகுதிப் பதுங்க இழிவு ஓங்க மேன்மை தயங்க எண் ஏந்
த குதிப்ப துங்கம் படிற்று ஒழுக்கார் தொடர் சார்பு
விட்டே" (30)

என்று பாடலில் கூறுவார்.

இதனையே,

"உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்"[21]

21. திருவருட்பா, தெய்வமணிமாலை பாடல்-8

என்ற கூற்றோடு இணைத்துக் காணலாம். 'சாதி வழக்கப் பெருமை கொண்ட சண்டாளர் உறவு ஒழியவேண்டும்; உள்ளத் துணர்வோடு வீண்பேச்சுப் பேசாது மவுனித்து, இவ்வுலகத்தா ரோடு ஒட்டி வாழும் பெரியார்தம் நட்பை அருளவேண்டும்' (31) என வேண்டும் மற்றொரு பாடலிலும், பிணைய வேண்டியவரார், பிரிய வேண்டியவரார் எனப் பெரியாரைத் துணைக் கோடலை யும், சிற்றினஞ் சேராமையும் ஆகிய நற்கருத்துக்களை நவிலுவார். சும்மா இருப்பதன் சுகங்குறித்தும் பேசுவார்.

## கொள்ளற் குறித்து

மனிதராய்ப் பிறந்தோர் வாழ்வாங்கு வாழ்தற்குரியவற்றை யும், வாழ்ந்தவழி பெறுதற்குரிய புதுமைகளைப் பற்றியும் பல கருத்துக்களை வழங்குவார் புலவர்நாயகம். 'புலனாகிய ஐந்தம் பினை ஒடுக்கும் வித்தையை அறிந்தால் புதுமையும், அற்புதமும் விளைக்கலாம்' (16) என்பதனை நாகையாண்டகை, பர்மாவில் சமாதியாகி, நாகூரில் பிறப்பெடுத்த தன்மை மூலம் விளக்கி அவர்கள் அப்புதுமை நிகழ்த்தக் காரணமே ஐயம்பு ஒடுக்கத்தால் தான் என்றுரைத்து, புலனடக்கத்தைப் பேணுமாறு குறிப்பாகக் கூறுவார்.

'அறிஞர்தம் அனுபவச் சொற்களைச் செவியுற்று, அவர் வழிப் பட ஒழுகினால், அகவிருளும், புறஇருளும் அடைய மாட்டார்' (41) எனும் கருத்தும் முன்வைப்பார் புலவர் நாயகம். 'தவப்படையாம் கொடிப்படை கொண்டு, அவப்படையாம் தீவினையை எதிர்த் தழிக்கும் வெற்றி கொண்டு பேரின்பமடையலாம்' (56) என்று பொய்யாகிய அவப்படையை எதிர்த்தாரே நனிதவ மேலோர் என்பார்.

'மும்மலத்தால் பெருகும் இருள்நீங்க வேண்டுமெனில் சற்குரு கைப்பற்றி நடக்க' (72) எனும் கருத்தும் இடம்பெறும்.

'மனித உடலானது இறைக்கடன், வாய்மை, பொறுமை, தயை, புகழ், நீதி, மாட்சிமை ஆகிய ஏழனைப் பூண்டு களிப்புறுதல் வேண்டும்' (84) என்பதனைக் கூறவருங்கால் தொழுகையாம் இறைக்கடனை முன்வைத்து வலியுறுத்துவார்.

ஈடேற்றம் மேலும் பெற விரும்பினார், 'குருவின் திருநா மத்தை மடக்கி மடக்கி ஓதல் வேண்டும். மனத்தானினைத்தல்

வேண்டும், எப்போதும் இவற்றைப் பற்றியிருந்தால், அறிமடமையும், ஆமை போலடக்கமும் கவரற்ற குணமும், கயவர்தம் தலையை அறுக்கத்தக்க வலிமையும் உண்டாகும்' (39) என்ற கருத்துவழி, மனம், மெய், உரையாகிய மும்மை வழிபாட்டை, நினைத்தல், தீயன எதிர்க்கும் வலிபெருகுதல், ஓதல், ஆகிய முத்தொழிலால் கூறுவார். 'குருபரனின் திருநாமத்தை மேன்மேலும் ஓதினால், தனதி, குணம் யாவும் பெருகும்' என்பதனை,

'நிமித்தத்தின் கண் பற்றுள்ள கணிதர், சாத்தொழிலார், பசாசுகளை வசப்படுத்தும் கருத்தர் போன்றோர் இயற்றும் பணிகருக்கு மனதிலிடங்கொடாது ஒதுக்கிவித்து, ஓதுந்தோறும் தனதியும், குணமும் பெருகும்' என்பதுபடக் கூறுவார். நிமித்தம், சூனியம் போன்றவற்றின்மீது நம்பிக்கை கொள்ளக்கூடாது என்ற தன்மையினை,

"நாளென் செயும் வினை தானென்
செயும் எனை நாடி வந்த
கோளென் செயும் கொடுங் கூற்றென்செயும்"[22]

என்ற பாடல்மூலம் எவற்றிலும் ஒருமுகமான நம்பிக்கை கொளலாகாது என்ற கருத்து உணர்த்தப் பெறுகின்றது.

இங்ஙனம் அரிய கருத்துக்கள் அந்தாதிதோறும் உணர்த்தப் பெறுகின்றன. குருவணக்கச் சிறப்பு மொழியும் அந்தாதியில் கூறப்பெறும் வழிபாட்டுத் திறமெல்லாம், எல்லாம் வல்லவனுக்கே என்ற அடிப்படையில் புலவர் கொள்வதாயும் கூறலாம். இறைக்காதலே, பிறகாதலைத் தூண்ட வல்லது. அடியாரை வேண்டலின் மூலம், அல்லாஹ்வை வணங்குகின்ற பாவனையில் கையாளப் படுவது. வித்தும் மரமும் போல, கடல்நீரும் மேகமும் போல இறையனுபவம் வழிவழியாக வாழையடி வாழையென வந்த திரு அடியவர் கூட்டத்தால், சுழற்சி மாறாமல் அளிக்கப் பெறுவது. நிலம், நீர், எரு, ஒளி, பிறவிருந்தும் விதைக்க நல்விதை இல்லெனில் என்னாம்? உடல், உயிர், அறிவு, உணர்விருந்தும் இறையறியும் ஞானகுருவை நாடுதல் இல்லெனின் என்னாம்? பிறந்ததன் பயனை அடைய இயலாது. கற்றதன் நற்பயனை உணர முடியாது. இத்தகு அடிப்படையில்தான் பல நற்கருத்துக்களைக் குழையலாக்கி, இந்தக் குருவணக்க ஞான பிரபந்தத்தைப் பாடினார் புலவர் நாயகம் என்பதே ஏற்புடைத்து.

---

22. கந்தரலங்காரம் 38.

# 8. இஸ்லாமியக் கருவூலம்

## வரலாற்றுக் குறிப்பு

சமாதானத்தின் நற்செய்தியே இஸ்லாம் என்பர். இஸ்லாம் என்றால் அடிபணிதல், கீழ்ப்படிதல் எனும் பொருளுமுண்டு. ஓரிறைக்குக் கீழ்ப்படும் இஸ்லாமிய நெறியைத் தீன் நெறி என்பர். அது தழைக்க முதல் மனிதரும், முதல் தூதருமான ஆதம் நபி அவதரித்தார். அவர் வழிப்பட்டு மனித இனம் தோன்றி பின் இபுராகிம்நபி, தாவூதுநபி, மூசாநபி, ஈசாநபி, இறுதிநபி முதலான தூதர்கள் மண்ணுலகில் இறைமார்க்கத்தை நிலை நாட்ட, சீரிய மரபொன்று புத்துயிர் கொண்டு தளிர்த்தது. அந்த மரபின் வழிப்பட்ட தூண்களாய் அமைந்தோரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் இவ்விலக்கியத்தில் இடம் பெறுகின்றன.

> ''பதி ஏமம் நனிமரு நபி மாதுலர் பண்பு அறிவு உட்
> பதி ஏமம் நனி மருகரிந் நால்வர்'' (2)

என்ற பாடலில், எப்பொருட்குமிறைவனுடைய காவல் மிகுந்த நபிகள் நாயகம் அவர்கள் தம் இரு மாமனாரும், பண்பும் நல் அறிவும் கொண்ட புதையலெனப் பெருமை கொண்ட இரு மருகரும் ஆக அந்நால்வர் வழிப்பட்ட மரபில் தோன்றிய (நாயகத்தின் 23ஆம் தலைமுறையைச் சார்ந்தவர் ஆண்டகை என்பர்) ஆண்டகை எனக் கூறுகின்றார் புலவர் நாயகம். இஸ்லாமியத் தூண்கள் என அந்நால்வரைக் கூறுவர். இஸ்லாமியரின் பேச்சு வழக்கிலும், இலக்கியத்திலும் அந்நான்கு கலீபாக்களும் 'நாலு யார்கள்' என்றழைக்கப்படுவர். 'யார்' என்பது பாரசீகச் சொல்

லாகும். யார் எனில் முதல் நான்கு கலீபாக்களைக் குறிக்கும். அந் நபித் தோழர் நால்வரில் இருவர் நபிகளாருக்கு மாமன்மார்; இருவர் மருகர். இஸ்லாமிய இலக்கியங்களில் கடவுள் வாழ்த்தை அடுத்து, இறுதி நபி வாழ்த்தும், ஏனைய நபிமார்கள் வாழ்த்தும் பின் நான்கு கலீபாக்கள் குறித்த வாழ்த்தும் அதன்பின் நபி பேரர் தம் வாழ்த்தும் வரிசையாகப் பாடும் நோக்கம் கொண்டே அவர் தம் பெருமையை உணரலாம்.

அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்களையும், உமறு கத்தாப் (றலி) அவர்களையும் இருமாமனார் எனக் குறிப்பிடுவர். மருகராக மூன் றாம் கலீபாவான உதுமான் இப்னு அப்பான் (றலி) என்பாரையும் நான்காம் கலீபாவான அலி இப்னு அபீதாலிப் (றலி) என்பாரையும் குறிப்பிடுவர். வீரம், நீதி, செங்கோலாட்சி இவற்றுக்குப் பெயர் போன அந்நால்வர் வழிப்பட்ட மரபினர் ஆண்டகை அவர்கள் எனும்போது ஆண்டகையின் அரிய திறம் விளங்கவரும்.

அடுத்து நபிகள் நாயகத்தின் பெயரரான அசனார் பற்றிய குறிப்பு இடம் பெறுகின்றது. பகைவர் தம் வாட்படை படாத, தலையில் புகழமைந்த திருமுடி சூடியவரும், சுவர்க்கத்துப் பசிய பட்டைப் புனைந்தவரும் ஆன அசனார் மரபில் நாகூர் ஆண்டகை உதித்தார் என்பதை,

''பட்டம் படாகம் புகழ் முடியார் பொற்பதியின் பசும்
பட்டு அம் படாகம் புனைந்தார் மரபினர்'' (44)

என்ற பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. அசன் என்ற பெய ருக்கே 'பேரொளி' என்பது பொருள். உம்பரின் பேரொளி, கதிர் பிறங்கிய புதல்வன் என பாராட்டப் பெறும் நபிகள் நாயகத்தின் பெயரரான அவர்-கதிஜா நாயகியின் அருமை மகளான பாத்திமா நாயகி ஈன்றெடுத்த புதல்வர் ஆவார். சிரியா போரில், வீரர் புலி அலியின் புதல்வரான அசனார், பாரத அபிமன்யுவைப்போல் பகைவரால் சுற்றி வளைக்கப்பட்டு, சேரன் கணைக்காலிரும் பொறை போல நீர் பெறாமல், பின் பெற்ற ஞான்று பருகாது உயிர்விட்ட பெருவீரர். ஆனால் பின்னிடாத வீரத்தின் விளை நிலம். அசனார் பற்றி மறு குறிப்பொன்றும்,

''மாதவக் காரணர் ஆரணத்தார் மகமூதளித்த
மாது அவர்க்கு ஆருயிராய் உயர் தோன்றல் மரபுடையீர்'' (1)

என்ற பாடலில் இடம் பெறுகின்றது. பெருந்தவத்தின் காரண மான வேதத்தையுடைய மகமூது என்ற நபிகள் நாயகம் பெற்ற

மகளார் - அன்னை பாத்திமாவின் உயிராம் இரு புதல்வர்களில் மூத்த மகனான அசனார் மரபில் தோன்றிய ஆண்டகை எனப் பாடுவார். அத்தகு வீரமரபில் தோன்றியமையான் அநீதியை எதிர்க்கும் வீரம், பண்பு ஆண்டகையின் பால் குடிகொண்டதெனப் பின்வரும் பாடல்கள் வழியாகப் பெருமிதத்துடன் பாடுகின்றார் புலவர் நாயகம்.

மரபு அப்படியே நின்று விடவில்லை. உலகில் அறம் தேய்ந்து இருள் தலைதூக்கி மெல்லப் பரவும் போதெல்லாம் நெறியான வாழ்க்கைப் பாதையை வகுத்துக்காட்ட இறையடியார்கள் ஆங்காங்கே தோன்றி வழிப்படுத்துகின்றனர் என்பர். அதன்படி பாக்தாதின் ஜீலானில் முகையத்தீன் ஆண்டகையின் தோற்றத்தி னால், மரபு பசுமை மங்காமல் சுடர்விட்டுத் தளிர்ப்பதை,

''எக்கருத்தும் உவக்கும் கடியாகச் செய்தார் வழி'' (86)

என்ற பாடல் மூலம் முகையத்தீனாரின் மரபில் வந்தவர் ஆண் டகை எனக் குறிப்பார். முகையத்தீன் ஆண்டகை, நபி பெருமா னாரின் தோழர்களுக்குப் பின்பு வழி நடந்த இறை நேசர்களில் எவருமே பெறாத நற்புகழை, நல்லுயர்வைப் பெற்றவராவார். இறையோனிடம் எளிதில் புரிந்திரா பெருந்தவமியற்றி, தலைமை யும், தகைமையும் பெற்றவர். 'குணங்குடி வாழும் முகையித்தீனே' 'என்னிரு கண்மணி முகையித்தீனே' எனக் கனிந்து பாடக்களம் கொடுத்தவர். அத்தகு இறைநேசரின் தவச்சிறப்புடைய தலை முறையைச் சார்ந்தவரே (முகையித்தீனாரின் 13வது தலை முறையைச் சார்ந்தவர் ஆண்டகை) நாகூர் நாயகம் என்பர்.

ஆடவரால் மட்டும் சிறந்த மரபல்ல, நன்னெறிப் பெண்டிர் தம் பெருமையாலும் பெயர் பெற்ற மரபின் வழி பூத்தவர் ஆண் டகை என்பதை,

''கற் பகத் தா விசை வாளியின் நீர் அருள் காவலர் சேய்
கற்பு அகத்தா இசை நாயகி பேர'' (68)

என்ற பாடலில் கூறப்பெற்ற, கற் பிளக்கத் தாவும் வேக அம்பி னால் நதியை வரவழைத்த நபிநாயகத்தின் மகளான பெண்களின் திலகமாம் பாத்திமா நாயகி என்ற கற்பின் வலிபடைத்த புகழ்ச் சீமாட்டியின் பேரரே என்று விளிக்கின்றார். பேரறிவுப் பெட்டகம்

பாத்திமா, அழகியது எதையும் அல்லாஹ்வுகாக, விழைவுடன் கொடுக்க வேண்டும் எனும் கருத்துடைக் கருணைக் கையினர். அந்தக் கருணை ஊற்று, ஆண்டகையின் பாலும் தொட்டனைத்து ஊறியது.

இங்ஙனம் நாகூர் ஆண்டகையைக் குறிக்குங்கால், புனிதச் சமயஞ்சார்ந்த வேறு பிற வரலாற்றுக் குறிப்புக்களையும் புலவர் நாயகம் தருகின்றார். ஆண்டகை பிறந்த பதியினைக் கூற வருங் கால்,

''பதிக்கும் மணிமுடி மீதே சிறக்கும் பருமணிப்பேர்
பதிக்கும் அணி!'' (3)

என அரசரின் இரத்தின முடியின் கண் சிறப்புறப் பதிக்கப்பட்ட பெரிய மாணிக்கத்தின் பேர் கொண்ட ஊர் என்பார். உலக ஊர் களில் அணியுடைய ஊர் மாணிக்காப்பூர் என்றும், அந்தப் பதிக்கு அணி ஆண்டகை என்றும் பாடுவர்.

மேலும் நாகைப்பதி தஞ்சை மன்னனான அச்சுத நாயக்கனால் ஆண்டகை அவர்கட்கு அளிக்கப்பட்ட குறிப்பை,

''தந்திரி வாளணி தஞ்சையர் கோன் தரு நாகை'' (33)

என்று கூறுவார்.

''தீவிநையாவழி காட்டச் சென்றோற் குறுசெய்யிது'' (54)

என்ற பாடலில், புலியானது ஆண்டகைக்குச் சிதையாத வழி காட்ட, நடந்து சென்ற குறு செய்யிது - சுபைனா என்பாரின் ஆண் டகை - என்கின்றார் உரையில். சுபைனா என்பார் ஆண்டகையை ஈன்ற அன்னையாராகிய சையிதத்து பாத்திமா ஆவார். குறுசெய்யிது என்பார் ஆண்டகை அவர்கள்.

''காஜிகுலூர் கரும் புங்கம் மலம் உந்த அல் இகச்
சூடினர் கைப்பிள்ளையே'' (72)

என்ற பாடலில், காஜி குலூர் என்ற முகம்மது கவுது என்பார் ஆண் டகையின் ஞானகுருவெனக் கூறி, அவர்களின் கைபற்றி, மும்மலம் விலகவும், அஞ்ஞான இருள் மறையவும் நடந்த பிள்ளை என்பார்.

அங்ஙனம் வரலாற்றுக் குறிப்புக்கள் பாடல்தோறும் பரக்கக் காணலாம். வரலாற்றில் நடந்த பழைய நிகழ்ச்சிகள், பெரியோர் பற்றிய குறிப்புக்கள் இவை சிறப்புடன் சித்திரிக்கப்படும் போது,

பயனும், சுவையும் உடையதாகின்றன. நீதி, நேர்மை, வீரம், கருணை, ஞானம் வழிப்பட்ட நன்மரபைச்சேர்ந்தவர் ஆண்டகை என்பதையே இவ் வரலாற்றுக்குறிப்புக்கள் தருகின்றன.

## நாயகக் குறிப்பு

அண்ணலார் நபிகள் நாயகம் (சல்) அழகிய முன்மாதிரி எனக் கூறப்பெறுபவர். இறுதித்தூதர் என்ற பெருமை உறுபவர். அகிலத்தாருக்கே ஓர் அருட்கொடையாக அனுப்பியதாகத் திருக்குர் ஆனிலேயே கூறப்பட்ட ஏற்றத்திற்கு உரியவர். இது குறித்தே இஸ்லாமிய இலக்கிய நெறிப்படி, கடவுள் வாழ்த்துக்குப் பின் திருத்தூதர் பெருமை இடம் பெறும் வழக்கு தோன்றியது. இஃதன்றியும் இலக்கியத்தில் ஆங்காங்கே பொருந்திய இடங்களில் எல்லாம் அந்த மனிதப் புனிதரை நினைந்து பெருமித உணர்வோடு காட்டுவது வழக்கமாகின்றது. நாகையந்தாதியிலும் நபிகள் நாயகம் குறித்துப் பல குறிப்புக்கள் இடம் பெறுகின்றன.

''மாதவக் காரணர் ஆரணத்தார் மகமூது'' (1)

என்று, நூன்முகத்திலேயே - முதற்பாடலிலேயே - நாகையதிபதியின் வழிமரபைக் கூறவரும்போது நாயகக்குறிப்பு இடம் பெறுகின்றது. அப்பாடலின் மூலம் பெருபை யுறும் தவமியற்றியவர், வேதத்தையுடையவர், மகமூது எனும் காரணப் பெயருடையார், கற்பரசி பாத்திமாவின் நற்றந்தை, அசனாரின் வீரப்பாட்டனார் என்ற அனைத்து வரிசைகளையும் பெறுகின்றார்.

ஒருவருக்குப் பெயரைப் பெற்றோர் இடுவர். பட்டங்களைப் பெரியோர் கொடுப்பர். பதவிகளை ஆளுவோர் அளிப்பர். நபி பெருமானார்க்கோ ஆண்டவனே அனைத்தையும் அளித்தான். தந்தையார் அப்துல்லா அவர்கள் பெருமானார்க்கு இறையறிவிப்பால் 'மகமூது' எனும் பெயர் சூட்டினார். பிறப்பிலேயே அற்புதம் - காரணம் - விளைகின்றது.

''நனிமருநபி மாதுலர்-நனி மருகர்-இந்நால்வர்'' (2)

என்றபாடலினும் இஸ்லாத்தின் நான்கு பெருந் தூண்களான நான்கு கலீபாக்களைக் குறித்து, அவர்கள் நபி பெருமானார்க்கு, மாமனும், மருமகனுமாயிருந்தனர் என்கின்றார். நீதியும், செம்மையும் உடைய நல்லாட்சி புரிந்த அந்நான்கு கலீபாக்களின் கருத்துத் தாயகமாய் நபிகள் நாயகம் இருந்தமையே இப்பெருமைக்குக் காரணமெனலாம்.

''இறைக்கும் நபிக்கும் மறைக்கும் இனியவ'' (7)

என்று நாகூர் ஆண்டகையைக் குறிக்குங்கால், நபி நாயகத்திற்கு இனியவர் என நடுநிலைப்படுத்திக் குறிக்கின்றார் புலவர் நாயகம். அன்னாருக்கு இறைவன் பாலும், மறையாகிய திருக்குர்ஆனின் பாலும் உள்ள நெருக்கத்தைக் குறிப்பதாகவும் உள்ளது. இறைவ் னால் இறக்கி வைக்கப்பட்ட திருவேதம் நாயகத்தின் மூலமாக இவ்வுலகப் பயனுக்காளானது. ''அல்லாஹு கொடுப்பவன்; நான் அதைப் பங்கிடுபவன்'' எனப் பெருமானார் அவர்களே மொழிந் துள்ளார்கள். அப்படிப்பட்ட இறையவனுக்கும், அவனளித்த வேதத்திற்கும், அதைப் பங்கிட்ட நபிநாயகத்திற்கும் இனியவராக நாகைத் தராதிபரைக் குறிப்பார் புலவர் நாயகம்.

நபிநாயகத்தின் வாக்கினிமையாம் பயனைக் கூறவும், இறைக்கு அவர்கள் அணுக்கமானவர் என்பதைக் கூறவும்,

''இராசித்து அரும் பொருள் வல்லவன் பால் பெற்ற
எம்மிறை சொல்
இராசித் தரும்பொருள் போல் நின்றவா'' (8)

என்ற குறிப்பு இடம் பெறுகின்றது. இறையின்பால் மனித குலத் திற்காக அரும் பொருள்கள் பெற்றவர் என்ற இத்தொடர் சிந்திக்க வேண்டிய ஒன்று. இவ்வுலகம் எனும் பூங்காவே அந்த நபிநாயகம் என்ற ஒரு மலருக்காகப் படைக்கப்பட்டது என்பார்கள். பரந்த இவ்வுலகமும், உலக மக்களும் இறுதி நபிக்கெனவே படைக்கப் பட்டனர். நற்செய்தி, சாந்தி, சமாதானம் கூறவும் எச்சரிக்கவுமே அவதரித்த அத்தகு நபியானவர்களின் சொல் இராசி-சொற் றொடர்-பெரும்பயன் உணர்த்தும் என்பதனை ''நீங்கள் என்னை நேசிப்பது என்றால், என்னுடைய நேசருக்குக் கட்டுப்பட்டு அவரைப் பின்பற்றுங்கள்'' என்று அல்லாஹுவின் கட்டளையின் மூலம் அறியலாம்; அக்கட்டளைக்கு மக்கள் அடிபணிந்து செல்ல வேண்டிய நிலையையும் உணரலாம். சொல்லைப் பின்பற்றினால் பெரும்பயன் உறலாம் என்றும் தெரிய வருகின்றது. பயன்கள் எவை எனில், இறைவன் விருப்பத்துக்கு ஆளாதல், பாவவிடுதலை பெறல், தூய சகோதரராய் நிலைபெறல் போன்றன எனலாம்.

''நந்நபி மரபின் நவமணி அறிஞர்'' (54)

என்ற தொடரில், நம் நபி என உரிமை கொண்டாடி, அம்மரபில் வந்த புதுமை அறிஞர் என நாகை மகீபதியைக் கூறுவார். மனித குலத்தாரோடு நெருங்கிய கேண்மையுடைய நபி என்கின்றார்.

தூதர் நபி உள்ளவரை யாதொரு குறையும் நேராது - அவர் ஒரு திருக்கொடை என்பர். மனிதரின் ஆக்கங்களுக்காகவும், பாவ ஈடேற்றத்திற்காகவும் இறைவன் பால் மன்றாடுபவரை 'ந ந்நபி எனக் கூறுகின்றார் எனலாம்.

நபிகள் நாயகம் ஆண்டவன் அருள் கொண்டு இயற்றிய எத் துணையோ அற்புதங்களில், பாலைவனத்தில் விரைந்த அம் பொன்றை எய்து பெரும்புனல் வரவழைத்ததும் ஒன்று. அதனை,

''கற் பகத் தா விசை வாளியில் நீர் அருள் காவலர்'' (68)

என்றுரைத்து, நதியழைத்துத் தந்த மானுடக்காவலர் எனப் பொருள் தருவார்.

மேலும் சுழன்று வரும் வேலாயுதமுடையவர் (போர்வீரர்), மீன், உடும்பு, மான், புலி போன்றவற்றுடன் பேசும் ஆற்றல் உடையவர் என்ற பொருள்பட,

''களிப் புண்டரீகம் அலம் வரும் வேலர் கயல்தடி மான்
களிப் புண்டரீகம் அலர் புகழார்'' (85)

எனக் கூறுவர். பதுறுத்தீன் புலவர் பாடிய முகையத்தீன் புராணத் திலும் கடவுள் வாழ்த்துப் பகுதியில்,

''கோதிலாப் புலியு மானும் குறுமுயற் குடமுமாவு
மீதிரைக் கயலுஞ் சோங்கும் விண்மதியரியினோடு
மாதவத்துடனே பேசு முகம்மது'' என்ற பாடல் வழி,

அவ்வுயிர்களோடு நாயகம் பேசி அற்புதத்தை நிகழ்த்தினார்கள் எனத் தெரியவரும்.

மேகத்தின் நிழலைக் குடையாக உடையவர், மறை நேர்வழி யான மதுவைக் கருணையோடு ஊட்டியவர் என்ற பொருளில்,

''கவிக் கனம் பா நிழலார் மறைநேர்வழி கான் மது விக்
க விக்க நம்பால் நிழலான் ஊட்டினார்'' (97)

எனும் பாடலில் குறிப்பார். மனிதக்கூட்டமே ஓர் அருளின் நிழலில் நிற்பதற்கு ஆண்டவனால் அனுப்பப்பட்ட குடைமேக மான நபிநாதருக்கு, மேகமே கவிந்து குடையாக அமைந்தது அற்புதம். மனிதன் எங்கு செல்லினும் அங்கெல்லாம் கருணையாம் மதுவினைச் சொரிந்து பெருமானாரின் ஒளியானது பாதுகாக் கின்றது என்பார். மனித குலம் தன்னைத் தானே பாதுகாத்துக்

கொள்ள வேண்டுமெனில் அந்நபியொளியிலேயே பாதுகாப்பைத் தேடிக் கொள்ள வேண்டும். இது குறித்தே பெருமானாரைக் ''கதிரவன்'' என்று திருக்குர்ஆனும் தெரிவிக்கின்றது.

## சில பொதுப் பதங்கள்

பல்வேறுபட்ட பழக்க வழக்கங்களையும் நடைமுறைகளையும் உடைய மக்கள் கூட்டத்தை இணைக்கவல்ல மொழி மிகச் சிறந்த சக்தி வாய்ந்த கருவி. அந்த மொழிக்கெனப் பொதுவான பல பண்புகள் அமைந்திருப்பினும், கால ஓட்டத்தில் பிற மக்கள், சமய, இனக்கலப்பின் வழியாக வெவ்வேறு வகைப்பட்ட கூறுகள் கலந்து விடுகின்றன. குறிப்பாகச் சமயக் கலப்பு நிகழும்போது அல்லது சமயத்தழுவல் நிகழும்போது மொழி சில நிலைகளை அடைகின்றது. பேச்சுவழக்கில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. பழமையின்மீது கொண்ட பாசத்தால், துறப்பதற்கு எளிதில் இயலாமல் போகும் பொதுவான மரபுகளைத் தாங்கள் பின்பற்றும் சமயங்களிலும் இடம்பெறச் செய்தனர். அதனால் பொதுவான சொல்மரபுகள்-இரு சமயத்துக்கும் இணையான சொல் நோக்குகள்-பிறக்கலாயின.

தமிழ் மண்ணில் இஸ்லாம் வேரூன்றியபோது பேச்சுவழக்கில் இந்து சமயச் சொற்கள் சில இஸ்லாமிய இலக்கியத்தில் கையாளப் பட்டன. பேச்சுவழக்கில் இடம்பெற்ற இந்து சமயச் சொற்கள், சில பாவலர்களின் மெய்ஞ்ஞானப் பாடல்களில் குடியேறின. மஸ்தான் சாகிப், புலவர் நாயகம், பீர் முகம்மது போன்றவர்களின் படைப்புக்களில் அத்தகைய சொற்களைக் காணலாம். இறைவன் ஒருவன் என்பதே இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கை. இதனைத் தெளிவுபடுத்தி, தெரியப்படுத்தும் சொற்களையே இஸ்லாமியப் புலவர் தம் பாடல்களில் அமைப்பர். இருந்தும் மயக்கம் தரும் சில சொல்லாட்சிகள், மரபுகள் இடம் பெறுதற்கு மூன்று காரணங்களைக் கூறுவர்.

''ஒன்று: கூறவந்த அடிப்படை நெறிக்குச் சம்பந்தப் படாமல் வெற்றுவருணனை பாடும் இடமாக இருக்கும். இரண்டு: முஸ்லிம் கள் அல்லாதார் உடைய சொல்லையோ செயலையோ கவிஞன் எடுத்துக் காட்டும்பொழுது அவர்களுடைய நம்பிக்கைக்கும், சமயத் திற்கும் ஒத்தவகையில் சொற்களையும் சொற்றொடர்களையும் ஆளுதல். மூன்று: அதே சொற்கும் தொடர்க்கும் இஸ்லாமியக்

கருத்தைப் பொருளாக அமைத்து விடுதல்''[1] என்பன அவை. இஸ்லாமியப் புலவர் பெரும்பாலும் இந்துமதச் சூழலில் வாழ்ந்த தால், அகச் சமய இலக்கிய அனுபவத்தில் புலமை பெற்றிருந்த தால் இஸ்லாத்துக்கு முரணான சில சொல்லாட்சிகளைத் தம் படைப்புக்களில் புகுத்தும் நிலை ஏற்பட்டது எனலாம். ''சில சமயங்களில், அத்தகைய கருத்துக்கள் இஸ்லாத்துக்கு முரணா னவை என அறியாமலேயே முஸ்லீம் புலவர்கள் அவற்றைப் புகுத்தி இருக்கலாம். ...புலவர்கள் கற்பனை உலகில் சஞ்சரிக்கும் போது இத்தகைய முரண்பாடுகள் அவர்களுக்குத் தோன்றாம லிருக்கலாம்''[2] என்ற கருத்தினையும் நினைவில் கொள்ளல் வேண்டும். ஆனாலும் இவ்விளக்கம் போதுமானதாக இல்லை.

சூஃபித்துவக் கருத்துக்கள் அனைத்து மக்களும் எளிதாகப் புரிந்து கொள்ளும் விதத்தில் பொதுச் சொற்களைக் கையாளு வதாக அப்துல் ரகுமான் குறிப்பார்.[3] நான்மறை, நால்நெறி ஆகிய இரண்டு சொற்களும் அகச் சமய, இஸ்லாமியச் சமயத்தில் பொதுச் சொற்கள்தாம். அகச்சமயத்தில் நான்மறையெனில் ரிக், யஜுர், சாம, அதர்வண என நான்கு வேதங்களைக் குறிக்கும். இஸ்லாமியச் சமயத்தில் சபூர், தவ்ராத், இன்ஜில், திருக்குர்ஆன் என நான்கு வேதங்களைச் சுட்டும். அதுபோலவே இந்து சமயத் தில் நால்நெறி எனின் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப் படும். இஸ்லாமியச் சமயத்தில் நால்நெறி என்றால் ஷரியத், தரீகத், ஹகீகத், மகரிபத் எனப் பொருள் கொள்ளப்படும்.

வேறு சில பொதுச் சொற்களைப் பயன்படுத்துகின்றபோது அந்தச் சொற்களின் பொருளை வெளிப்படையாகவோ அல்லது மறைமுகமாகவோ குறிப்பிடும் வழக்கமிருந்தது. அவைகளை இந்து சமயச் சொற்கள் எனக் கருதக்கூடாது. பரிபாஷையாகக் கருதவேண்டும். ''ஆன்மீக, யோக விஷயங்கள் அனுபவத்தால் மட்டுமே உணரக் கூடியவை. அவற்றை வெறும் சொற்களால் விளக்க முடியாது. வெறும் சொற்களால் விளக்க முடியாதவற்றை

1. மு.மு. இஸ்மாயில், **இனிக்கும் இராஜநாயகர்**, (சென்னை, 1985), பள். 212-213.
2. எஸ். முகம்மது உவைஸ், ''முஸ்லீம் தமிழ் இலக்கிய மரபு'' **இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள்** (கொழும்பு, 1963). பக். 48-49.
3. அப்துல் ரகுமான், **குணங்குடியார் பாடற்கோவை** (சிவகங்கை, 1930) பக். XIV.

உணர்த்தப் பரிபாஷை பயன்படும்...சிவம், சக்தி, உமை; மனோன் மணி, அம்பிகை, வாலை, பரை, கேசரி, சாம்பவி, தட்சிணா மூர்த்தி, நந்தி, துளவமணிமார்பன், சிற்றம்பலம்...இவை பரி பாஷைச் சொற்கள்; புராணச் சமயச் சொற்களல்ல''[4] என்ற அப்துல் ரகுமான் விளக்கம், தெளிவுபெற உதவும். இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகள் தாம் கூற வருகின்ற கருத்துக்களை யாவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காகவும், அந்நியமானதாக ஒதுக்கலாகாது என்ற எண்ணத்தோடும், அனைவருக்கும் புரியும் விதத்தில் இந்தப் பொதுச் சொற்களைக் கையாண்டனர். இதுபோன்று புலவர் நாயகமும் நாகையந்தாதியில் சில பொதுச் சொற்களைப் பயன்படுத்தும் பாங்கைக் காணமுடிகின்றது.

## எழுகடல்

''கடலகமேழினோடும் புவனமும் கலந்த விண்ணும்
உடலகத்துயிரும் பாரும் ஒள்ளழலாகி நின்று''[5]

என்ற பாடலில் அப்பர் ஏழுகடல்களாகப் பால், நெய், தேன், நன்னீர், கருப்பஞ்சாறு, தயிர், உப்பு போன்றனவற்றைக் குறிப்பர். புலவர் நாயகம்,

''அடல் சுதை நெய் தேன் நன்னீர் இக்குச்சாறொடு
தயிர் உப்புக் கடலிடம்'' (9)

என எழுகடலைக் குறிப்பர்

## ஏழுலகு

இந்து சமயத்தில் ஏழு உலகங்களாகப் பூலோகம், புவலோகம், சுவலோகம், மகாலோகம், சனலோகம், தவலோகம், சத்திலோகம் என்று குறிப்பர். ஈரேழு பதினான்கு புவனங்கள் என்றும் கூறுவர். புலவர் நாயகம் தம் பாடலில்.

''அரிக்கும் அரிக்குழலால் உலகேழுல் அமையும் இருள்'' (13)
எனக் குறித்துள்ளார்.

## முச்சுடர்

முச்சுடர், நாகை அந்நாதியில் சூரியன், சந்திரன், அக்கினி எனும் பொருள்பட 'அரி' என்னும் ஒரு சொல்லில் கையாளுவர். முச்சுடர் எனும் வழக்கு ஒருங்கே இந்து, இஸ்லாமியச் சமயங்களில்

4. அப்துல்ரகுமான், மு. நூ. பக். XIV-XV.
5. திருநாவுக்கரசர்—திருவாப்பாடி 1

அதே பொருளில் வழங்கப் பெறினும், இந்து சமயத்தில் முச்சுடராகிய சூரிய, சந்திர, அக்கினியைத் தெய்வநிலையில் வைத்துப் பேசுவர். இஸ்லாமியச் சமயத்தில் ஒளி கூட்டும் பொருட்கள் என்ற பொருளில் மட்டுமே கையாளப்படுகின்றது. இந்தப் பொருளில்,

''அரிக்கும் அரிக்கும் அரிக்கும் உயரொளி அங்கமன்றோ'' (13)

என்று புலவர் குறிக்கின்றார். (அரி = சூரியன்; அரி = சந்திரன் அரி = அக்கினி)

## கற்பகம்

கற்பகம் தேவலோகத்தரு என்று பொருள்படும். இந்து சமயத்தில் புனித நிலையில் - தெய்வநிலையில் - வைத்துப் பேசப் படும் ஐந்து தேவலோகத் தருக்களில் ஒன்று.

> ''ஆவினிலைந்து கந்தானை யமரர் கோவை
> யயன்றிரு மாலானானை யனலோன் போற்றும்
> காவலனைக் கஞ்சனூ ராண்டகோவைக்
> கற்பகத்தைக் கண்ணாரக்கண்டுய்ந்தேனே''[6]

என அப்பர் சிவபெருமானைக் கற்பகமே என்று விளிக்கும் பாங்கைக் காணலாம். கிடைத்தற்கரியது, உயர்தகுதியுடையது, மானுடரால் எளிதில் பெற இயலாதது என்ற கருத்துப்பட ''நாகை வாழ் அரிச்சந்தனமே'' (16) என்றும் (அரிச்சந்தனம் எனில் கற்பகம் என்பது பொருள்) ''நாகையங் கற்பகமே'' (67) என்றும் நாகூர் ஆண்டகையைப் புலவர் நாயகம் விளிப்பார்.

## சஞ்சலப் பாசக்கயிறு

பாசவலைப்பட்டுச் சிக்குதல், (எமன் கையிலுள்ள) பாசமாகிய கயிறு பற்றி இழுத்தல், கவலையாகிய பாசக்கயிறு என்ற பொருளில் சஞ்சலப் பாசக்கயிறு எனும் சொற்றொடர் இந்து சமயத்தில் பயன்படுத்தப் படுகின்றது. புலவர் நாயகமோ ''சஞ்சல பாசங் கந்தரமணியா'' (32) என்று குறிப்பிடுவதன் வழி கவலையாகிய பாசக்கயிறு பற்றி இறுக்குகின்றது எனப்பொதுப் படையாகக் கூறி அமைவர்.

---

6. தேவாரம் திருக்கஞ்சனூர் - 1

### சதுவேதம்

ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்று இந்து சமயம் நால் வேதங்களைக் குறிக்கும்.

> மூவிலை நற்சூலம் வலனேந்தினானை
> மூன்று சுடர்க் கண்ணானை மூர்த்தி தன்மை
> நாவலனை நரை விடையொன் றேறுவானை
> நால் வேத மாறங்க மாயினானை''[7]

என்ற அப்பர் பாடலில் நான்கு வேதக்குறிப்பினைக் காணலாம். இஸ்லாம் சமயத்தில் மூசா நபிக்கு அருளப்பட்ட தௌராத், தாவுது நபிக்கு அருளப்பட்ட சபூர், ஈசா நபிக்கு அருளப்பட்ட இன்ஜீல், முகம்மது நபி (சல்) அவர்களுக்கு அருளப்பட்ட திருக்குர் ஆன்—இவை நான்கும் சதுவேதம் எனக் குறிக்கப்பெறும். இதனைப் புலவர் நாயகம் ''சதுவேத இயல் தந்து இரவாளப் பகலான ஓதும்'' (33) எனக் குறிப்பார்.

### பூமிமாது

நிலத்தைப் பூதேவி, நிலமகள், மண்மாதா, பூமாதேவி என்றெல்லாம் பெயரிட்டும், திருமாலின் துணைவியெனக் கொண்டும் தெய்வநிலையில் இந்து சமய நூல்கள் குறிக்கும். 'நிலமெனும் நல்லாள்' என்று வள்ளுவரும் குறிப்பார். புலவர் நாயகம்,

''யுகமின் அணி நாகை மன்னர்'' (53) என வரும் பாடலில் பூமியாகிய மாதுக்கு ஓராபரணம் போல் பொலியும் நாகூர் என்று குறிப்பிடுகின்றார்.

### திருமகள், கலைமகள்

'செழியன கமலையார் பொழில்' (58) எனுங்கால் வளமான நிதிமகளும், கலைமகளும் பொருந்தி வாழும் பொழில் எனப் பொருள்படும். நிதிமகளாகிய இலக்குமியை நாராயணனின் துணைவி என்றும், கலைமகளாகிய சரஸ்வதியைப் பிரமதேவனின் துணைவி என்றும் இந்து சமயம் குறிக்கும். ஆனால் புலவர் நாகையந்தாதியில் செல்வ வளமும் கல்வி வளமும் செறிந்த பொழிலுடை நாகூர் எனும் பொருளில் குறிப்பிடுவார். ''செய்வன மா'' என்ற பாடலில் (51) 'மா' என்ற சொல்லுக்குத் திருமகள் என்ற பொருளிலும், ''திருவினை நாகை'' (75) ''திருபுக்கு

---

7. தேவாரம் திருக்கஞ்சனூர்—1

அதிவன நாகை'' (61) எனக் குறிப்பிடும் இடங்களில் திருமகள் என்ற பொருளிலும் கையாளுகின்றார். செல்வத்திரளை, அள்ளக் குறையாப் பெருநிதியைச் சொல்லவரும்போது இலக்குமி, திருமகள் எனக்குறிப்பர் இந்து சமயத்தார். எளிதில் பொருள் கொள்ளவேண்டும் என்பதற்காகவே மிகுவளத்துக்கும், குவி நிதிக்கும் அதே சொல்லைக் கையாண்டார் புலவர் நாயகம்.

'திசைக்கிரி, திசையானை, திசைப்பாலகர் - இவை சூழ்ந்த உலகம்' (43) எனும்போது பொதுப்பதம் இடம் பெறுகின்றது. உலகமே சக்கர வாளமலைத் தொடரால் சூழப்பட்டு, எண் திசை யானைகளால் தாங்கப்பட்டு, எண் திசைப்பாலகரால் காக்கப்பட்ட தன்மையை இந்து புராணங்கள் கூறும்.

வண்ணக் களஞ்சியப் புலவரும், ''அட்டதிக் கயம் ஒருப்படக் கதறல்போல் அதிர்ந்து''[8] என்று இதே பதத்தைக் கூறுவார். இராமாயணமும் 'திசையானை விசைகலங்க செருச் செய்து மருப்பு ஒசித்த இராவணன்' என்று கூறும்.

## ஐம்பகை

''பூத விகற்பத்தின் இகல் ஐக் கவர்'' (76) என்ற அந்தாதி வரிப்படி, பஞ்ச பூதங்களின் வேற்றுமையால் உண்டாகும் பகைப் பிரிவு ஐந்து என்ற பொருள் வருகின்றது. (இகல் கவர் ஐ - பகைப் பிரிவு ஐந்து பஞ்சமா பாதகங்கள் ஆகிய கொலை, கள், களவு, பொய், காமம் என்பன இந்து மக்களின் வழக்கில் இடம் பெறுவன. புலவர் நாயகமோ, கொலை, கள், களவு, பொய், குருநிந்தை எனக் கூறுவார். கழி காமத்துக்குப் பதிலாகக் குருநிந்தையைப் பாதகம் என்பார். சற்குருவணக்கம் மேற்கொண்ட அடியவரா தலின், குரு பற்றிய பிரபந்தத்தை இசைந்தேத்திப் பாடுவாரா தலின் குருநிந்தையே பாதகத்துள் கொடியது எனக் குறித்திருக்க லாம்.

''கோறல் பொய்த்தல் கொடுங் களவு
நீக்கிப் பிறர் மனைகள் மேற்
சேறலின்றிச் செழும்பொருண் மேற்
சென்ற சிந்தை வேட்கையினை
யாறுகிற்பி னமரு லக
நுங்கட் கடியதா மென்றான்''[9]

---

8. இராஜநாயகம், நாட்டுப்படலம் 2:2
9. நீலகேசி, தருமவுரைச் சருக்கம், 40.

என்ற பாடல் பஞ்ச மாபாதகங்கள் பற்றிக் கூறும்.

இவை போன்றன மட்டுமின்றி, பதமலர் பதிக்கும் குரு வணக்கம் (3), திருவாயில் எழும் மந்திரச் சொல் (37) எனக் கூறல், விழாவின் கண் சந்தன மழை பெய்தலாகிய பழக்கம் (57) போன்ற செய்திகள் இந்து சமயத் தாக்கத்தின் விளைவினால் இடம் பெற்ற இலக்கியச் செய்திகள் என்ற அளவில் மட்டும் கொள்ள வேண்டும். இஃது எவ்விதத்திலும் இஸ்லாத்தின் ஓரிறைக் கொள்கையை இழிவுபடுத்தா உண்மையான உளநோக்குடன் புலவர்களால் கையாளப்பட்டது என்பதைப் புரிந்து கொள்வதே ஏற்புடைத்து.

# 9. செய்யுள் நலம்

நாகையந்தாதியின் சிறப்பே அதன் கட்டமைப்பில்தான் பொலிகின்றது. புலமைக்கே கடுஞ்சோதனையைக் கற்பிக்கவல்ல யாப்பமைப்பும், புலவரின் கற்பனைக்கே உரைகல்லாக இருக்க வல்ல உவம உருவகச் சிறப்பும், இவையன்றி இலக்கணப் புலமையும் தகவே பெற்றிலங்கும் பெட்டகம் என உணரும் வகையில் புலவர் நாயகம் படைத்துள்ளார். இவற்றை நிரலே காண்போம்.

## யாப்பும், யமகமும்

பாடலுக்கு அழகைத் தருவது அணி. அது பொருளணி, சொல்லணி என இரு திறப்பட்டு வழங்கும். பொருளணியியலில், பாடற்பொருளில் பிறக்கும் உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் போன்றவற்றைக் கூறுவர். சொல்லணியியலில் பாடலில் இடம் பெற்ற சொற்களில் ஏற்படும் அணிகளது இயல்பு கூறுவர். நாகை யந்தாதியில் இவ்வகைகள் எழிலுற எடுத்தாளப்படுகின்றன. முதற்கண் அந்தாதியின் யாப்பமைப்பைக் காணல் நலம்.

## யாப்பு

நாகையந்தாதி அவையடக்கம், அந்தாதித் துறையின் அகவல், காப்பு போன்ற உறுப்புக்களோடு, 101 கட்டளைக் கலித்துறைப் பாடல்களால், பாடல்தோறும் யமகம் அல்லது மடக்கு என்னும் சொல்லணி இடம்பெற்ற, அந்தாதித்தொடையில் அமைந்த சிற்றிலக்கியம்.

அனைத்துக் கட்டளைக்கலித்துறை பாடல்களுக்கு முன்பும் ஒரு கொளுவெனும் உறுப்பமைத்துப் பாடப்பெறுகின்றது. கட்டளைக் கலித்துறையின் இலக்கணம் யாதெனில் முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாமல் நிற்பக் கடையொரு சீரும் விளங்காயாகி ஐஞ்சீரடி நான்கு பெறுவதோடு ஒவ்வோர் அடியிலும் முதலசை நேராயின் பதினாறு எழுத்துக்களும், நிரை யாயின் பதினேழு எழுத்துக்களும் கொண்டு நடப்பதே கட்டளைக் கலித்துறையின் அமைப்பு. இவ்வகையிலேயே நாகையந்தாதிப் பாடல்கள் அமைகின்றன.

''பாக்கலை யாவு முணர்ந்தோய் கமுகின் பழக்குலையின்
பாக்கலை யாமுத் துதிர்பொழி னாகைப் பதிவளரன்
பாக்கலை யாமதி யேகுரு வேபிர பந்தியர் நண்
பாக்கலை யாவரு ளீகவென் னோய்த்துயர் பற்றறவே'' (5)

என்ற பாடல், ஐஞ்சீரடி நான்காய், அடியின் முதலசை நேரசை யாகி, பதினாறு எழுத்துக்களோடு அமைந்தது.

| பாக் | க | லை | யா | வு | மு | ணர்ந் | தோய் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |

| க | மு | கின் | ப | ழக் | கு | லை | யின் |
|---|---|---|---|---|---|---|---|
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |

என நேரசையில் தொடங்கி, 16 எழுத்துக்களோடு முடிந்தது. இது போல நிரசையில் தொடங்கி 17 எழுத்துக்களோடு முடியும் பாடலும் உண்டு.

| க | திக் | குந் | தி | ரு | வி | னை | யுள் | ளா |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |

| ரெ | ளி | யர் | க | லா | ரென் | ற | சங் (75) |
|---|---|---|---|---|---|---|---|
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 19 | 17 |

என்ற பாடலில் நிரையசை தொடங்கி 17 எழுத்துக்கள் வந்தமையைக் காணலாம்.

வந்த சொல்லே மீண்டும் மீண்டும் பாடலில் வருவது என்றால் அதனைச் சொல் பொருட்பின்வரும் நிலை அணி என்று தண்டி யலங்காரம்,

''முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற்
பின்வரு மென்னிற் பின்வரு நிலையே''[1]

1. தண்டி, நூ. 42

என்றும், ஆனால் அது ஒரே பொருளைக் குறித்து வருவது என்றும் கூறும். யமகம், எழுத்து மட்டும் ஒன்றிப் பல பொருளில் வருவது. எழுத்துகளின் தொடர், சொற்களின் கூட்டம் அப்படியே மீண்டும் வருமானால் வடமொழியில் யமகம் என்றும், தமிழில் மடக்கு என்றும் கூறுவர். பன்னிரு பாட்டியலும், நவநீதப் பாட்டியலும் யமகம் என்றும், எஞ்சிய பாட்டியல் நூல்கள் மடக்கு என்றும் குறிக்கின்றன.[2]

**யமகம்**

ஒரே எழுத்துத் தொடர் மீண்டும் மீண்டும் பலவிதமாகப் புணர்ந்துவரின் வெவ்வேறு பொருளும் தரின் யமகம் என்பர். வந்த சொல்லே மீண்டும் மீண்டும் வரப் பெற்றதாலும், பன்முறை வெவ்வேறு பொருளில் பயன்படுத்தியதாலும், புலவர்கள் அதில் புதுமை கண்டு யமகத்தில் பாடல்களைப் புனையலாயினர்.

முதலில் நிகண்டுகள் தாம் ஒரு சொல் படைத்த பல பொருளையும், பல சொற்கள் சேர்ந்து ஒரே பொருளில் இயங்குதலையும் உரைத்தன. நிகண்டுகள் 16ம் நூற்றாண்டில் பெரிதும் வளரலாயின. ஐரோப்பியரின் வரவும் ஒரு திருப்பத்தினை உண்டாக்கியது. சொற்களை அகர வரிசைப்படுத்தி எழுதும் முறையெழுந்து, அகராதியும் தோன்றலாயிற்று. ஆக, நிகண்டுகளும், அகராதிகளும் ஒத்த எழுத்துடைய சொற்பட்டியலைத் தரவே, யமகநூல்கள் பிறக்கலாயின. வளமுடைய சொற்களைக் கையாண்டு தரமான யமக நூல்கள் பிறக்கும் சூழலும் உருவாகியது.

இஃதன்றி வடமொழிப் புலமையும் யமக நூல்கள் தோன்றக் காரணமானது. வடமொழிச் சொற்கள் அதிகமாகக் கையாளப்பட்டு யமக நூல்கள் பொலிவுடன் இயற்றப்பட்டன. எனவே "அணியிலக்கணத்தைப் பொறுத்தமட்டிலும் தமிழ்மொழி, வடமொழிக்குக் கடமைப்பட்டுள்ளது"[3] என்று கூறுவர்.

இந்த யமகத்தின் மொழி நடை கடுமையுடையதாக இருந்தது. யமகப் பாடல் ஒன்று படிக்கும் நேரத்தில் பல பிற பாடல்களைப் படித்து விடலாம் எனக் கருதினர். மிக எளிமையான பாடல்கள் பாடுவது புலமைக்கு இழுக்கு எனக் கருதி யமகத்தைத் தங்கமாகக்

2. ந. வீ. செயராமன், பாட்டியலும் இலக்கிய வகைகளும், (சென்னை, 1981), பக். 89.
3. ப. இராமச்சந்திரன், மு. நூ. பக் 35.

கருதிப் போற்றினர். யமகம் பாடி மகிழ்வித்த அண்ணாமலை ரெட்டியாரின் சொற் சிலம்பத்தில் மனம் பறி கொடுத்த திருவா வடுதுறை ஆதீனத்தலைவர். "நீவிர் சாதியிலும் இரட்டி; புத்தியி லும் இரட்டி"[4] என்று பாராட்டினராம். ஆதீனங்கள், ஜமீன்கள் வேறு புலமையுடையோரைப் போட்டி போட்டு யமகப் பாடல் களைப் பாடச் சொல்லி ஆர அமரக் கேட்டு மகிழ்ந்தனர். "வேக மாகப் பாடல்களை இயற்றியும், எளிதில் பொருள் விளங்காத சித்திரக்கவி, சிலேடை, யமகம், திரிபுப் பாடல்களை இயற்றியும், புலவர்கள் தங்கள் இலக்கணப் புலமையையும், சொற் புலமையை யும், நிலைநாட்டினர்"[5]

சொற்புலமை பெருகுவதற்காக இவற்றை அக்காலப் பள்ளி களில் பாடமாக மாணாக்கர்க்கு வைத்தனர். யமகம், திரிபு நூல்கள் உள்ளிட்ட சிற்றிலக்கியங்களைக் 'கருவி நூல்கள்' என்றே அழைத்தனர். நாளடைவில் இம்மடக்கு செல்வாக்கிழந்து, கற்றவர் மட்டுமின்றி, அனைத்துப் பாமரரும் புரிந்து கொள்ளத் தக்க எளிய இலக்கிய வகைகள் பிறக்கலாயின. சிந்து போன்ற எளிய பாடல்கள் அரும்பலாயின. அச்சியந்திரக் கண்டு பிடிப்பும், உரைநடையுகமும் சேர்ந்து மிறைக் கவிகளை உருவாக்குவார் அருகலாயினர். பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவில என்று, யாப்பு மரபுமாறி வழக்கொழிந்து புது வடிவங்கள் கிளைக் கலாயின.

## நாகையந்தாதியில் மடக்கு

சிற்றிலக்கிய கால கட்டத்தில் எழுந்த இஸ்லாமிய இலக்கியங் களுள், வளமிக்க யமக அந்தாதிகளுள் நாகையந்தாதியையும் கூறலாம். அரிய சொற்கள், பல பொருள் குறித்த ஒரு சொல், வட சொற்கள் போன்றன ஏற்ற இடங்களில் அமைந்து எழில் சேர்த்தன. ஒன்றி வரும் எழுத்துக்களையே யமக எழுத்துக்கள் என்பர். இந்நூலில், 4 எழுத்துக்கள் 4 பாடல்களிலும், 5 எழுத்துக் கள் 5 பாடல்களிலும், 6 எழுத்துக்கள் 18 பாடல்களிலும், 7 எழுத்துக்கள் 17 பாடல்களிலும் 8 எழுத்துக்கள் 23 பாடல்களிலும், 9 எழுத்துக்கள் 18 பாடல்களிலும், 10 எழுத்துக்கள் 5 பாடல்களி

---

4. அரங்க சீனிவாசன், காவடிச் சிந்தும் கவிஞன் வரலாறும் (சென்னை, 1984) பக். 58.
5. ப. இராமச்சந்திரன், மு. நூ. பக். 39.

லும், 11 எழுத்துக்கள் 10 பாடல்களிலும், 1 பாடல் முழுக்கவும், நான்கடியும் மடக்காகவும் யமகங்கள் இடம்பெறுகின்றன.

## பல்வேறு மடக்குகள்

நூலில் 51வது பாடலைத் தவிர (எல்லா எழுத்துக்களும், ஐஞ்சீரடியும், நான்கடியும் மடக்காய் வருவது) ஏனைய 100 பாட்டுக்களும் இடையிட்டு வந்த முதன் முற்று மடக்கு எனக் கொள்ள வேண்டும். சான்று:-

''மந்திரங் கானிறை நாகையின் வாழ்வுடை வள்ளல் பலர்
மந்திரங் கானினை வுள்ளங்கொள் ளார்மம்ம ராலணிவா
மந்திரங் காநிறை நாணழியா வில்லின் மாட்சிமைசு
மந்திரங் காநிற்பத் தாமதி யாரென் மடக்கொடியே'' (38)

என்ற பாடலில் ம, ந், தி, ர, ங், கா என்ற ஆறு யமக எழுத்துக்கள் நான்கடியிலும் வெவ்வேறு பொருளில் (முறையே தறுகா, யோசனை, வாமம் திரங்கா (நலம் குறைய), கமந்து இரங்கா) வருதலால் இஃது முற்று மடக்கு. நான்கடிகளிலும் முதலில் இது மடக்காக வந்தமையின், முதல் முற்று மடக்கு. மடங்கி வரும் இத்தொடருக்கு இடையில் பல்வேறுபட்ட சொற்கள் இடம் பெறவே 'இடையிட்டு வந்த முதன் முற்று மடக்கு' என்பர்.

இஃதன்றி 'ஒலி வேறுபாடு அதிகமில்லாத ஒத்த சொற்கள், ஓரெழுத்தொருமொழி, ஒரு பொருட் பன்மொழி, பல்பொருள் சொற்கள் முதலானாகிய பலவகையான தமிழ்ச் சொற்களும், வடசொற்களும், வலித்தல், மெலித்தல், திரிதல், கெடுதல் முதலிய விகாரங்களும் போலி முதலியனவும், சொற்களின் மாறுபட்ட வடிவங்களும், சந்திப் புணர்ச்சி விதிகளும், யமகப் பாடல்கள் அமையத் துணை புரிகின்றன.'[6] என்ற கூற்று யமகம் தோன்றும் பரந்து விரிந்த நிலைக்களனைக் கற்பிக்கின்றது. சொல்வளம் மிக்கிருந்தால் மட்டுமே, இந்த அரிய துறையில் (யமகப் பாடல் வகையில்), வெல்லும் இலக்கியம் படைக்கலாம் என்ற தொழி லருமை விளங்குகின்றது.

ஒலிவேறுபாடு அதிகம் இல்லாத ஒத்த சொற்களைக் கொண்டு உருவாகிய யமகப் பாடலுக்குச் சான்றாக,

---

6. ப. இராமச்சந்திரன், மு. நூ. பக். 103.

"மன்னா தவைம் பொருளிலை மேலு மகிமையுளார்
மன்னா தவைண் ணிலையுமுண் டாமஞ்ஞை நாரையின்மேல்
மன்னா தநவந் தருபொழி னாகையின் மாதவர்கள்
மன்னா தவைம் பெறுங்கரு ணைக்கண் மதித்தவர்க்கே" (40)

என்ற பாடலைக் கூறலாம். மன்னாத எனும் ஒலி வேறுபாடு அதிக மில்லாத ஒத்த சொல்லே இங்கு பயின்று வருவது. ஓரெழுத்தொரு மொழி பயின்றதாக,

"ஆநந்த மாறுபட் டார்முனங் கோல்கொண் டடித்தெழுப்பி
ஆநந்த மாட்டி லளித்தீர் விண்போலும் மலர்ந்த பண்ணை
ஆநந்த மாமணி யால்திரு நாகை யரசவைத்தீர்
ஆநந்த மாதவ மேயடி யேன்பிணி யாசறவே" (14)

என்ற பாடல் இடம் பெற்று, மூன்றாம் அடியில் மட்டும் ஆம் என வந்து 'ஆகும்' எனப் பொருள் கொண்டு, ஏனைய மூன்று அடிகளா லும் 'ஆ' என்ற ஓரெழுத்தொரு மொழிக்கு, முறையே காளை பெருவெற்றி, இரக்கம் என்ற பொருட்களில் யமகம் இடம் பெறு கின்றது.

வடமொழிச் சொற்கள் இல்லாமல் பல பொருளைக் குறிக் கின்ற ஒரே சொல், தமிழ்ச் சொல் யமகமாய் வந்து அமைவது மிக அரிது. சில பாடல்களே அங்ஙனம் அமைவன. சான்றாக,

"அலர்வன மாமை யுருவினர் சீர்த்தியணி கவியின்
அலர்வன மாலை புனைதலி னாற்பல வாயத்தின்வாய்
அலர்வன மாய விரத்தலெவ வாறினி யம்புயமொய்
அலர்வன மாநிழ னாகையர் கோன்செய்த வாக்கமிதே" (18)

என்ற பாடலில் 'அலர்' என்ற சொல் முறையே விரிதல், மலர், பழிச்சொல், நீர் என்ற பொருளில், தமிழ்ச் சொற்களாக இடம் பெற்று வந்தன.

வடசொற்கள் கலந்து யமகமாக வரும் பாடல்களும் உள. சான்றாக,

"களிப்புண் டரீக மலம்வரும் வேலர் கயறடி மான்
களிப்புண் டரீக மலர்புக ழார்வழி கான்கெழுதீங்
களிப்புண் டரீக மலர்வன நாகையர் காலிணையாங்
களிப்புண் டரீக மலர்வநெஞ்சன் கண்ணுங் கருத்தினுமே" (85)

என்ற பாடலில், புண்டரீகம் எனும் வடசொல் முறையே கழுகு, புலி, வண்டு, தாமரை என்ற பொருளிலே யமகமாய் இடம் பெற்று அமைந்துள்ளது.

நாகையந்தாதியில் உள்ள மற்றொரு பாடல், இரு மெய் யெழுத்துக்கள் மட்டும் ககரம், தகரம் - சேர்ந்து உருவாகி யுள்ளதைக் காணுங்கால் புலவர்கொண்ட புலமை நலம் விளங்கும்.

''கார்த்திகைத் தேதத்த தத்தைகொக் கொக்கக் கதத்துக் கொத்திக்
காத்திகைத் தேதுத்த கத்திதக் கீதத்த கத்துக்கொத்துக்
காத்திகைத் தேதொத்தித் தாதுகத்தித் தித்த காதத்தைத்தேக்
காத்திகைத் தேதத்தித் தூதத்த நாகைக்கத் தாத்துதியே'' (69)

என்ற பாடலில் 'நாகை' என்ற சொல்லில் 'நா' மட்டும் தவிர்ந்து, ஏனையவெல்லாம் வல்லெழுத்தாகிய க, த, ஆகிய இரு வல்லின எழுத்துக்களால் ஒன்றி வந்தது எனலாம்.

நான்கடியும், மடங்கி வந்த 'நாக்டியுமடக்கு' என்ற பாடல் வகைக்கு ஒரே பாடலைச் சான்றாகக் கொள்ளலாம்.

''செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையச் சீர்பதச் சேகரமே'' (51)

என்ற பாடலே அது. அப்பாடற் பொருளாவது: –

| | |
|---|---|
| செய்வன | — சிவந்த நிறத்தையுடைய |
| மா, தல | — திருமகளின் செல்வமிகுதியுடைய |
| நாகு, அய்யர் | — இளமைப் பருவமுடைய அரசர்கள் |
| சீர், பதம் | — கவிகளின் சீரினிடத்துஞ் சொல்லி னிடத்தும் |
| சேகு, அரம், ஏ | — போந்த குற்றங்களைஒழித்தலே |
| செய் | — செய்யும் |
| வளம், ஆதவம், நா | — அழகு பிரகாசித்த நாவினது |
| கை, யர் | — ஒழுக்கத்தையுடையவர்கள் |
| சீர், பதம் | — சித்திரமும், அடையாளமும் உள்ள |
| சேகரம் | — முடியும் |
| ஏசு, எய்வன | — குற்றங்களைத் தருகின்ற உயிர்களது |

மா, தவ, நா, கையர் — வலி குறைய நடுவுநிலை பூண்டகையு முடையவர்கள்
சீர், பதம் — இவரது செல்வத்து அழகுடைய
சே, கரம், மே — சிவந்த கைகள் மேவிப்பரவி
செய், வனம் — வயலும், சோலையும் சூழ்ந்த
மாதவநாகையர் — மாதவர் செய்த நாகூரின்ாயகரது
சீர்பதச் சேகரமே — நன்மைபூண்டபாதங்கள்இரண்டனையும்

என்று அரிதின் சொற்பிரித்து, ஆழ்ந்த பொருள் காணும் நய முடைய பாடலாகின்றது. அந்தாதி அளித்த ஆசிரியரின் ஆழியன்ன புலமை நலத்துக்குப் பதச் சோறாய் அமைந்து இனிமை சேர்க்கும் பாடலிது.

யமக அந்தாதியிலும் வேறுபட்டது அந்தாதி மடக்கு. முதலடி யின் ஈற்றுச் சொல் இரண்டாமடியின் முதலிலும், பின் இரண்டா மடியின் ஈற்றுச் சொல் மூன்றாமடியின் முதலிலும், மூன்றாமடி யின் ஈற்றுச் சொல் நான்காமடியின் முதலிலும், நான்காமடியின் ஈற்றுச் சொல் அடுத்து வரும் பாடலில் முதலிலும் என வருவதே அந்தாதி மடக்கு. இச்செய்யுட் பெயரைக்கண்டு மயங்கி, யமக அந்தாதியோடு சேர்த்து விடக்கூடாது. நாகையந்தாதி அந்த வகைப்பட்ட அந்தாதி மடக்கினைச் சார்ந்ததாகாது. யமக அந்தாதியைத்தான் சார்ந்த தெனலாம். இங்ஙனம் புலமை நலமும், சொல் வளமும், மிக்கு விளங்கும் யாப்பமைப்பும், யமகச் சிறப்புமுடையதே நாகையந்தாதி.

## உவமையும் உருவகமும்

ஏற்றமிகு இலக்கியம், தன் படைப்பின் ஊடாக எழிலுடைய உவமைகளை, உருவகங்களை இணைத்துப் பாடுவதை மரபாகக் கொண்டிருக்கும். சிறந்த சொல்லாட்சியும், சொல்லடைகளும், நற்கருத்துக்களும், வடிவங்களும் முனைப்புடன் தெரிவதற்குச் சிறப்புடைய உவமைகளின் நல்லாட்சி நாகையந்தாதியிலும், நவிலப்படுகின்றது. ‘உவமை என்னும் தவலருங் கூத்தி’ என்றே இதனைக் கூறுவர். உவமம் உவமை என்னும் சொல்லே ‘உவ’ என்னும் பகுதியின் அடியாகப் பிறந்தது எனக் கூறுவர். உவ உவத்தல் என்பன உள்ள மகிழ்வைக் குறிக்கும் சொற்கள். ஆகவே களிப்பை உருவாக்கும் பாடலுக்கு, மேலும் களிப்பைப் பெருக்கு கின்ற தன்மை இன்றியமையாததாகின்றது.

## நாகையந்தாதியில் அமைந்துள்ள யமக எழுத்துக்களின் எண்ணிக்கைப் பட்டியல்

| யமகமாக அமைந்துள்ள எழுத்துக்களின் எண்ணிக்கை | பாடல்களின் எண்ணிக்கை | பாடல்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 4 எழுத்துக்கள் | 2, 7, 28, 40 | 4 |
| 5 எழுத்துக்கள் | 1, 5, 14, 22, 54 | 5 |
| 6 எழுத்துக்கள் | 6, 10, 15, 18, 20, 21, 26 ,33, 34, 35, 38, 41, 48, 67, 69, 74, 80, 100 | 18 |
| 7 எழுத்துக்கள் | 4, 8, 9, 12, 19, 27, 31, 37, 43, 52, 53, 55, 62, 63, 65, 66, 92 | 17 |
| 8 எழுத்துக்கள் | 3, 11, 13, 16, 23, 24, 30, 32, 36, 50, 57, 58, 60, 61, 68, 77, 78, 81, 82, 83, 84, 89, 99, | 23 |
| 9 எழுத்துக்கள் | 17, 29, 39, 44, 45, 46, 47, 49, 64, 71, 75, 76, 87, 88, 93, 96, 98, 101 | 18 |
| 10 எழுத்துக்கள் | 25, 72, 79, 86, 94 | 5 |
| 11 எழுத்துக்கள் | 42, 56, 59, 70, 73, 85, 90, 91, 95, 97 | 10 |
| நான்கடியுமடக்கு | 51 | 1 |
| | மொத்தம் | 101 |

உவமைஎனில்,

> "ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து
> ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை"

என்று இலக்கணம் கூறும். கவிஞனின் புலனறிவு, கற்பனைத்திறம், உணர்வுப் பெருக்கு, கருத்தோட்டம், வடிவச் செம்மை அனைத்தும் வெளிப்படுத்தும் இடங்களே உவமையும் உருவகமும். புலவர் பெருமக்கள் தம் பாடலிலே அவற்றை அணிபெற அமைப்பதில் கண்ணும் கருத்துமாயிருப்பர். ஏனெனில் பாட்டினிமையைப் பெருமளவில் பெருக்குவது உவமைச் சிறப்பும், உருவகச் சிறப்புமே.

அந்தாதிக்கு அழகு சேர்க்கின்ற பிற உறுப்புக்களாக இந் நூலில் உவமையும், உருவகமும் செயல்படுகின்றன. அணிகளுக் கெல்லாம் தாயாக விளங்கும் உவமை குறித்து முதற்கண் ஆராய் தல் நலம்.

## உவமை நலம்

காப்புச் செய்யுளாகிய முதற்பாடலிலேயே உவமை நலம் எடுப்புறப் பொலிகின்றது.

> "மணியொளி போலும், மலர் மணம் போலும், உயிர்க்கு
> அணியொளி போன்ற உண்மைப் பொருளே" எனுங்கால்,

எல்லாம் வல்லவனைச் செவ்விய மணிபடைத்த ஒளி போன்றவன்; மலரின் மணம் போன்றவன்; படைத்த உயிர்க்கெல்லாம் நல்லணியாகத் திகழவல்ல உண்மைப் பொருளாயவன் என்கின்றார். மணியொளி எனுங்கால் இறைவனின் எல்லையற்ற ஒளித்தன்மையையும், மலர்மணம் என்ற வழி மலரினின்று பிஞ்சு, காய், கனி, கனிபடுவித்து, மீண்டும் செடி, மரம், மலர் எனக் கிளைத்து ஒன்றில் ஒன்றாயும், ஒன்றில் பலவாயும் அழியாத தன்மையுடையான் என்றும், ஆக்கவும், அழிக்கவும் வல்லான் என்று வகுப்பதையும் காட்டுகின்றார். உயிருக்கு அணியான உண்மைப் பொருளாக நிற்பவன் எனும் வழி இறைவன் உண்மையின் உறைவிடம்; வாய்மை, தூய்மை ஆகியவற்றின் நிலைக்களம். அந்த வாய்மையாகிய சான்றாண்மையே உயிருக்கு அணி. அப்படிப்பட்ட உயிருக்கு அணியான உண்மைப் பொருள் என விளக்குவார். திணை, பால், எண், இடம் அற்ற அல்லாஹுக்கு இந்த உவமை வழி எல்லையில்லாமல் பொருள் விரிகின்றது.

நாகையின் வளத்துக்குக் காரணமான வயல் புறங்களைப் பற்றிக் கூறுங்கால்,

"விண்போலும் மலர்ந்த பண்ணை
ஆம்நந்து மாமணியால்" (14)

என்ற உவமையை வைப்பார். "சங்கினங்களாலும், அழகிய பரிய முத்துக்களாலும், திங்களும், உடுக்குலங்களும் எனச் செறிந்த வானத்தைப் போலும் விரிந்த வயற் களங்களுடைச் செல்வ நாகூர்' என்பது இதன் பொருள். சங்குக்கு வெண்ணிலவையும், முத்துக்களுக்கு விண்மீன்களையும் விரிவானத்துக்குத் தடப் பண்ணையையும் உவமையாக்குவார். "பங்கயப்பதமே என்றன் நோய்க்குப் பசு மருந்து" (46) எனும்போது, பங்கயம் போன்ற பாதம் என் நோய் தீர்க்கும் பசுமருந்து எனப் பொருள் கூறுவார். பங்கயம் குளிர்ச்சி, மென்மை, தண்மை உடைய மலர். மலர் களிலேயே தகைமை கொண்ட திருமலர். நோய்ப்பட்ட இடத்திற்கு மென்மையும், தன்மையும் எவ்வளவிற்கு இதத்தைச் சேர்க்குமோ, அத்தகு இதமளிக்கும் மலர் போன்ற பாதம் நோய்க்குப் பசிய மருந்தாய் அமைவது பொருத்தமான உவமை. மேலான மலர், எனவே கிடைத்தற்கரிய பசுமருந்து. உவமை இங்கே எழில்பட இலங்குகின்றது.

நோயுற்ற அங்கத்தைத் தெளிய வைக்கும் "வனசம் பொருங் கை" (61) எனுமிடத்தில், நோயுற்ற இடத்தில் தாமரை மலரனைய கையாம் குளிர்ந்த மருந்து தீண்டப் பெற்றால் எத்துணை இனிமை யும், சுகமும் விளையுமோ அதுபோன்ற மனநிறைவை ஊட்டும் கை என்கின்றார். "மின்னும் சுடர்மணிக்குக் கண்பாதம் கை கமலம்"[2] என்ற பாடலும் கைகள் கமல மலர்களுக்குக் கூறப்பெறும் பாங்கறியலாம்.

மங்கையரின் கண்கள், "கோல் அந்தம் கரம் கடுக்கும் கண்" (82) என்று கூறும்போது அம்பும், அழகிய அகங்கையு நிகர்க்குங் கண்ணுடை மாதர் என்ற பொருள்படும். இதே உவமை,

"குடங் கையின் நெடிய கண்ணாற் குமரன் மேனோக் கினாளே"[3] என்ற திருத்தக்க தேவரின் பாடல் வரியில் பயின்று வருவதை நினைவூட்டுகின்றது.

## சில அரிய உவமைகள்

பஃறிக்கிணை கற்பார் (4)
துர்வாய உள்ளம் (6)
இங்குலிக விரல் (7)
பதுமக்கை (7)
அம்புயத்தாள் (17)
அனம்போல் நடையார் (20)
மின்னார் (23)
துகிர்பாதம் (27)
மாதங்கத்தனம் (27)
சுட்டியின்னாகை (29)
மணிப்புள் (32)
மதுரமலைவு வாரணம் (43)
சரத்தாமரை (64)
கொடியனமின்னார் (66)
மலைபொருதாரை (71)
கார்குழல் (72)
பொன்மெய்வளை (80)

## உருவகச் சிறப்பு

எளிமையான சொற்களைக் கையாண்டு ஆழ்ந்த பொருள் தரும் உருவகப் படைப்பும் புலவர் நாயகத்தின் கவிதை நலத்துக்குச் சான்றாயமையும். உருவகம் எனில்,

''உவமையும் பொருளும் வேற்றுமையொழிவித்
தொன்றென மாட்டின ஃதுருவகமாகும்''[4]

என்பர். உவமையாம் பொருளையும், உவமிக்கப்படும் பொருளை யும் வேறுபாடின்றி ஒன்றே என்னும் உள்ளுணர்வு தோன்ற ஒற்றுமைப்படுத்துவது என்று பொருள். உவமேயத்தில் உவ மானத்தையே ஏற்றிக் கூறுதல் ஆகும்.

## நோய்த்துயர்

''கலையா அருள் ஈக என்னோய்த்துயர் பற்றவே'' (5)

எனுமிடத்தில் நோய்த்துயர் என்பதை நோயாகிய துயரம் என் கின்றார். நோய்வாய்ப்பட்டார் அடையும் பெரும் பேதுறல் ஈண்டு உணர்த்தப் பெறும். நோய் உற்றதினால் உண்டாகும் துயரம் கூறவொண்ணாதது. இதுபற்றியே,

''தோற்றாதென் வயிற்றினகம்படியே குடரொடு துடக்கி
முடக்கியிட ஆற்றேன்''[5]

என்று சூலை நோய்பெற்ற நாவரசர், அந்நோயால் தன் வயிற்றகத் தினின்றும் குடரொடு துடக்கி, முடக்கி, சுருட்டி விசையுடன் இழுப் பது போலும் கடுந்துயர் பொற ஆற்றேன் எனக் கூறுதலின் மூலம், நோயினால் விளையும் மிகுதுயர் என்ற உருவகத்தின் சிறப்பினை

உணரலாம். தருநன் மனமே:- (11) எனும் உருவகத்தில் தருவாகிய நல்ல மனமே என்கின்றார். தரு எனில் மரம் என்பது பொருள். மரத்துளும் நன்மரம், நச்சுமரம் என இருவகையுண்டு. நன்மரம் தன் இலை, மலர், காய், கனி, வேர், நிழல் எனப் பல்லாற்றானும் தன்னையடைந்தார் யாவர்க்கும் இன்னார் இனியார் என வேறு பாடு காட்டாது பயன்தரும் பெருமையுடையது. அதுபோல் நடுவு நிலையுடைய நன்மனமே என்பார். தருதரும் அருமையினைக் குறித்தே வள்ளலாரும், 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளக் கிடைத்த குளிர் தருவே, தரு தரும்நிழலே' என்றெல்லாம் பாடு வார். ஆழ்ந்து பொருளுடை உருவகமிது.

பலவாருதியில் மயங்க :- (42) இத்தொடரில் பவ வாருதி உருவகமாகின்றது. பாவமாகிய கடல் என்று பொருள் கூறுவார் புலவர் நாயகம். மனிதப் பிறவியையும் பெருங்கடலுக்கு உருவக மாக்குவர். இங்கு பாவமாகிய கடலில் அழுந்திய தன்மையைக் கூறுவார்.

கற்றவர் சொற்கண்டம் :- (87) என்ற உருவகமானது அறி வாளர் சொல்லாகிய கண்ட சருக்கரை என்ற பொருளில் வரும். கண்ட சருக்கரை இனிமையுடையது. நன்மையும் உடையது; பிணி தீர்க்க உதவும் மருந்தாகவும் இயல்வது; அருமையுடையது. அதுபோலும் கற்றவர் சொல்லும், காமுறும் வண்ணம் இனிமை யும், நன்மையும், மருந்தாயும், அருமையாயும் அமைவது. கற் கண்டு என்றும் பெயர் கொள்வது. இதனை,

> ''கரைந்துவிடாது என்னுடைய நாவகத்தே இருந்து
> கனத்த சுவை தருகின்ற கற்கண்டே''[6]

என்ற பாடலும் கூறும் முற்றுருவமாக ஒரு பாடலும் இடம் பெறு கின்றது.

> ''கனவிலங்கா வல் அவாச் சிறை மேலெண்ணங்
> கண்டனை மிக்
> கன விலங்கா வலம் கோட்டைத் துயரம் கடத்திநும்தாள்
> கன இலம் காவல் அகத்தாக்கி ஆளிர் கனியும்புள்ளும்
> கனம் விலங்கு ஆவலங் கொட்டும் தண்ணாகைக் கதிர்
> விளக்கே'' (78)

---

6. திருவருட்பா.

என்ற பாடலில் ஆவலாகிய கனத்த விலங்கும், பேராசையாகிய சிறையும், மேல் எண்ணமாகிய தண்டனையும், துயரமாகிய நீங்காத வலியுடைக் கோட்டையில் மேலிட்டிருந்தன. ஆதலால் அவற்றை விலக்கித் தங்கள் பாதமாகிய சீருடை வீட்டில் இவ் வடிமையைப் பாதுகாவலிடத்தில் அமைத்தாளுக எனும் பொருள் இடம்பெறும். ஆவலாகிய விலங்கு, பேராசையாகிய சிறை, மேலெண்ணமாகிய தண்டனை, துயரமாகிய கோட்டை, பாத மாகிய வீடு என உவமான உவமேயங்கள் ஏற்ற இடத்தோடும் பிறவற்றோடும் முற்றுருவகஞ் செய்து வருதலின் முற்றுருவமா கின்றது. இதுபோன்ற பாதக எண்ணங்கள் தன்பால் பற்றாதிருக்க இரப்பது போலும் பிறிதொரு பாடலும் இதே முற்றுருவக அமைப்பில் இடம்பெறுகின்றது.

> "காம உட் பகைவனும் கோப வெங்கொடியனுங்
> கனலோப முழு மூடனும்
> கடுமோக வீணனும் கொடுமதமெனுந்துட்ட
> கண் கெட்ட ஆங்காரியும்
> ஏமமுறு மாச்சரிய விழலனுங் கொலையென்
> றியம்பு பாதனுமா மிவ்
> வெழுவரும் இவருக்குற்ற உறவான பேர்களும்
> எனைப்பற்றி டாமல் அருள்வாய்.'[7]

என்ற பாடலில் பாதகர்களாகிய குற்றங்களைப் பற்றி முற்றுருவக அமைப்பில் செய்யுள் நலத்தோடு காட்டுவார். உருவகத் தொடர்கள் இங்ஙனம் ஆழ்ந்த பொருள் நயத்தோடு புலவரால் கையாளப்பட்டுள்ளன.

### அரிய பிற உருவகத் தொடர்கள்

| | |
|---|---|
| ஏமநனி மருகர் (2) | மரக்கலமுடம்பு (42) |
| பாதமலர் (3, 48) | புகழ் எழில் (42) |
| பார்த்திட்டு (4) | கண்ணம்பு (44) |
| கற்பார் (4) | பாதகப்பவ்வம் (45) |
| இரும்புக்கடலை (9) | பதம்பயன் (45) |
| துன்பக்காப்பு (12) | துன்பச்சுமை (47) |
| அரிக்குழல் (13) | பதமலர் (48) |
| பிணியாசு (14) | உகம் மின் (53) |

---

7. திருவருட்பா, தெய்வ மணிமாலை - பா.6

| | |
|---|---|
| இனிமைத்தவம் (15) | கொங்காசலம் (82) |
| புலன் ஐயம்பு (16) | கலைக்கடல் (82) |
| அற்பு தனன் (17) | காலிணையாம் களிப் |
| அணிகவி (18) | புண்டரீகம் (85) |
| பொற்பதப்பந்தர் (28) | வனக்கோவைபாண்டு |
| கல்விச்சாகரம் (30) | மூலம் எனும் |
| சஞ்சல பாசம் (32) | வல் அமை கும்பவனம் (96) |

## சில இலக்கணக் குறிப்புக்கள்

சிறந்த சில இலக்கணக் குறிப்புக்களும் இடம் பெறுகின்றன. அவை ஏற்ற இடத்தில் உரிய பொருள் விளக்கம் தருகின்றன. இளம்பிடி (7) என்பது, அன்மொழியாகிப் பெண்ணைக்குறிப்பது. மலினகரம், வெண்மேனி, செவ்விதழ், மஞ்சள் முகம் (37) பகம் பட்டு (44); பசுமருந்து (46), செங்கண் (55)-போன்றன பண்படிப் படையான் இயன்று வருவன. உவமைத் தொகை வழியில், வான மதிகதிர் (43); கசங்குன்மபலமூலம் (16); சரி, கங்கணம் (23), தகரந் தகர் அந்தம் (25), செய்வனம் (51), கோபஞ் சந்தாபம், அயர்தல் மயல் நாட்டந்துயிலாமை (65), கனகத்தின் பணிகள், நித்திலம், மரகதம், நீலம் என்று வருவன (71)- இவைபோன்ற தொடர்கள் உம்மையாய்ப் பயின்று வருவன. தவ (51) எனும் உரிச்சொல் மிகுதிப் பொருளில் வருகின்றது. இலம் (71), அந்நலார் (65) என இடைக் குறைந்து வருவனவும் உள.

# சொன்னயம்

தமிழ் இஸ்லாமிய இலக்கியங்களில் பெரும்பான்மையன சமய இலக்கியங்களே. அவை இறைத் தூதர்களையோ மெய்யடியார் களையோ பாட்டுடைத் தலைவர்களாய்க் கொண்டிருக்கின்றன. காப்பு, கடவுள்வாழ்த்து, பாயிரம், நூல் என்ற பாடல் உறுப்புக் கள் அனைத்திலும், இஸ்லாமிய சமய மரபும், கருத்துக்களும் இடம்பெறுகின்றன. படைக்கும் பாணி, தமிழ்க் காப்பிய மரபை ஒட்டியிருப்பினும், அது சமய இலக்கியமாய் ஒளிவிடுதலின் தமிழ் இஸ்லாமியப் புலவர்கள் தங்கள் கருத்தைக் கூற வரும்போது தங்களின் மூலமொழிச் சொற்களான அறபுச் சொற்களைத் தவிர்க்கவியலா இடத்தில் கையாண்டனர். எத்துணையோ அழகிய விரிந்த பொருளுடைய நயனுடைச் சொற்கள் முத்தமிழில் விரவி யிருப்பினும், ஏற்றதோர் இடத்தில் அறபுச் சொற்கள் இடம் பெறும்போது அவை கூற வந்ததைச் செவ்வையாக, ஆளுகை யுடன் இடம் பெற்றுச் சிறப்பதாய் எண்ணங் கொண்டனர். இஸ்லாம் பரவிய திசை எங்கும், தேசமெங்கும் அறபு மொழியும் சென்றது. அங்கு வழங்கும் மொழிகளில் அறபுச் சொற்கள் கலந்தன.

## பிறசொற்கள்

இன்பத் தமிழிலும் அறபுச் சொற்கள் இடம் பெற்றன. அறபுச் சொற்களும், பாரசீக உருதுச் சொற்களும் அதிக அளவில் இஸ்லாமிய இலக்கியங்களில் இடம் பெற்றதால் அந்த இலக்கியங் கள் பலருக்கும் புரியாமல் போய்விட்டது என்னும் பரவலான கருத்தொன்று உள்ளது. என்றாலும், ''ஓர் இனத்தின் பண்பாடு பெரும்பாலும் அந்த இனம் பின்பற்றும் சமய நெறியையே அடிப்

படையாகக் கொண்டிருக்கும். அந்த மார்க்கம் எந்த மொழியில் தோன்றி, வேரூன்றி இருக்கிறதோ அந்த மொழியின் தாக்கத்தைப்''[1] பெற்று விடுகின்றது.

உதாரணமாக பௌத்த மதம் தோன்றிய பாலி மொழியின் சொற்கள் தமிழ் இலக்கியங்களில் உள. பௌத்தமத அடிப்படையில் எழுந்த மணிமேகலை போன்ற நூல்களில் பாலி மொழிச் சொற்கள் உள்ளன. சமண சமயத்துக்குரிய பாகதம் மொழியிலமைந்த பல கலைச் சொற்கள் சிந்தாமணியில் சிந்திக் கிடக்கின்றன. வைணவச் சமய இலக்கியத்தில் வட சொற்களாகிய சங்கதச் சொற்கள் கலந்துள்ளன. தமிழ் இஸ்லாமிய இலக்கியங்களிலும் அறபுக்கலைச் சொற்களும், ஓரளவு பாரசீகச் சொற்களும் இடம் பெறலாயிற்று.[2] இவற்றை மொழி பெயர்க்கக் கருதினாலும் அது சொற்பெயர்ப்பாகத்தான் அமையுமேயன்றிக் கருத்துப் பெயர்ப்பாய் அமையாது, கூறவந்ததைக் குறைவறக் கூறிய உயர்வையும் தோற்றாது. எனவே அறபுச் சொற்களை அவ்வடிவுடனேயே, அவ்வுச்சரிப்புப் பயிற்சியுடனேயே கையாள்வது தமிழ் இஸ்லாமிய இலக்கிய நெறி.

அதுபோல, திசைச்சொற்களும் இல்லாத ஒரு மொழியே இல்லை எனலாம். வளர்ந்து வரும் விரைந்த உலகில் பிற மொழிக் கலப்பு, சொற்கடன் வாங்கல் என்பது தவிர்க்க முடியாததும், மொழியின் செல்வாக்கை, வளத்தை உணர்த்தும் கருவியாகவும் மாறிவிட்டதெனலாம். இஸ்லாமிய இலக்கியங்களிலும், பாரசீக, உருதுச் சொற்கள் போன்ற பிறதேயச் சொற்கள் கலந்து விடுகின்றன. ''இஸ்லாமிய இலக்கியங்களிலிருந்து அறபுப் பாரசீகச் சொற்களைப் பிரிக்க முடியாத நிலை ஏற்படுகின்றது. இஸ்லாமியக் கருத்துக்களைத் தமிழில் விளக்குவதற்கு அவை அவசியமாகின்றன.''[3] என்று இது குறித்தே கூறுவர். எனவே ஒருமொழியில் கடன் வாங்கல் என்ற பண்பு எக்காலத்தும் நிகழ்ந்தே வருகின்றது.

---

1. எம். எம். உவைஸ், **தமிழிலக்கிய அறபுச் சொல் அகராதி** (மதுரை, 1983), பக். 1
2. எம்.எம். உவைஸ் மு. நூ. பக் 1-2
3. எம். எம். உவைஸ், ''சீறாவில் வரலாற்றுக் குறிப்புகள்'' ''**சிந்தைக்கினிய சீறா**'' (சென்னை, 1978), பக். 204

மார்க்க கல்வி என வரும்போது, அறபு மொழிப்பயிற்சி இன்றியமையாத் தேவையாக அமைந்து விடுவதால் அறபுச் சொற்கள் இஸ்லாமியரின் குருதியிலே கலந்த ஒரு தனி வழக்காக மாறி அது இலக்கியத்திலும் எழில் பெற இடம் பெறலாயிற்று. அறபி என்னும் சொல்லுக்குத் தெளிவாகப் பேசத் தெரிந்தவர் என்பது பொருள்.[4]

நாகையந்தாதியில் பெரிதும் இடம்பெற்ற சொற்கள் வட சொற்களே. கி. பி. 16 ஆம் நூற்றாண்டு முதல் ஆங்கிலேயரின் வரவு வரை இடைப்பட்ட தமிழக இலக்கிய வரலாற்றுக் காலத்தில் - நாயக்கர் காலத்தில் சிற்றிலக்கியச் செல்வாக்கு வேகம் கொண்டு வளர்ந்தது. தமிழுடன் வடமொழிப் புலமை பெற்ற பேரறிஞர்கள் யாண்டும் நிறைந்திருந்தனர். சிற்றிலக்கிய காலத்தில் எழுந்த நூல்களில் வடசொற்கள் கணிசமான அளவில் கலந்தன. மேலும் யமகம் இயற்றுவதற்கு ஆழ்ந்த வடமொழிச் சொற்கள் உதவின. ''வடமொழிச் சொற்கள் இடம் பெறாமல் முற்றிலும் தமிழ்ச் சொற்களாலே யமக நூல் அமைவது அரிது''[5] என்பர். காலச்சூழலுக்கு ஏற்ப இக்கலப்பு தவிர்க்க இயலாத ஒன்று என ஆகிவிட்டது. புலவர் நாயகம் அந்தாதியில் பல வடமொழிச் சொற்களையும், அறபுச் சொற்களையும், சில திசைச் சொற்களையும் ஆண்டுள்ளார்.

பிறமொழிச் சொற்களின் கலப்பு ''கலைஞனின் பார்வையில் சுமைதான் எனினும், பலாப்பழத்தை மேலே அழுத்தமான தோல் இருக்கிறதே என்று விட்டுவிடுகிறோமா? மேலே உள்ள ஓட்டைப் பார்த்து, உள்ளே உள்ள தேங்காயை எண்ணி வாங்காதார் உண்டா?''[6] என்ற கருத்துப்படி, அரிதின் முயன்று பொருளறிந்து இலக்கிய அனுபவத்தில் தோயும் பொழுது பெறும் சுவை பெரிது என உணரலாம்.

இவையேயன்றி ஆசிரியனின் சொல்வளச் சிறப்பை விளக்கும் வகையில் நாகூராண்டகை பற்றிய நல்லடைகளையும், பாடல் தோறும் பயின்று வரும் நயனுடைச் சிறப்புத் தொடர்களையும்,

---

4. கா. அப்துல் கபூர், இஸ்லாமிய இலக்கியம், (தக்கலை, 1978), பக். 5
5. ப. இராமச்சந்திரன், மு. நூ. பக். 34.
6. க. ப. அறவாணன், ''உமறுப்புலவரின் இலக்கியத்திறன்'', சிந்தைக்கினிய சீறா (சென்னை, 1978), பக் 65.

ஆழ்ந்த பொருள்தரும் தொகைச் சொற்களையும், அரிதின் ஆளப் படும் பழமொழியும், மொழி வழக்குகளையும், எளிய பேச்சு வழக்குச் சொற்களையும், நோய் தீர்க்கப் பாடிய பனுவலாதலின் வருத்தும் பிணிகளின் வகைகளைப் பற்றியும், ஒரே சொல்லில் பலபொருள் குறிக்கும் பெரும் புலமையையும், அருந்தமிழ்ச் சொற்களையும் ஆளுந்திறத்தினால் புலவர் நாயகத்தின் சொல் வளம் தெற்றெனத் தெரிகின்றது.

உரிய சொற்களின் திறனறிந்து ஆளுதலில் மலர்வதே பாவலனின் பாணி. அதில் திட்பமும், இனிமையும், புலமையும், ஊடாட வேண்டும். குற்றேவல் புரிவதைப் போல சொற்கள் அணிவகுத்து நின்று புலவனுக்கு ஆட்படுதல் வேண்டும். அவற்றுள் வெல்லுஞ் சொல் இளமை அறிந்து, திறனறிந்து நிரந்தினிது கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவ தாய் ஆராய்ந்த சொல்வன்மை கொண்டு புலவர் இயற்றுவார். அத்தகு படைப்பே புலவனுக்குப் பெருமித உணர்வைச் சேர்க்கும். 'அழகான சொற்கள் கருத்திலும் செயலிலும் ஒளிவிடும் உயிராகத் திகழ்கின்றன'.[7] என்ற கிரேக்க அறிஞர் வான்ஜைன்ஸ் கூற்றும் அதனை மெய்ப்பிக்கும். இத்தகு சொல்வளச் சிறப்பை நாகையந்தாதி செவ்வனே பெற்றிலங்குகின்றது.

## அறபுச் சொற்கள்

அப்துல் காதிர் (1,99), அமானம் (80), இபுலீசு (76), ஒலி (98), கலிறுநபி (24), கவுது (63), காஜிகுலூர் (72), குத்பு (43), குபிரர் (88), சாகுல் கமீது (98), தறுகா (38), நபி (1), மகமூது (1), மனாரா (66), முகம்மது கவுது (72).

## பிற மொழிச் சொற்கள்

அகரு (72,86), கிஸ்தி (8), சடுதி (15), துரை (26).

## வடச்சொற்கள்

அங்கம் (13,61), அசலம் (82), அண்டம் (32), அதிசயம் (48), அதிபர் (34), அந்தகர் (82), அந்தம் (82), அந்தரம் (79), அபயம் (76), அப்பாவி (48), அப்பு (56), அமிர்தம் (7), அம்புயம் (18), அரவிந்தம் (85), அரிச்சந்தனம் (19), அலங்காரம் (49), அலம்பு (6),

---

7. இ. சுந்தரமூர்த்தி, "கலைஞரின் நடைநயம்" **அறிஞர்கள் பார்வையில் கலைஞர்** (சென்னை, 84), பக். 36

அவயவம் (35), அற்புதம் (16), அற்புதர் (37,62), அன்னம் (97), ஆகம் (57), ஆகுலம் (11), ஆபரணம் (53), ஆரணம்தார் (43), ஆரணத்தார்(1), ஆனந்தம் (13,39), இட்டம் (4,17), இந்தளம் (10), இரட்சி (47, 70, 99), இரவி (25), இராசதர் (7), இராசி (8), இராசித்து (8), உகம்(53), உதயம் (16,66), உத்தமம் (78), உபகாரிகள் (26), உபதேசிக்கும் (50), உற்பவித்தார் (80), ஏதி (60), கங்கணம் (23), கங்கு (23), கசம் (16), கசரோகம் (37), கணம் (23), கணிதர் (91), கதி 37), கத்தா (68,91), கந்தரம் (32), கபாடம் (87), கமடம் (39), கரம் (101), கருத்தன் (27), கருமம் (32), கலசம் (66), கற்பம் (68), கனகம் (71), கனம் (78,97), காரணம் (88,98), காரணர் (87,99), காரணத்தார் (1), இரணம் (53), கிரி (43), கிருபை (7, 53), கீர்த்தி (12,17,58), குஞ்சரம் (64,83), குணபாடுகள் (39), குணம் (13, 26, 39, 62, 91, 95), கும்பம் (96), குரு (2,72), சங்கதம் (31.93), சங்கதி(75), சங்கம் (32), சஞ்சரீகங்கள் (22), சஞ்சலம் (32), சஞ்சீவி (73), சண்டகர் (25), சண்டாளர் (31), சதுவேதம் (33), சந்தாபம் (65), சம் (16), சரண் (94), சரத்தர் (91), சரம் (83,64), சரோருகம் (23), சலஞ்சலம் (56), சலநிதி (29), சவுபாக்கியம் (4), சாகரம் (30), சாதி (30), சாதிப்பது (30), சித்தி (79), சித்திராங்கம் (37), சிந்து (55), சீதம் (57), சீதலர் (18), சீரணம் (86), சுகம்(4, 39, 50, 57, 80), சோகம் (65), தந்தம் (24), தந்திரம் (32,33), தயாள (29), தரங்கம் (28), தராதரம் (28), தருக்கம் (36), தருமங்கள் (34), தவம் (51), தவனம் (70), தனம் (27, 89, 91), தனன் (17), தாபதர் (26), தாமதம் (22,38), தாம்பலம் (6), தாரம் (90), தாரா (63) தராதரம் (63). தானம் (35), திக்கு (75), தித்தம் (56), தித்து (56), தியாகம் (22), திரம் (33), திரமோலியர் (51), திரிதோசம் (61), திவம் (33), தீர்த்தம் (45), தீவி (54), துங்கம் (30), துதி (29), நக (58), நகம் (58), நடம் (50), நந்த (14), நந்தனம் (50), நவம் (40, 54, 59, 95), நாதம் (40), நாதன் (40), நாமம் (39, 43), நிருபாகம் (26), நிருமலர் (35), நிவம் (62), நீதம் (27), நேமம் (34), பங்கம் (34), பதம் (99), பதுமம் (7), பவம் (71), பவவாருதி (42) பவனம் (96), பவ்வம் (45), பாக்கியம் (4), பாசம் (32), பாதகர் (25), பாதுகம் (17), பாரம் (78), பார்த்திவர் (3), பாலகர் (43), பாலர் (70), பானு (63), பிரகாசிக்கும் (96), பிரசம் (50), பிரபந்தா (22), பிரபலத்தார் (50), பிர்பந்தியா (5), புங்கம் (72), புண்டரீகம் (85), பூதரா (28), பேதம் (77), போதம் (64), மகரந்தம் (92,93) மகரம் (93), மகிபர் (41), மகிமை (25), மகீபதி (1), மஞ்சரி (23), மதலம் (65), மத்தகம் (34), மதி (34, 36, 41), மதுரம் (43),

மந்திரம் (38), மயம் (5,42), மரகதம் (71), மலினம் (36), மாதுலர் (2), மித்திரன் (79), மேகலை (76), மோகம் (60), மோதம் (64), யாகம் (73), ரணம் (98), லக்கம் (42), வசந்தம் (69), வசனம் (90), வந்தி (95), வந்திக்க (94), வரம் (21,36), வருக்கம் (42), வனசம் (61), வனம் (18, 51, 61, 68, 69, 96), வாசம் (93), வாசர் (92), வாமம் (38), வாரணம் (60, 43, 98), வாரிசம் (43), விகற்பம் (68, 74), விசுவாசித்து (42), விசையம் (68), விசித்திரவித்தாரம் (80), வித்தம் (98), விரோதம் (74), வேதம் (100).

## புலவர் நாயகம் போற்றும் நாகூர் நாயகம்

நாகை மகீபதியே (1), நாகைப் பதிக்கரசே (2), நாகையம் பார்த்திவர் (3), மாதவ நாகை மன்னா (4), முத்துதிர் பொழில் நாகைப் பதிவளர் அன்பா (5), கலையா மதி (5), குரு (5), பிரபந்தியர் நண்பா (5), நாகைப் பதிக் கிறையே (6), நன்னாகை இராசதர் (7), இறைக்கும் நபிக்கும்மறைக்கும் இனியவர்(7), இரும்புக்கு அடல் அக நாகை மன்னா (9), இந்தளம் ஏந்திய நாகையருந் தவமே (10), உயர் நாகை யகப் பொருளே (11), உயர் கீர்த்தி நாகையரிக் குன்றமே (12), திரு நாகை அரச வைத்தீர் (14), மைத் தண்டலைத் திரு நாகையர் (15), வனமா நிழனாகையர் கோன் (18), சீர்நாகை வாழ் அரிச்சந்தனமே (18), மணிமாட நாகை தற் காவலரே (20), தற்க ஆவல் அரி நாகையர் கோன் (21), தென்னாகையர் (32), இரவிநாயகர் (25), நாகைத் தங்குந்துரையே (26), திருநாகைத் தராதிபர் (27), முத்தார் வாவி நாகைத் தலத்தரசே (28), தண்புயப் பூதரா (28), நாகைத் தயாள (29), சுதிநாகை மன்னர் (30), மணி முன்றில் நாகையர் (32), வரமே சொரியும் வண்மைக் கையர் (35), திருகதி நாகையர் (37), நாகையின் வாழ்வுடை வள்ளல் (38), என் கோமான் (40), நாகையின் மாதவர்கள் மன்நாதன் (40), லக்கப் பலத்தண்பொழி னாகையர் (42), தண்புன னாகையர் (43), வயனாகைவாழும்பதி (45), இன்மொழி னாகைய (48), நந்தனஞ் சூழ் நாகையர் (50), மாதவநாகையர் (51), உகமின் அணி நாகை மன்னா (53), நாகைத் தெளி பொருளே (56), கப்பு அகல வரு பொருளே (57), கமலையார் பொழினாகையர் (58), நவ நிலையமைந்த நாகையின் வள்ளல் (59), அதிவன நாகையர் (61), தென்னாகைத் தலைமையற்புதர் (62), கவுதென்ன நாகையர் (63), தாமரைப் பொய்கைத் தண்ணாகையர் (64), நாகையண்ணல் (65), திருநாகையங்கற்பகமே (67), தண்வயனாகைய(68), நாகைக்கத்தா

(69), பல்வள நாடணி பதி நாகூர (70), கருத்தன் சமூகத்தா தவ நாகைப்பால (70), நாகைக் கரும்புயலே (71), பணைநாகையர் (72), நாகைக்கலாமதி (73), பொழிலணி நாகைக்கதிக்கரசே (74), ஓங்கும் கலைக் கடலே (75), தண்ணாகைக் கதிர்விளக்கே (78), பொழில் நாகையங் கோக் களிறே (82), மலர்வன நாகையர் (85), கடியார் மனை நாகையர் (86), குரிசினன் னாகையர் (88), நாகை வண்டார் வள்ளலே (89), நன்னய நாகை நாயக (92), வண்பொழிற் பூ மகரந்த வாசங்கமழ் நாகையர் (93), வண்ணாகை (95), மாநாகைச் சாகுல் கமீதொலியே (98), நாகை வாழ் அப்துல் காதிருவே (99)·

## சிறப்புத் தொடர்கள்

ஆம்பலங் கமழ் நீராடை (6), பல் தாம்பலம் (6), இறைக்கும் கிருபை (7), மாமை உருவினர் (18), அம்புயம் மொய் அலர் வனம் (18), வனமாலை (18), சீர்த்தி அணி கவி (18), அரிச்சந்தனம் (19), சந்தனம் போது அகில் குங்குமஞ் சண்பகந் தாந்தவழ் வசந்தன் (20), கா அலர் அணிநுண் தேன் (21), பொற்றோள் தாமம் (22), அரும்பு அம்புயம் (27), சலநிதி சூழ்தலம் (29), தஞ்சாதிப்படித் தகை கொண்டு அகங் கொண்ட சண்டாளா (31), சஞ்சல பாசங் கந்தரமணி (32), தண்வாயமுதம் (33), இரவாளன் (33), புன்வினை மத்தகம் (34), தீவினை விளையும் கெடு நிலமாம் பரத்தையர் (34), மாமறை நேமத் தவத்தாதிபர் (34), மையலற்ற நிருமலர் (35), வாய் மலர் மந்திரம் (37), கானிறை நாகை (38), நலந்தரும் பொழில் நாகை (40), நவம் பெறும் கருணை (40), துன்மதித் தக நீர்மையுடையார் கயவர் (40), ஆரணத் திகழ் வாயர் (43), பொற்பதி (44), பசும்பட்டு அம் படாகம் (44), பட்டம் படாகம் (44), அயர்துன்ப சுமைப்படலம் (47), பாதக அப்பாவி (48), மழை நந்தனஞ் சூழ்நகை (50), தும்பிமன்னர் (50), நாகை யருந்தும் பிரசம் (50), சீர்பதச் சேகரம் (51), மெய்மைத் திருமுகம் (52), திசைச் சொல் புகழ் (53), மணி நிழல் சஞ்சலம் (55), தவப்படை, அவப்படை (56), பகலரு நாகை (57), வாகையர் ஆகம் (57), மழைச் சீதஞ் சந்தம் (57), ஒன்றிய பொதியத் துயர் தமிழ் (58), செழியன் அகமலையாய தென்றால் (58), கோடிய சிந்தையர் (60), தடமணப் பந்தர் (62), அணிகொள் மனாரா (66), முத்தம் மானை (66), திருக்கால் உள்ளங் கைக்கொள்வர் (67), மட்டாயுதம் போல் வெட்டி நஞ்சங் கலந்து அடர்ந்து (67), காதமட்டாய் உகளத் திருக்கு (67), கற்புடை நாயகிக் கண்மணி (68), கதிர்செய் பல

கணித்து இலம் (71), நயனருள் சஞ்சீவி நாகைமதி (73), அதிகார மணிவிளக்கு (74), கலைக்க வரும் தகைக்கேடன் (இப்லீசு) (76), சந்திரக் கலை கவரும் கதிர் மாட நிறம் (76), பாழ்ங் குழி (77), விச்சித்திர வித்தாரமான கவிமாலை (80), சரம் அணிக் கை (83), கபாட நிலைக் கண் தங்கம் தான் அவிர் ஆலய நாகை (87), வாவியந் தண் வயல் (89), இசைவாக் கணி (91), குங்குமத் தொடை (95), பவன நாகை ஏத்தி வரும் கவி (96), ரணமா இழி நோய் ( 98).

## தொகை

ஓர்மைப் பயன் நெறி - ஒருமைப் பயனுள்ள வழி (44)
இருபண்பு - நிறை, நாண் (மகளிருக்கு) (38)
இருநிதி - சங்க நிதி, பதும நிதி (92)
இருபதி - மண், விண் (40)
முச்சுடர் - ஞாயிறு, திங்கள், அக்கினி (13)
மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை (35, 49, 72)
சதுர்வேதம் - தௌராத், ஜபூர், இன்ஜில், திருக்குர்ஆன் (33)
நாற்படை - அரி, தேர், கரி, காலாள் (17, 24)
நான்கு வழியின் ஒழுக்கம் - ஷரியத், தரீக்கத், மகரிபத், ஹகீகத் (36)
ஐம்பொறி - கண், காது, மூக்கு, மெய், வாய் (36)
ஐம்பால் சிகழி - கூந்தல் முடிப்பு (10)
ஐம்பகை - கொலை, பொய், களவு, கள், குருநிந்தை (76)
ஐந்து மயங்கள் - அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்த மயம் (42)
ஐம்பூதம் - கால், முளரி, பார், புனல், விண் (77)
பஞ்ச வாசத்தில் ஒன்று எனத் தக்கோலம் பற்றிக் கூறுவார் (82)
பஞ்சவாசம் – இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்

அறு சமயம் - சட்சமயம் - அகச்சமயம் 6. சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், புறச்சமயம் 6. உலகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாம்சம், மாயாவாதம், பாஞ்சராத்திரம் (24)

ஏழுகடல் - பால், நெய், தேன், நன்னீர், கருப்பஞ்சாறு, தயிர், உப்புக் கடல்கள் (9)

ஏழுலகு - பூலோகம், புவலோகம், சுவலோகம், மகா யோகம், சனலோகம், தவயோகம், சத்தியலோகம் (9)

## பேரெண்

ஆயிரம் - அற்புதம் ஆயிரம் கோடி (17)

லக்கம் - லக்கப் பலம் (42)

கோடி - நூறு லக்கம் (பலகோடியரசர்) (60)

## பழமொழியும் மொழி வழக்கும்

1. *"மத்தகத் தாழி படு தயிர் ஒத்த"*
   *மதியானது, ஆசையுற்று உழன்றது* (34)
   *மத்திடை கொண்ட தயிர்ப்பானை போல என்பது பழமொழி.*

2. *"நகம் மலையாச் சுடர்" என மலையிற் பொருந்திய*
   *விளக்குப் போலத் தமிழின் புகழ் எங்கும் பரந்தது* (58)
   *குன்றிலிட்ட விளக்குப் போல என்பது பழமொழி.*

3. *"யானையுண்ட விளங்கனி போல" விளக்கம்*
   *கொடுக்கக் கொடுக்கச் சிந்தை வெறிதானது* (79)
   *யானை யுண்ட விளங்கனி போல என்பது பழமொழி.*

4. *"வந்தி களிக்கும் குணமகப் பெற்றென"*
   *எனக்கு உன் குங்குமத் தொடை ஈக(வந்தி-மலடி)* (95)
   *மலடி பிள்ளை பெற்றாற் போல என்பது பழமொழி.*

## மாறுதலான மொழி வழக்கு

1. *"குஞ்சாரத் தாய் ஆதி; கன்றொத்த தன்மையற்கு" என*
   *புலவர் தம்மைக்கன்றாக, நாகூராண்டகையைக்* (64)
   *கருணையுடைய யானையைத் தாயாகக் காட்டும் மொழி வழக்கு*

2. *"திருவினை உள்ளார் எளியர் கலார்" என்ற வழி,*
   *செல்வரும், ஏழையரும் கலத்தல் செய்யார் எனும்* (75)
   *மொழி வழக்கு*

## பேச்சு வழக்கு

| | | |
|---|---|---|
| பையல் | — | பையன் (8) |
| லெச்சம் | — | இலக்கம் (18) |
| குதட்டும் | — | மெல்லும் (26) |
| லக்கு | — | குறிப்பு (29) |
| தந்து | — | கொடுத்து (33) |
| நலவு | — | நன்மை (36) |
| பலம் | — | பழம் (42) |
| பயல் | — | பையன் (45) |
| அருகாளன் | — | அருகிலிருப்பவன் (48) |
| செவந்த, செவப்பு | — | செம்மை (59) |
| ஆகாதமட்டு | — | ஆகாத அளவு (67) |

## பிணிப்பட்டியல்

இருமல் (37), உப்புசம் (61), கசம் (16), கசரோகம் (37), கருங்குட்டம் (கண்டமாலை) (37, 86), குட்டரோகம் (86), குளிர் (61), குன்மம் (16), சித்ராங்கம் (காமாலை) (37), சிலேட்டுமம் (61), நீர்க்கோவை (96), பன்மூலம் (16), பாண்டு (96), பித்தம் (திரிதோசம்) (61), பித்தரோகம் (37), பெருவியாதி (37), முடக்கு வாதம் (39), மூலம் (96), ரணம் (புண்ணோய்) (98), வாதம் (திரிதோசம்) (61), விஷக்கடி வருத்தம் (86), வெண்குட்டம் (கண்டமாலை) (37).

## பலபொருள் குறித்த ஒரு சொல்

மா - பெருமை, வெறுப்பு, வண்டு (1)
நிதிமகள், வலிமை, பெரிய (51)
தவ - தவம், தாவ (1)
பதி - இறைவன், பதிந்த, தீப்பதியாம் நரகம், குரு (2)
அரசர், ஊர் (3)
ஏமம் - காவல், புதையல், இருள் (2)
மணிமுடி - மணி பதிந்த, அரசமுடி, அலங்காரம்,
அழகியதலை (3)
பார் - பூமி, பாறை, பார்த்தல் (4)
திட்டம் - மேடு, திடன் (4)

கலையா - கலை, கலை நிறைந்த, கலையாத (3)
பற்று - உறவு, அன்பு (6)
இறை - வரையிறை (மலை) கடமை, கடவுள், இறைத்தல் (7)
இராசித்து - அந்தரங்கந் தடுத்து, குவிந்து (8)
அகம் - மனம், பாவம் (12, 41)
வீடு (12)
அடை - அடைப்பட்டு (12)
அப்பம் (12, 101)
இலை (101)
அரி – வண்டு, அழகு, சூரியன், சந்திரன், அக்கினி, காற்று (13)
ஆ - காளை, வெற்றி, இரக்கம் (14)
ஆச்சாமரம் (55, 92)
பெண்ணெருமை (55)
ஆதல் (70)
நந்த - மாய, சங்கு, நம்முடைய, உண்டாக (14)
ஆசு - விரைவு, குற்றம், பலா, அற்பம் (15)
கசம் - காசம், யானை, கயமை (16)
படும் - உண்டாகும், படும், ஒழியும் (16)
அற்புதம் - ஆயிரங்கோடி, தச்சன் (அற்புதன்) (17)
இட்ட - வைத்த, விருப்ப, கொடுத்த (17)
அலர் - விரிந்த, மலர், பழிச்சொல், நீர் (18)
வனம் - அழகு, பொழில் (18, 51)
நிறம் (51)
வடிவு, சாடு, நீர் (96)
ஆக்கம் - உண்டாக்க, உயர்தல், இலாபம், செல்வம் (19)
அரும்பு - முகை, படரும் (19)
சந்து - தூது, இடைவழி, சந்தனமரம் (20)
சரி - கைவளை, சரிதல், ஒப்பு (23)
கங்கு - வரம்பின் பக்கம், பருந்து (23)
அணங்கு - அழகு, கொலை (23)
தந்த - யானைக்கோடு, கொடுத்த, கல்விநூல் (24)
கரி - யானை, சாட்சி (24)
தகர் - பூமி, பூந்தாது (25)
கரம் - கரணம், நஞ்சு, கை (25)
அந்தகர் - குருடர், அறிவிலர் (25)

கலக்க - மருவ, அஞ்ச (42)
வாரணம் - யானை, கடல், சங்கு (43, 98)
பட்டம் - வாள், குளம் (44)
பட்டு - பட்டு நூல், பாய்ந்து (44)
கம்பு - சங்கு, ஊன்றுகோல் (44)
பயன் - பால், பலன் (45)
நெறி - நீதி, வாய்க்கால் வழி, செப்பம் (45)
தீர்த்த - விடுத்த, திருவிழா (45)
பயம் - அச்சம், தடம் (46)
பயப்பு - நிறம், கருணை (46)
படல் - அறிவைமறைக்குந்திரை, கெடுதல், உண்டாதல், இடுதிரை (47)
மை - குற்றம், மேகம் (47)
அமரா - அமையும் இடமாக, பொருந்தாமல் (47)
பாவிய - பாவியல், பரவிய, பாவி ஐய (48)
பதம் - இடம் (49)
பாதம், அடையாளம் (49, 51)
சொல், அழகு (51)
அலங்காரம் - பேரழகு, துவளும் மாலை (49)
நாகை - இளமையும் அழகும், நாகைப்பதி, நாவும் கரமும் (50)
நடுவாகிய ஒழுக்கம் (50, 51)
நடுநிலையாகிய கையினை உடையவர் (51)
செய் - செம்மை, செய்யும், வயல் (51)
தவ - மிகுதி, குன்றல், தவம் (51)
சீர் - கவிச்சீர், சித்திரம், செல்வம், நன்மை (51)
சேகரமே - குற்றம் ஒழித்தல், முடி, சிவந்தகை, இரண்டுமே (51)
கூட்டம், சிவந்தகதிர், எருதுமறைந்து (52)
மின் - மாது, ஒளி (53)
திருமுகம் - மடல், திரும்புவீராக (53)
தீவு - முகல்லதீவு, சுவை (54)
நைதல் - சினத்தல், இரங்கல் (54)
சிந்து - கடல், சிந்துதல் (55)
ஆம் - பெருமை, ஈரம் (55)
அணி - பெருமை, அணிதல் (55)
நிழல் - குளிர்ச்சி, ஒளி, நிழல், கருணை (55)
செய்தி - ஒழுக்கம், செய்திக்குறிப்பு (56)

தவ - தவம், மிகுதி (56, 70)
படை - ஆயுதம், சேனை, படைத்தல் (56)
தெளி - துப்புரவு, கொழித்து, தூற்று, ஒலி (57)
நக - மலை, பிரகாசிக்க (58)
செழிய - பாண்டியன், மாட்சிமை, வளமை, அழகு (58)
மலையா - பொதிய மலையில், பொருந்திய, மாறாத (58)
செப்பம் - செவ்வனாதல், வீதி, நடுவுநிலை, பொற்செப்பு (59)
களவு - களாமரம், உன்மத்தம் (59)
கோடி - கோணங்கள், நூறு இலட்சம், குணங்கி (60)
உப்பு - உவர், உப்புசம் (61)
தர - கொடுக்க, அதிகரித்தல் (63)
மதி - சந்திரன், மதித்தல், புத்தி (63)
தன்னை மதித்தல் (74)
சரம் - நாணல், மாலை (64)
கண் - கணு, இடம் (66)
கொடி - பொற்கொடி, துகிற்கொடி, கொடுமையுடைய (66)
காத்தி - வேலைது காந்தி, காத்து (69)
பாடு - கேடுகள், படுதல், பெருமை (71)
கரும் - கருமை, பெருமை (72)
புங்கம் - அம்பு, உயர்ச்சி, சீலை (72)
இளை - குறை, இரங்கல், இளமை, காவல் (73)
கார் - இருள், மேகம் (தவழ்காலம்) (74, 80)
கருமை (88)
கதி - பொங்கி, வீடுபேறு (75)
திரு - அழகு, நிதிமகள், செல்வம்
கலை - கலைக்க, ஆபரணம் (மேகலை) சந்திரகலை (76)
தகை - குணம், அழகு, தடைப்படுத்தல், பெருமை (76)
சாலும் - வாயுவும், உமிழும், பொழுதும் (77)
முளரி - தீ, விறகு, தாமரை (77)
விலங்கா - தளையா, நீங்காத, மிருகங்கள் (78)
தரம் - மலை, கூட்டம் (79)
வித்தார - விதையுண்ண, விரிவு (80)
மானம் - பெருமை, வலி (80)
கொண்டல் - மேகம், கீழ்க்காற்று, கொள்ளல் (81)
கோல் - அம்பு, ஊன்றுகோல் (82)
தகர - தகர்த்தல், மணப்பண்டம், வேர், வித்து (82)

கோக்கும் - கோவை செய்யும், அரசனுக்கும் ஆண்மகனுக்கும் (83)
கடம்(ன்) - மதம், தோட்டம், தொழுகை, நீதி (84)
இறை - இறைத்தல், இறைவன் (84)
நிறை - நிறைதல், மாட்சிமை (84)
களி - செருக்கு, உன்மத்தம், கள், இன்பம் (85)
புண்டரீகம் - கமுகு, புலி, வண்டு, தாமரை (85)
கடி - அச்சமாக்கி, பொழுது, புதுமை, விஷக்கடி (86)
கந்தா - மூட்டா, கெடாத (87)
கண்டம் - கழுத்து, கண்ட சருக்கரை (87)
அணங்கு - கொலை, அச்சம் (88)
ஆட்டு - பேயாட்டடல், ஆட்சி (88)
வாரம் - அலை, அன்பு (89)
தன - தன்னால், பொன், கொங்கை (89)
வண்டு - அம்பு, சங்கு, அளி (90)
ஆரம் - முத்து, சந்தனம் (90)
அரத்தம் - செம்மை, பொன் (90)
வாய்ப்பு - வசப்படல், வளமை, உபகாரம் (91)
கணி - அளவு, வேங்கை மரம்
அணி - அழகு, பூண் (92)
வாசம் - மணம், இருப்பிடம் (93)
வையம் - சிவிகை, பூமி (94)
திருக்கு - கண், குற்றம் (94)
வந்தி - மலடி, கவிஞன், எய்தி (95)
களி - அக மகிழ்ச்சி, மயக்கம் (95)
வல்லு - வட்டு, வல்ல கருமம் (96)
வல் - வன்மை, சீக்கிரம் (96)
அமை - அம்மை, மூங்குல், அமைக (96)
கவி - கவித்தல், கௌவி (97)
கனம் - மேகம், வட்டம் (97)
பால் - பால், வெண்மை (97)
வித்தம் - பொன், ஞானம் (98)
புகல் - புகலல், தஞ்சம் (98)
மீ - வானம், மேல் (99)
பூ - மலர், சிறப்பு, பொலிவு, வனப்பு (99)
இரு - இருமை, பெருமை, இரா நின்ற (100)
கை - படை, வகுப்பு, கை (101)
கரம் - நஞ்சம், கை, கிரணம் (101)

## அருஞ்சொற்கள்

அக்கம் - கண் (24)
அடம் - கொடுமை (39)
அமட்டா - அதட்டா நிற்கும் (67)
அலம் - அச்சம் (72)
ஆம் - ஈரம் (55)
இக்கு - கரும்பு (3)
இயம் - இசை நூல் (48)
இலம்பாடு - வறுமை (71)
உகளம் - இரண்டு (76)
ஏமம் - பிதையல் (2)
கங்கு - பருந்து (23)
கப்பு - கவர் (27)
கம் - வானம் (23, 63)
தலை (99)
கற்பம் - மருந்து (68)
காதம் - கொலை (67)
கெடுநிலம் - பரத்தையர் (34)
கையடையார் - ஆயுள்வேதம் கற்றவர் (101)
சரி - வளை (23)
சிதடு - அறியாமை (26)
தவக்கம் - திகைப்பு (1)
தா - வலி (22)
தாரம் - அருமபண்டம் (90)
தித்து - பொய் (56)
துங்கம் - பெருமை (30)
நிவம் - உவமை (62)
பங்கு - சேறு (46)
படலம் - கூட்டம் (47)
பட்டம் - குளம் (44)
பயம் – நீர் (45)
மட்டாயுதம் - வாள் (67)
மண்ணை - பிசாசு (7)
மா - வெறுப்பு (1)
மா - திருமகள் (98)
வல - வல்ல (21)

# தொகுப்புரை

தமிழ் இஸ்லாமியப் பாவலர்களின் பெயர்ப்பட்டியல் நீண்டிருந்தும், ஒரு சிலரின் பெயர்களை மட்டுமே தமிழ் கூறும் நல்லுலகம் அறிந்திருக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. தமிழில் புது வகையான இலக்கிய வகைகளை அறிமுகம் செய்து வைத்த தமிழ் இஸ்லாமியப் புலவர்களின் ஏற்றம் அங்கீகரிக்கப்படாத நிலை ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் உள. இதற்கு இஸ்லாமிய இலக்கியங்களில் கலந்துள்ள அறாபியச் சொற்களின் பொருள் புரியாமையும் ஒரு காரணம் என்று சொல்லப்படுகிறது. டாக்டர் எம். எம். உவைஸ் அவர்களின் பெருமுயற்சியால் மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பதிப்புத்துறையின் வழியாக வெளிவந்துள்ள 'தமிழிலக்கிய அறபுச் சொல் அகராதி', இஸ்லாமிய இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள அறபுச் சொற்களின் பொருளை விளக்கிக் கூறும் வகையில் அமைந்துள்ளதால் அவற்றைச் சுவைக்க விரும்பும் சுவைஞர்களின் இடர் ஓரளவு களையப் பெற்றுள்ளது. ஆங்காங்கே கூட்டப்பட்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாடுகள், அவ்விலக்கியங்கள் பற்றிய பரவலான அறிமுகங்கள் செய்யும் பணியைச் செய்தன. மேலும் பல புரவலர்கள் இஸ்லாமிய இலக்கியங்கள் நூல்வடிவில் வர உதவியதுடன் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நடாத்தி அச்சொற்பொழிவுகளையும் நூல்வடிவில் வெளிவர ஏற்பாடுகள் செய்து, தமிழ் இஸ்லாமிய இலக்கியத்தின் ஏற்றத்துக்குக் கால்கோள் செய்தனர்.

நான்கு காப்பியங்களையும், பன்னூறு பாடல்களையும் தமிழுக்கு வழங்கிப் பெருமை கொண்ட ஷெய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை கற்றறிந்தோர் ஏற்றும் தகைமைச் சால்பினர்; புலவர் நாயகம் என்று போற்றப்படும் பல்துறை ஆற்றலர்; உமறுப் புலவரின் சீறாப்புராணத்தைப் பிழையின்றிப் பதிப்பித்துப் பதிப்புத் துறையிலும் தம் முத்திரையைப் பதித்தவர்.

நாகூரைப் பற்றியும், நாகூரில் அடங்கியிருக்கும் ஷாகுல்ஹமீது ஆண்டகை அவர்களைப் பற்றியும் புகழ்ந்து பாடப்பட்ட நூலான நாகையந்தாதியில் புதைந்துக் கிடக்கும் கவிச் சுவைகளை அகழ்ந்தெடுக்கும் நோக்கில் அமையப் பெற்றதே இவ்வுரை.

முதலியலில் புலவர் நாயகத்தின் பிறப்பு, அவர் பல்துறையில் பெற்ற ஞானத்தின் சிறப்பு, படைத்த படைப்புக்களின் தொகுப்பு, அவர் பெற்ற பாராட்டுரைகள் போன்றன சுட்டப்படுகின்றன.

இரண்டாமியலில் சிற்றிலக்கியங்களின் தோற்றம், எண்ணிக்கை வரையறை பற்றிப் பாட்டியல் நூல்களில் காணக் கிடைக்கும் செய்திகள், சிற்றிலக்கிய எண்ணிக்கையில் அந்தாதி இலக்கியங்கள் முதன்மை பெறும் நிலை, அதன் வகைகள், தமிழ் இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் ஆகியன பற்றி விரிவாக விரித்துரைக்கப் பட்டுள்ளது. நாகையந்தாதியின் அமைப்பு, அதன் நுவல் பொருள், அவ்விலக்கியம் பதிப்பிக்கப்பட்டுள்ள ஆண்டுகள் போன்ற செய்திகளும் இதில் குறிக்கப்பட்டுள்ளது.

அடுத்த இயலில் புலவரின் அவையடக்கப் பாடல் பற்றியும், அந்தாதித் துறையினகவல் பற்றியும், காப்புச் செய்யுளில் இறைச் சிறப்பைச் சிறை செய்த புலவரின் ஆற்றல் பற்றியும் விளக்கப் பட்டுள்ளது.

நான்காவது இயலில் புலவருக்கு நலமளிக்கும் நாகையின் வளங்குறித்த விளக்கங்கள் இடம் பெறுகின்றன. தஞ்சைக் களமாதலின் ஆண்டுச் செறிந்துள்ள இயற்கை எழில், அப்பதியின்கண் உயிரினங்கள் ஆரவாரித்துச் சிறக்கும் அழகு போன்றன விளக்கப் பட்டுள்ளன.

அடுத்த இயலில் ஷாகுல்ஹமீது ஆண்டகை அவர்கள் ஆற்றிய அற்புதங்கள் சிலவற்றினைப் புலவர் நாயகம் புகழ்ந்து கூறும் விதம் விளக்கப்பட்டுள்ளது.

ஆறாவது இயலில் நோய்தீர்ந்த நல்யாக்கையை அருளுமாறு கேட்டு, அஃது இன்பம் துய்ப்பதற்கன்று; இறையைத் துதிப்பதற்கே எனப் புலவர் வேண்டிக் கேட்கும் சிறப்பு விரிக்கப்பட்டுள்ளது.

அடுத்த இயலில் நாகையந்தாதியின் நெஞ்சையள்ளும் இலக்கிய நயங்களைச் சுட்ட வேண்டியிருப்பதால் அந்த இயல் சற்று விரிவாக விரித்துரைக்கப்பட்டுள்ளது.

இஸ்லாமியப் புலவர்கள் தம் படைப்புக்களில் சமயக் கருத்துக்களுக்கு முதன்மை தந்து படைப்பது மரபு. அந்த மரபு வழிப்பட்ட

புலவர்நாயகம் தம் படைப்பில் ஆங்காங்கே இஸ்லாமியச் சமயச் செய்திகளை இணைத்து இலக்கியத்திற்குப் பெருமை சேர்த்த பாங்கு எட்டாவது இயலில் குறிக்கப்பட்டுள்ளது.

அடுத்த இயலில் அந்தாதியில் அமைந்துள்ள யமகப் பாடல் களின் அமைப்பு, புலவர் நாயகத்தின் கரத்தால் உருவம் பெறும் உவமை, உருவகம் ஆகியனவற்றின் சிறப்பு இலக்கணக் குறிப்புகள் போன்றன குறிக்கப்பட்டுள்ளதுடன் சில உவமை, உருவகத் தொடர்கள் பற்றிய பட்டியல்கள் தரப்பட்டுள்ளன.

இஸ்லாமிய இலக்கியங்களில் அறபு மொழியின் கலப்பு தவிர்க்க முடியாத ஒன்று என்பதையும், அந்தாதி பாடுவதற்கு வட மொழிப் புலமை பயன்படும் விதம் குறித்தும் இறுதி இயலில் விரி வாகக் கூறப்பட்டுள்ளது. நாகையந்தாதியில் இடம் பெற்றுள்ள அறபுச் சொற்கள், பிற தேயத்துச் சொற்கள், வடமொழிச் சொற் கள் ஆகியனவற்றின் பட்டியல்கள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் புலவரின் செறிந்த சொல்லாற்றலை விளக்கும் வகையில் அவர்கள் கையாண்ட சொல்வளத் தொகுதி இடம் பெறுகின்றது.

நாகையந்தாதியைப் படைத்த புலவரே அதற்கு உரையும் எழுதியிருப்பதால் அவர் எந்த நோக்கில், எந்தப் பொருளில் சொல்லை ஆள்கின்றார் என்பதனைத் தெளிவாக தெரிந்து கொள்ள முடிகின்றது. புலவர் நாயகத்தின் உரைத் திறனைப் பற்றித் தனியாக ஆராய்வதற்கு இடம் உள்ள வகையில் அவர் களின் உரை கம்பீரமாக நடந்து செல்லும் அழகை நாகையந்தாதி யில் காண முடிகின்றது.

தமிழ் இஸ்லாமிய இலக்கியத்தின் பரப்பு விரிவானது. அதைப் பற்றி ஆராய்ந்து வெளிவந்துள்ள நூல்களின் எண்ணிக்கை போது மானதாக இல்லை. இது பற்றிய விரிவான ஆராய்ச்சிகள் மேலும் தொடரப்பட வேண்டும். நாகையந்தாதியைப் பற்றிய இவ்வுரை ஓர் அறிமுகமே. இதுபோன்ற அறிமுகங்கள் தொடர்ந்தால் தமிழ் இஸ்லாமிய இலக்கியம் செழிக்கும். இஸ்லாமியத் தமிழ் இலக்கி யங்கள் இஸ்லாமியருக்கு மட்டும் உரியன அல்ல. தமிழ் மண் ணுக்கே உரிய பொதுச்சொத்து. எனவே தமிழறிஞர்கள் இது பற்றிக் கவனம் செலுத்தி இதன் செழுமைக்கு உரம் சேர்க்க வேண்டும்.

# துணை நூற்பட்டியல்


1. அகநானூறு — நியு செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1981.
2. அண்ணா, (பு.பெ.), — ஸ்ரீவிஷ்ணு ஸகஸ்ராம பாஸ்யம், ஸ்ரீராம கிருஷ்ண மடம், சென்னை, 1983.
3. அப்துல் அஸீஸ், ஏ.எம்., — இஸ்லாம் காட்டும் ஆரோக்கிய வாழ்வு, தம்பி புக் சென்டர், சென்னை, 1980.
4. அப்துல் கபூர், கா., — இஸ்லாமிய இலக்கியம், இஸ்லாமிய இலக்கிய ஆராய்ச்சி நிலையம், தக்கலை, 1978.
5. அப்துல் கறீம், மு., — சீறாப்புராணத் திறனாய்வு, ஆயிஷா பதிப்பகம், அதிராம் பட்டினம், 1980.
6. அப்துல் கறீம், மு., — இஸ்லாமும் தமிழும், கழகம், சென்னை, 1982.
7. அப்துல் ரகுமான், — குணங்குடியார் பாடற்கோவை, அகரம், சிவகங்கை, 1980.
8. அப்துல் ஜப்பார் ஜமாலி, கே. ஜெ. — இறைமறையில் இறைநேசரின் மகத்துவம், ஜமால் பதிப்பகம், குரும்பலூர், 1979.
9. அப்துற்-றகீம், — இஸ்லாமியக் கலைக் களஞ்சியம், யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ், சென்னை, 1979.
10. அப்துற்-றகீம், — முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள், யுனிவர்ஸல் பப்ளிசர்ஸ், சென்னை, 1980.
11. அப்துற்-றகீம், — வலிமார்கள் வரலாறு, கர்னட் புக்ஸ், சென்னை, 1972.

12. அருணாசலம், மு., தமிழ் இலக்கியம் வரலாறு - 15 ஆம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், 1969

13. அன்பழகன், க., அறிஞர்கள் பார்வையில் கலைஞர், மற்றும் பலர், கலைஞர் மணிவிழா மலர்க்குழு, சென்னை, 1984.

14. அஜ்மல்கான், பீ.மு., இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள், பாவலர் பதிப்பகம், கம்பம், 1982.

15. இராமச்சந்திரன், ப., திருவரங்கத்தந்தாதி - ஓர் ஆய்வு, எம்ஃபில் ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக் கழகம், திருச்சி, 1985.

16. இராஜநாயகம் நாச்சிகுளத்தார் பதிப்பு, சென்னை.

17. இஸ்மாயில், மு.மு., இனிக்கும் இராஜநாயகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

18. உவைஸ், எம்.எம்., இஸ்லாமும் இன்பத் தமிழும், யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ், சென்னை, 1976.

19. உவைஸ், ம.மு., இஸ்லாம் வளர்த்த தமிழ், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

20. உவைஸ், எம். எம்., தமிழிலக்கிய அறபுச் சொல் அகராதி, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.

21. கனி, ஆர். பி. எம்., பேரின்ப ரஸவாதம், அருள் நூர் பதிப்பகம், சென்னை, 1972.

22. கனி, ஆர். பி. எம்., இஸ்லாமிய இலக்கியக் கருவூலம், அருள் நூர் பதிப்பகம், சென்னை, 1963.

23. கனி, ஆர். பி. எம்., கலைமறை முஹம்மது என்னும் காரணம், சென்னை, 1961.

24. கந்தரலங்காரம், கழகம், சென்னை, 1985.

25. கம்பராமாயணம், வை. மு. கோபாலகிருஷ்ண மாச்சாரியார் கம்பேனி, சென்னை, 1967.

26. குலாம் காதிறு நாவலர், கன்ஜுல் கராமத்து, நியூபிரஸ், சென்னை, 1957.

27. குறுந்தொகை நியுசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1981.

28. சஞ்சீவி, ந., (ப. ஆ.) தெய்வத்தமிழ், பல்கலைக்கழக வெளியீடு, சென்னை, 1980.

29. சண்முகம் பிள்ளை, மு., சிற்றிலக்கிய வளர்ச்சி, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

30. சாயபு மரைக்காயர், மு., இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள், பாத்திமா பதிப்பகம், காரைக்கால், 1985.

31. சாலி, ஜே. எம்., நாகூர் நாயகம் வரலாறு, நூர் பதிப்பகம், சென்னை, 1985.

32. சாலி, ஜே. எம்., இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்கள், நூர் பதிப்பகம், சென்னை, 1978.

33. சீறா ஆய்வுத்திரட்டு, டாக்டர் சாகிர் உசேன் கல்லூரி, இளையாங்குடி, 1974.

34- சீறாப் புராணம் நாச்சிகுளத்தார் பதிப்பு, சென்னை, 1974.

35. சீனிவாசன், அரங்க., காவடிச்சிந்தும் கவிஞன் வரலாறும், சேகர் பதிப்பகம், சென்னை, 1984.

36. செயராமன், ந. வீ., சிற்றிலக்கியச் செல்வம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1979.

37. செயராமன், ந. வீ., சிற்றிலக்கியத் திறனாய்வு, இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1980.

38. செயராமன், ந. வீ., பாட்டியலும் இலக்கிய வகைகளும், இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1981.

39. செய்யிதுஹசன் மௌலானா எம்.கே., — இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள், அரசுவெளியீடு, கொளும்பு, 1968.

40. செய்யிது ஹாநா முஹையதீன், அ.ர., — கருணைக்கடல், காதிரிய்யா மன்ஜில், நாகூர், 1982.

41. சையிது முஹம்மது "ஹசன்", எம்., — புலவர் நாயகத்தின் நிருப செய்யுட்கள், மில்லத் பப்ளிசர்ஸ், சென்னை, 1980.

42. தண்டியலங்காரம், — கழகம், சென்னை, 1969.

43. திருக்குற்றாலக் குறவஞ்சி, — கழகம், சென்னை, 1968.

44. திருக்குறள், — கழகம், சென்னை, 1982.

45. திருமந்திரம், — கழகம், சென்னை, 1974.

46. திருவருட்பா, — ஸ்ரீஆதிமூலம் பிரஸ், சென்னை, 1928,

47. திருவாய்மொழி — அண்ணங்கராச்சாரியர்

48. தேவாரம் — ஸ்ரீகுமரகுருபரசங்கம், ஸ்ரீவைகுண்டம், 1968.

49. நயினார் முகம்மது, சி., (ப.ஆ) — இஸ்லாமியத் தமிழாராய்ச்சி மாநாடு, இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி, 1973

50. நயினார் முகம்மது, சி. அர். அப்துல் ஜப்பார், (ப.ஆ.), — இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கோவை. இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி, 1978.

51. நன்னூல் — கழகம், சென்னை, 1971.

52. நஸீமுதின், ஏவி.எம்., — புதிய வீணை, கவிதாலயா, சென்னை, 1979.

53. நீலகேசி, — கழகம், சென்னை, 1973.

54. பசுலு முகியிதீன், செ., — நோயறு பனுவல், பசுமைப் பதிப்பகம், நாகர்கோவில், 1977.

55. பட்டனத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், — கழகம், சென்னை, 1967.

56. பீர்முகம்மது, பி.ஏ., குர்ஆன் கூறும் குணப்பண்புகள், ஹுதா பப்ளிஷர்ஸ், கம்பம்.

57. முகம்மது பாருக்., கா., ஹிஜ்ரி 15ஆம் நூற்றாண்டுத் தொடக்க விழா மலர், முஸ்லீம் அனாதை இல்லம், திருநெல்வேலி, 1981.

58. முத்துச்சண்முகன், நிர்மலாமோகன், சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வளர்ச்சியும், முத்துப் பதிப்பகம் மதுரை, 1979.

59. முஸ்தபா, மணவை., (தொ.ஆ.) தமிழில் சூஃபி இலக்கியங்கள், மீரஃபௌண்டேஷன், சென்னை, 1979.

60. முஸ்தபா, மணவை., (தொ.ஆ.) சிந்தைக்கினிய சீறா, மீராஃபௌண்டேஷன், சென்னை, 1978.

61. முஹம்மது ஹசன், மு., சொர்க்க நீதி விளக்கம், நன்மார்க்கப் பதிப்பகம், காயல்பட்டினம், 1978.

62. யாப்பருங்கலக் காரிகை கழகம், சென்னை, 1978.

63. வல்லிக்கண்ணன், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

94. ஷெரீப், கா.மு., சீறாப்புராணம்—நுபுவ்வத்துக் காண்டம், சீதக்காதி நூல் வெளியீட்டகம், சென்னை, 1982.

ENGLISH

1. Shaik Hasan Sahib, Qadhire, A., The Divine Light of Nagore, Durga Shariff, Nagore, 1985.

# நாகையந்தாதி

## காப்பு

கட்டளைக் கலித்துறை

மணியொளி போலு மலர்மணம் போலு மருவியுயிர்க்
கணியொளி போன்றவுண் மைப்பொரு ளேயக முஞ்சுகமும்
கணியொளிர் மேதையுந் தந்தருள்வாய் அப்துல் காதிர்புகழ்ப்
பணியொளி யாநிதி நாகை யந்தாதி படிப்பவர்க்கே.

## நூன்முகம்

முதல்நபிக் குரிய முறையொடு புணர்த்தி
நுதலிய பொருளை நுவன்று கேட்டது.

1. மாதவக் காரணி வாரணத் தார்மகு மூதளித்த
மாதவர்க் காருயி ராருயர் தோன்றல் மரபுடையீர்
மாதவக் காக்கைய னோய்க்கறை போக்குக வண்சிறகின்
மாதவக் கான்மலர்த் தேன்றட நாகை மகீபதியே.

ஒருநா னெறிக்கு முரியமுறை புணர்த்துங்
குருவே யென்றென் குறையிரந் துயர்த்தது.

2. பதியேம நனிமருநபி மாதுலர் பண்பறிவுட்
பதியேம நனிமருகரிந் நால்வர் பகர்நெறிதீப்
பதியேம நனிமருவாதி யார்க்கும் பயிற்றுமுயர்
பதியேம னறிமிரும்பொரு ணாகைப் பதிக்கரசே.

தற்பதி குறித்துத் தகைமையுங் குறித்துப்
பொற்பத மாட்சிப் பொருளை வியந்தது.

3. பதிக்கு மணிமுடி மீதே சிறக்கும் பருமணிப் பேர்
பதிக்கு மணிமுடி யாதன லில்லைநும் பாதமலர்ப்
பதிக்கு மணிமுடி யாளருக் கேபடர் பாயிருள்சீப்
பதிக்கு மணிமுடி நாற்றெங்கு நாகையம் பார்த்திவரே.

அண்ணலது கருணை யம்பக நோக்க
மெண்ணிய பொருளொடு மியலு மென்றது.

4. பார்த்திட்ட மாயை யொழிந்தோ ரொடுபஃ றிக்கிணைகற்
பார்த்திட்ட மாக நடத்திவித் தோய்பல காவிறையைப்
பார்த்திட்ட மாதவ நாகைமன் னா விந்தப் பாவிமுகம்
பார்த்திட்ட மாகப் புரப்பீ ரிதுசவு பாக்கியமே.

பெருந்தகை நாகைப் பிரபந்தியர் நண்பா
அருந்துயர் களையு மருடரு கென்றது.

5. பாக்கலை யாவு முணர்ந்தோய் கமுகின் பழக்குலையின்
பாக்கலை யாமுத் துதிர்பொழி னாகைப் பதிவளரன்
பாக்கலை யாமதி யேகுரு வேபிர பந்தியர்நண்
பாக்கலை யாவரு ளீகவென் னோய்த்துயர் பற்றறவே.

நயம்பெற முன்னர் நவந்தருந் தம்பலம்
பயம்பெற வின்னும் பகுத்தி ரென்றது.

6. பற்றாம் பலரு மிருந்தாவ தென்னைப் பகைப்பிணியால்
பற்றாம் பலம்புந் துரவாய வுள்ளம் பயன்பெற நும்
பற்றாம் பலமின்னுந் தந்தருள் வீர்பது மத்துறைதேன்
பற்றாம் பலங்கமழ் நீராடை நாகைப் பதிக்கிறையே.

உயிரினைக் காக்கு மொள்ளிய கிருபையென்
துயரினுக் கமிர்தந் துய்ப்பி யென்றது.

7. இறைக்குங் குலிக விரற்பது மக்கை யிளம்பிடிதான்
இறைக்கு முயிர்க்கும் பொருந்தியம் மண்ணையை யீடழித்தீர்
இறைக்கு நபிக்கு மறைக்கு மினியவ வென்பிணிக்கும்
இறைக்குங் கிருபை யளித்திநன் னாகை யிராசதரே.

மறைபடு பொருளை வெளிப்படுத் தண்ணல்பால்
குறைபடுத் துள்ளங் கூம்பலென் னென்றது.

8. இராசித் தரும்பொருள் வல்லவன் பால்பெற்ற வெம்மிறை சொல்
இராசித் தரும்பொருள் போனின்ற வாகிஸ்தி யேந்தியந்த
இராசித் தரும்பதம் போற்றச் செய்தீர்பைய லித்துயரால்
இராசித் தரும்புவ தோவுள நாகை யிருப்பவரே.

விருப்ப நும்புகழ் வியந்தெழு கடற்கப்பா
விருப்பினு மாணை யெளிதல்ல வென்றது.

9. இருப்புக் கடலக நாகைமன் னாநும் மிசையெனினும்
இருப்புக் கடலையென் னாமெழு கேன்மின் பம்பெறுங்காண்
இருப்புக் கடல்சுதை நெய்தேன் நன்னீரிக்குச் சாறெடுத
யிருப்புக் கடலிட மேனு நும் மாணை யெளிதல்லவே.

அணிமுகக் காட்சி யருளுக வென்றது.

10. அல்ல லரிந்தழ கேங்க மலர்நும் மடியவன்மெய்
அல்ல லரிந்த திருமுகக் காட்சி யருளிரைம்பால்
அல்ல லரிந்த மடவார் மயக்க மகற்றுளமெய்
அல்ல லரிந்தள மேந்திய நாகை யருந்தவமே.

பிணிதுய ரொழிக பெருமன மென்றது.

11. அருந்த வருந்தத் தெவுட்டா வமுத மறிவுளரும்
அருந்த வருந்ததை சிந்தா மணியள வின்றியகை
அருந்த வருந்தரு நன்மன மேயொழி யாகுலமெய்
அருந்த வருந்தலி லாதுயர் நாகை யகப்பொருளே.

வன்புடை நஞ்சம் வைத்தவற் காக்கினை
துன்பக் காப்பினைத் தொலைத்திடு கென்றது.

12. அகத்தடை பட்டுல காசையிற் பெற்ற வருந்துயரின்
அகத்தடை பட்டுழல் வேனுக் கிரங்கி யருளிர் மன்னன்
அகத்தடை பட்டநஞ் சிட்டவற் காக்கினை யாலணிசொல்
அகத்தடை பட்ட துயர்கீர்த்தி நாகை யரிக்குன்றமே.

நீடிய நாகையி னிறையின் றகையுடல்
ஆடிய தானந்த மல்லவோ வென்றது.

13. அரிக்கு மரிக்குழ லா லுல கேழு மமையுமிருள்
அரிக்கு மரிக்குலங் காட்டிய மேன்மை யறிவரெவர்
அரிக்கு மரிக்குமரிக்கு முயரொளி யங்கமன்றோ
அரிக்கு மரிக்குண நாகையி லாடிய தாநந்தமே.

இரக்கம் வைப்பிரென் றெதிர்குறை யிரந்தது.

14. ஆநந்த மாறுபட் டார்முனங் கோல்கொண் டடித்தெழுப்பி
ஆநந்த மாட்டி லளித்தீர் விண்போலும் மலர்ந்தபண்ணை
ஆநந்த மாமணி யால்திரு நாகை யரசவைத்திர்
ஆநந்த மாதவ மேயடி யேன்பிணி யாசறவே.

வரத்தோர்க் கென்சொல் வறியதென் றிரங்கல்.

15. ஆசினி மைத்தமி னொத்தவிவ் வாழ்வென் றறிந்தகற்றி
ஆசினி மைத்தவம் பூண்டதன் றோமன மாம்பிரநல்
ஆசினி மைத்தண் டலைத்திரு நாகையர்க் காயதென்சொல்
ஆசினி மைத்தடங் கண்ணியர்க் காட்படற் கையமின்றே.

ஓகையி னடங்கி யோரூர் விடுத்திந்
நாகையி லுதய நயந்தன ரென்றது.

16. ஐயம் படுங்கசங் சூன்மம் பன்மூல மகற்றிமெய்யில்
ஐயம் படுங்கசம் போல்வலி யீந்தப் பதிமுழுதும்
ஐயம் படுங்கசம் போம்படி செய்தங் கமைந்துபுலன்
ஐயம் படுங்கசங் காட்டினர் நாகையி லற்புதமே.

பாதுக மின்னும் பயனுள வென்றது.

17. அற்புத னன்றிட்ட கொட்டையில் பாதுக மம்புயத்தாள்
அற்புத நன்றிட்ட மாகத்தொட் டீரரி தேர்கரியாள்
அற்புத னன்றிட்ட நாகையு மெண்மை யவரிடத்தும்
அற்புத னன்றிட்ட வுள்ளத்து மென்று மலர்ந்தனவே.

சீதல ராய்த்துட் சிறந்தன வென்றது.

18. அலர்வன மாமை யுருவினர் சீர்த்தி யணிகவியின்
அலர்வன மாலை புனைதலி னாற்பல வாயத்தின்வாய்
அலர்வன மாய விரத்தலெவ் வாறினி யம்புயமொய்
அலர்வன மாநிழ னாகையர் கோன்செய்த வாக்கமிதே.

என்குறை யுணரா திருந்திரே லதுநும்
நன்குறை பெருமையி னயமெனக் குறித்தது.

19. ஆக்கத் தரும்பிகல் பார்ப்பினி கொங்கை யழித்துப் பின்னர்
ஆக்கத் தரும்பெருஞ் செல்வம் பெற்றீர் முறை யாற்று மென்சொல்
ஆக்கத் தரும்பயன் காணலை யேலது நும் பெருமை
ஆக்கத் தரும்பிய சீர்நாகை வாழரிச் சந்தனமே.

துன்ப வினையிற் சுழல்வனோ வென்றது.

20. சந்தனம் போனடை யாரிட மேவிட்டுத் தையல்வருஞ்
சந்தனம் போடக் கண்டார் கொடியன்ன தயங்குவனோ
சந்தனம் போதகில் குங்குமஞ் சண்பகந் தாந்தவழ்வ
சந்தனம் போர்த்த மணிமாட நாகைதற் காவலரே.

இன்பநுகர் காட்சி யிதய நயந்தது.

21. தற்கா வலரரி நாகையர் கோன்மறை தந்திடுமோ
தற்கா வலரசி னுக்கா திறத்தைக் காவரமீ
தற்கா வலரக லக்காட்சி யாக்கொளத் தன்மைபகா
தற்கா வலரணி நுண்டே னுகரளி தாமெனவே.

வண்டு தூதாக வருந்திக் கேட்டது.

22. தாமதி யாக முடையார் தென்னாகையர் தம்மிடம்போய்
தாமதி யாகருணைப்பெற வெந்துயர் சாற்றிப்பொற்றோள்
தாமதி யாகமின் னேவாங்கி வம்மின்கள் சார்பிரபந்
தாமதி யாகப் பிணிநீங் கெனச்சஞ் சரீகங்களே.

வண்பத மாட்சி வழங்கிற் றென்றது.

23. சரிகங் கணங்குல முன்கைமின் னார்குடை தண்புனலாற்
சரிகங் கணங்குடை வால்வளை முத்துஞ் சரோருகமுஞ்
சரிகங் கணங்குளி ரிந்திற்கும் நாகையர் தாட்டிறமஞ்
சரிகங் கணங்குயர் வேல்வல னுக்கிறை தந்ததுவே.

சொல்லின் கரியே தோற்றிற் றென்றது.

24. தந்தக் கரிய ரரியர்பொற் றேரினர் தம்படைக
தந்தக் கரிய ரமர்புரிந் தார்தவ நாகையர் சொல்
தந்தக் கரிய ரவராத லான்மற்றுஞ் சட்சமையர்
தந்தக் கரிய ரடரிக லாலுட் டகர்ந்தனரே.

மல்லல் கரமே மகிமைய தென்றது.

25. தகரந் தகரந் தகரவி நாகையர் தண்கனிவைத்
தகரந் தகரந் தகர வயின்றதுஞ் சண்டகர்பா
தகரந் தகரந் தகரவ் நீப்பதுஞ் சார்கலிர் சொல்
தகரந் தகரந் தகரமென் றுன்பத்தைத் தட்டுவதே.

ஆக்கத் திருப்பதத் தாண்டகை யென்னின்
தீக்கடைக் குணமெலாம் போக்குதி ரென்றது.

26. தட்டுக் கடைவடி வேலினர் நீதியர் தாபதர்பொன்
தட்டுக் கடைவுப காரிகள் தாழ்பதந் தந்தெனின்சி
தட்டுக் கடைகுணம் போக்குக மேதித் தடங்கஞ்சங்கு
தட்டுக் கடைவழி தேன்சிந்து நாகைத்தங் குந்துரையே.

செல்வர் வேந்தர் சீர்பல தாங்கிப்
பல்கா லுயர்நெறி பார்த்திவ வென்றது.

27. தங்கத் தனத்துடை மன்னவ ராக்கந் தணியதுந்நீ
தங்கத் தனத்தனென் றேத்த வளர்ந்தது தையலர்மா
தங்கத் தனத்தை யரும்பம் புயமெனத் தண்டுகிர்பா
தங்கத் தனத்தடஞ் சூழ்திரு நாகைத் தராதிபரே.

சிற்றின வினையது செறியழ லகற்றிநும்
பொற்பதப் பந்தர் பூநிழற் றருகென்றது.

28. தராதரங் கண்டறி யாரிடஞ் சார்வதுஞ் சார்ந்தவர்க்கே
தராதரங் கண்டவர் தம்முற வோட்டிநுந் தாண்மலர்ப்பந்
தராதரந் தந்தெனை ரட்சிக்க வேண்டுமெற் றண்புயப்பூ
தராதரங் கத்தின்முத் தார்வாவி நாகைத் தலத்தரசே.

புதுமையிற் புதுமை புணர்பிணிக் கொம்பருந்
துதிதரல் பாதத் தொடரியல் பென்றது.

29. தலக்கொப் பரும்புங் கனிகுற்றி தந்ததுஞ் சார்ந்தவன்பார்த்
தலக்கொப் பரும்புதை தன்னிற் புதுமை சலநிதிசூழ்
தலக்கொப் பரும்புமின் சுட்டியி னாகைத் தயாள என்னோ
தலக்கொப் பரும்புகழ் காங்கலநும் பாதத் தகுதியதே.

பொய்யொழுக் ககற்றிப் பொங்கறி வெவையு
மெய்பெற வருள்வதும் மேம்புக ழென்றது.

30. தகுதிப் பதுங்க விழிவோங்க மேன்மை தயங்கவெண்ணேந்
தகுதிப் பதுங்கம் படிற்றொழுக் கார்தொடர் சார்புவிட்டே
தகுதிப் பதுங்கதி நாகைமன் னாகல்விச் சாகரம
தகுதிப் பதுங்கனங் கொள்வதும் நும்புகழ் சாதிப்பதே.

பல்லெக் கழுத்தம் பயில்வாநண் பகற்றி
நல்லொக்கல் மேலோர் நட்பருள் கென்றது.

31. சாதிப் படித்தண் டலைத்திரு நாகைத் தலைவதந்தஞ்
சாதிப் படித்தகைகொண்டகங் கொண்டசண் டாளர்நட்பைச்
சாதிப் படித்தகை தட்டின்றி யுள்ளுணர் தன்னொடுபே
சாதிப் படித்தலத் துற்றாரி னோடருள் சங்கதமே.

அஃறிணைச் சாதியோ டறைதர வல்லரென்
பகுமொழி யுணராப் பான்மையென் னென்றது.

32. சங்கந் தரமணி முன்றிலி னாகையர் தாருவண்ட
சங்கந் தரமணிப் புள்ளொடும் பேசுவர் சஞ்சலபா
சங்கந் தரமணி யாவடி யேனிதஞ் சாற்றுங்கல்விச்
சங்கந் தரமணி சொல்லுண ராததெத் தந்திரமே.

இரக்கு மெளியனை யின்னமு தருளிப்
புரத்தலே கருமப் பொருளிலொன் றென்றது.

33. தந்திர வாளணி தஞ்சையர் கோன்றரு நாகைநகர்
தந்திர வாளலர் தீபம்வைத் தார்சது வேதவியல்
தந்திர வாளப் பகலாள வோதுந்தண் வாயமுதந்
தந்திர வாளனை யுய்வித்த லேதரு மத்தகையே.

எங்கும் படர்ந்த வியல்சீ ருண்டென்
பங்கம் பழிப்பாற் பயமுமின் றென்றது.

34. மத்தகத் தாழி படுதயி ரொத்த மதிபுன்விளை
மத்தகத் தாசை யுழன்றத னால்மலி நாகையர்சீர்
மத்தகத் தானை யரசர் முடியினு மாமறைநே
மத்தகத் தாதியர் சிந்தை யிடத்து மலர்ந்தனவே.

அவயவத் தியல்பி னாக்கங் கூறி
யுவகை பூண்பா னுள்ளந்தேற் றியது.

35. மலரளித் தாரி னறுங்குஞ்சி யார்புவி மன்பதைபால்
மலரளித் தாஅங்கரு ணைக்கண்ணி னார்மைய லற்றநிரு
மலரளித் தாளுந் திருநாகை யார்மலி சீர்பதக்க
மலரளித் தானம் வரமே சொரியும்வண் மைக்கையரே.

செறிபகை தருக்கஞ் சிறந்தோ ருள்ளத்தையு
முறைதவத் தடைவே முடிப்பரென் றுரைத்தது.

36. மைக்கை தவத்தடை யாரையும் வேதம் வழீஇ பொறிதி
மைக்கை தலத்தடை சொல்லையும் நாளு மனமதிநன்
மைக்கை தவத்தடை யாள ருளமுமன் னாகையிற்பன்
மைக்கை தவத்தடை வேமுடிக் கும்மலி னம்படவே.

பற்பல பிணிக்கும் பலன்பெறு நாகை
அற்புதர் வாயுரை யணிமருந் தென்றது.

37. மலினத் திருகரம் வெண்மேனி செவ்விதழ் மஞ்சள்முகம்
மலினத் திருகண்ட மாலைசித் ராங்கம் வரட்சியிரு
மலினத் திருகச மற்றுள நோய்க்கு மருந்துநற்செம்
மலினத் திருகதி நாகையர் வாய்மலர் மந்திரமே,

பருவர லுற்றுப் பாங்கியொடு தலைவர்
தெரிகில ரென்னெனச் சேயிழை வினாயது.

38. மந்திரங் கானிறை நாகையின் வாழ்வுடை வள்ளல்பலர்
மந்திரங் கானினை வுள்ளங்கொள் ளார்மம்ம ராலணிவா
மந்திரங் காநிறை நாணழியா வில்லின் மாட்சிமைசு
மந்திரங் காநிற்பத் தாமதி யாரென் மடக்கொடியே.

ஓகை யறிவினோ டுள்ளுணர் வருளும்
நாகை யதிபதி நாமமே யென்றது.

39. மடக்க மடக்க வருமே சுகமுன்ன வல்லுடலின்
மடக்க மடக்க வலைப்பிணி போம்பற்ற மற்றுமறி
மடக்க மடக்க வரிற்குண மாபதி மாறுடையார்
மடக்க மடக்க வலியாந் தென்னாகைமன் னாமத்தையே.

பொருணய மெல்லாம் பொலியுமென் கோமான்
கருணையங் கண்ணினாற் கணித்தவர்க் கென்றது.

40. மன்னா தனவம் பொருளிலை மேலு மகிமையுளார்
மன்னா தனவண் ணிலையுமுண் டாமஞ்ஞை நாரையின்மேல்
மன்னா தநவந் தருபொழி னாகையின் மாதவர்கள்
மன்னா தனவம் பெருங்கரு ணைக்கண் மதித்தவர்க்கே.

முறையில ரியல்பை முறைமையென் றுணரா
திறைமொழி போற்றுக விதய மென்றது.

41. மதித்தக நீந்துவர் மெய்யுண ரார்புவி மாலுறை துன்
மதித்தக நீர்மை யுடையார் கயவர் மடவியல்சம்
மதித்தக நீயுழ லன்மின் நன்னாகை மதிபரின் சொன்
மதித்தக நீதியென் றோர்க மருண்டு மயங்கலையே.

நாகையர் புகழெழி னாடுக வஃதே
யோகையின் மரக்கல முடம்பே யென்றது.

42. மயங்க லக்கப்பல வாக்கமுண் டாக மருட்படச
மயங்க லக்கப்பல னின்றிமெய் யேபவ வாருதியில்
மயங்க லக்கப்பலத் தண்பொழி னாகையர் மாண்புகழின்
மயங்க லக்கப்பல ருங்கரை சேர்க்கு மலவறவே,

உலகெலா நிலைக்கு மொருமுளை போன்று
நலனுறு நாம நாயக ரென்றது.

43. மலைவா ரணந்திசைப் பாலகர் வான மதித்தீர்
மலைவா ரணந்திணை யெங்குஞ் சிறந்தன வாரிசப்போம்
மலைவா ரணந்திரி தண்புன னாகையர் மாமதுர
மலைவா ரணந்திகழ் வாயர் குத்துபெறும் வண்பட்டமே.

மாதர் மயக்க மறுத்தே யொருமை
நீத வழியி னிறுத்துவ ரென்றது.

44. பட்டம் படாகம் புகழ்முடி யார்பொற் பதியின்பசும்
பட்டம் படாகம் புனைந்தார் மரபினர் பங்கயத்துப்
பட்டம் படாகம் புள்ளூர் திருநாகையர் பாவையர்கண்
பட்டம் படாகம்பு காட்டுவ ரோர்மைப் பயனெறிக்கே.

மருவிழாப் புன்மை மாற்றிவிட் டுயர்த்துந்
திருவிழா நுந்தஞ் சீர்பத மென்றது.

45. பயனெறித் தீர்த்தறி நீங்கினும் பாதகப் பவ்வமது
பயனெறித் தீர்த்தகத் தாக்கினும் வாவிபன் மேதிமடிப்
பயனெறித் தீர்த்த வயனாகை வாழும் பதிநும்பதம்
பயனெறித் தீர்த்தமன் றோகடத் தேறற் பயப்பதுவே.

அச்ச வுள்ளத் தருந்துயர் நோய்க்கும்
பச்சைப் பொற்கழல் பசுமருந் தென்றது.

46. பயப்பங் கயப்பல வுந்தியுளாடப் பயிலுடலின்
பயப்பங் கயப்பட பாடுவனோ பிழை பல்பொறுக்கும்
பயப்பங் கயப்பல னற்கண நாகைப் பதிநுமது
பயப்பங் கயப்பத மேயென்ற னோய்க்குப் பசுமருந்தே.

உயிரின மோம்பு மொள்ளிய கருணையால்
அயர்சுமை யிறக்கி யாளுக வென்றது.

47. பசுமைப் படலம ராவளிக் குந்தகை பாசமணி
பசுமைப் படலம ராமரத் தெய்தச்செய் பன்னைறவாற்
பசுமைப் படமல ராம்பொழி னாகைப் பதியயர்துன்
பசுமைப் படலம ராக்கடத் தோற்றுமிப் பாவியையே.

மனக்க ணிசுன் கவலை மாற்றுநும் பொற்றாள்
எனக்கினி தருளி யிரட்சி யென்றது.

48. பாவியப் பாகப் புனைந்தாலு நன்றும் பரிசுணர்ந்து
பாவியப் பாகனென் றேகொள்ள வேண்டும் படரளியன்
பாவியப் பாகருளின்பொழி னாகைய பாதகவப்
பாவியப் பாக வலைச்சிந்து நுந்தம் பதமலரே.

முரண்படு நெஞ்சினர் முதுசின வெஞ்சினர்
சரண்படும் வென்றித் தார்புய ரென்றது.

49. பதமலங் காரந் தருக்கமுள்ளார் படர் வெஞ்சினச்ச
பதமலங் காரந் தவன்றிறத் தார்வந்து பண்பணியும்
பதமலங் காரந் தரத் தொடர்ந் தேபுகழ் பாத்தநல்ல
பதமலங் காரந் தவழ்புயத் தார்பதி நாகையரே.

நாகைய ரின்ப நறைபல னளித்தும்
வாகையர் முன்னும் வளந்தர நின்றது.

50. நாகைய ருந்தும்பி யின்றை வாமழை நந்தனஞ் சூழ்
நாகைய ருந்தும் பிரபலத் தாந்தந்த நற்சுவையின்
நாகைய ருந்தும் பிரசமன் றோசுக நல்கியதும்
நாகைய ருந்தும்பி மன்னருந் தேட நடஞ்செய்வதே.

செல்வரும் புலவருந் திரமோ லியரும்
நல்வகை முகக்கு நனிகழ லென்றது.

51. செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே.

கண்ட பொழுதே கதிதரு முகத்தை
யுண்டென் கிளவியா லுவமித் துரைத்தது.

52. சேகரந் தாங்கிளர் பங்கச மன்றுசெல் விற்சுதிரின்
சேகரந் தாங்கிருள் மையக னன்று செறிகமைக்குள்
சேகரந் தாங்கிய னாகையர் கோனருள் சிந்திக்குநெஞ்
சேகரந் தாங்கி யருள்செய் மெய்ம்மைத் திருமுகமே.

புட்பா ணீதம் பொருத்தினீ ரெளியேன்
கட்பா லருட்கண் கணித்தி ரென்றது.

53. திருமுக மின்ன தெனவுணர்ந் தேபுட்கள் திங்களின்க
திருமுக மின்னருள் பெற்றவன் றேதிசை செல்புகழ்மு
திருமுக மின்னணி நாகைமன் னாசிற் றடியவன் பால்
திருமுக மின்னலங் கண்ணாற் கணித்திரித் தீவினைக்கே,

நந்நபி மரபி னவமணி யறிஞர்
தந்நனி யுள்ளத் தவமணி யென்றது.

54. தீவினை யாவழி காட்டச்சென் றோற்குறு செய்யிதுநந்
தீவினை யாவன வெல்லா மொரீஇயசெம் மன்பரபா
தீவினை யாவகை காத்தவ நாகைய சீர்மறையின்
தீவினை யாவலி னோர்பவ ருள்ளச் சிந்தாமணியே.

நாட்டணி கூறி நாகைய வின்பம்
பூட்டிய விழியருட் புகல்தரு கென்றது.

55. சிந்தா மணிநிழ னீர்நிலை யாம்பல்செந் தாமரைத்தேன்
சிந்தா மணிநிழற் சஞ்சல வோசையிற் றேங்கியுள்ளே
சிந்தா மணினிழற் றுஞ்சுநன் னாகைய செங்கணிற் பொ
சிந்தா மணிநிழ லென்பிணி தீர்தற்குச் செய்திமன்னே.

உட்பகை புறப்பகை யொக்க முடித்தே
கொட்புறு திருநெறி கொண்டபொரு ளென்றது.

56. செய்தித்த வப்படை யாக்கத்தி னாற்றிரை வாங்கிக்கரை
செய்தித்த வப்படை யாவுல குண்மலந் தீவினைக்கை
செய்தித்த வப்படை யானையும் வென்று திருவநெறிச்
செய்தித்த வப்படை யாளணி நாகைத் தெளிப்பொருளே.

நிலைத்தவென் னறிவு நீரே யாகில்
உலைத்தலில் சுகமே யுடற்கோங்கு மென்றது.

57. தெளிக்கப் பகலவ னொத்தே யறிவிற் சிறந்துபன்மைத்
தெளிக்கப் பகல வருபொருளே மழைச் சீதஞ்சந்தந்
தெளிக்கப் பகலரு நாகையி னும்புகழ் சேர்முரசந்
தெளிக்கப் பகலவிர் வாகைய ராகஞ் செழித்திடுமே.

ஒன்றிய பொதியத் துயர்தமி ழதனிற்
றென்றற் றூதினைச் சிறப்பக் கூறியது.

58. செழிய னகமலை யாயதென் றால்வரு செந்தமிழுஞ்
செழிய நகமலை யாச்சுடர் கீர்த்திச் சிறந்தமையால்
செழிய னகமலை யார்பொழி னாகையர் தேகமெல்லாஞ்
செழிய நகமலை யாய்ப்புள கத்தொடு செப்புமின்னே.

நவநிலை யமைந்த நாகையின் வள்ளல்
அவயவத் தன்மையின் ஆக்கங் கூறியது.

59 செப்பங் களவரும் பாவச்செய் நாகையர் செங்கழலால்
செப்பங் களவரும் பாலைக டேன்சிந்துந் தீஞ்சொலினால்
செப்பங் களவரும் பாமய மாமுளஞ் செவ்வியினால்
செப்பங் களவரும் பாமுலை மாதர் திகைப்பதுவே.

வேந்தர்க டொண்டினும் விழுமிய துயர்தீர்
மாந்தர்கள் வாழ்த்தும் வாயுறை யென்றது.

60. திகைப் பலகோடி யடர்புகழ் நாகைய செங்கதிரே
திகைப் பலகோடி யரசர்க டொண்டினுஞ் சீரிதும்நீ
திகைப்பல கோடிய சிந்தையர் துன்பஞ் சிதறியுடல்
திகைப்பல கோடிய போதவர் வாழ்த்துந் திருப்புகழே.

சேயக மேன்மைச் சிறப்பினுலக
நாயகன் கையினது நலநய முரைத்தது.

61. திருப்புக் கதிவன நாகையர் கோன்மனைச் சென்றொலிய
திருப்புக் கதிவன வாரியி னேகரை சேர்ந்தவங்கந்
திருப்புக் கதிவன சம்பொருங் கைத்திரி தோசமுங்கூ
திருப்புக் கதிவ நகாநிற்ப வங்கந் தெளிதருமே.

என்குண மறியா தென்னெனக் கிளவி
தன்குணப் பாங்கியொடு தான் வினவியது.

62. தருமே னிவந்த மலராற் புயலுந் தடமணப்பந்
தருமே னிவந்த கவினாற் றென்னாகைத் தலைமையற்பு
தருமே னிவந்த மளித்துளம் வாடத் தமக்குரிமை
தருமே னிவந்த பசலையுங் காண்கிலர் தார்குழலே.

பூரணப் பொருளிற் புகழொடு தோன்றுங்
காரணப் பெயரின் கருத்தறி வித்தது.

63. தாரா தரமதி கந்தரப் பானுத ரத்தரத்தண்
தாரா தரமதி காலும் பரிம்பர் தரப்புகழ்சீர்
தாரா தரமதி கவுதென்ன நாகையர் தாங்கறுன்பந்
தாரா தரமதி காரமென் போறத் தளிப்பவர்க்கே.

ஊர்வளங் கூறி யுயர்போ தகஞ்சேர்
ஏர்களி றொத்தி யென்றுகை தொழுதது.

64. தத்தளிக் குஞ்சரத் தாவிசைக் கும்பம்மித் தண்டுளிசிந்
தத்தளிக் குஞ்சரற் றாநிற்ப வோதிமந் தாலொலிபோ
தத்தளிக் குஞ்சரத் தாமரைப் பொய்கைத் தண்ணாகையமோ
தத்தளிக் குஞ்சரத் தாயாதி கன்றொத்த தன்மையற்கே.

ஒண்டொடி வாட்ட முணர்ந்து செவிலி
கண்ட தோழியொடு கையறை கூறியது.

65. தன்மய நாட்டம் பதிநாகை யண்ணறம் பால்வைத்தகா
தன்மய னாட்ட மதன முஞ்சோகஞ் சந்தாப மயர்
தன்மய னாட்டந் துயிலாமை யாவுந் தரமகளின்
தன்மய நாட்டந் நலார்க்கென்னை யாங்கொ றடங்
கண்ணியே.

அண்ணல் பெரும்பதி யணிகொள் மனாறா
வண்மையின் றன்மை மதித் துரைத்தது.

66. கண்ணிக் கொடியமுத் தம்மானை யாடுங் கருங்குழற்பூங்
கண்ணிக் கொடியன மின்னார் நன்னாகைத்தங் கக்கலசங்
கண்ணிக் கொடிய மனாறா வுதயத்தைக் கண்டவர்தங்
கண்ணிக் கொடிய துயர்நோய்கள் போமொரு காதமட்டே.

அணிகதி யதவு மரியகற் பகமே
கணிகையிற் படாஅ காத்தி யென்றது.

67. காதமட் டாயுதம் போல் வெட்டி நஞ்சங் கலந்தடர்ந்து
காதமட் டாயுக லித்திருக் காலுள்ளங் கைக்கொள்வர்க்கா
காதமட் டாயு மறிவோடு காத்தி கனிபொழில
காதமட் டாயுக ளுந்திரு நாகையங் கற்பகமே.

கற்புடை நாயகிக் கண்மணி பேர
கற்பமளித் தெனைக் காத்தி யென்றது.

68. கற்பகத் தாவிசை வாளியி னீரருள் காவலர்சேய்
கற்பகத் தாவிசை நாயகி பேரகம் பார்ப்பல்வி
கற்பகத் தாவிசைத் தண்வய னாகைய காய்பிணிதீர்
கற்பகத் தாவிசை யம்பெற வேழையைக் காத்தி மன்னே.

வசந்த காலத்தும் வனந்திகழ் அஃறிணை
இசைந் தேத்துவநும் மிசையே யென்றது.

69. காத்திகைத் தேதத்த தத்தைகொக் கொக்கக் கதத்துக் கொத்திக்
காத்திகைத் தேதுத்த கத்திதக் கீதத்த கத்துக் கொத்துக்
காத்திகைத் தேதொத்தித் தாதுகத்தித் தித்த காதத்தைத்தேக்
காத்திகைத் தேதத்தித் தூதத்த நாகைக்கத் தாத்துதியே.

பல்வள நாடலை பதிநா கூர
கல்வியி னருட்கடை கணித்தி யென்றது.

70. கத்தா தவநகைப் பாலருந் தேனுங் கனிகடுன்ன
கத்தா தவனகைப் பாலணு காக்கட நாகையமோ
கத்தா தவனகைப் பாலலை வேனைக் கருத்தன்சமு
கத்தா தவனகைப் பாலவி ரட்சி கடைக் கணித்தே.

பம்மிய வெறுமை பலப்பிணி யிவற்றின்
வெம்மை யகற்றும் விழையுய லென்றது.

71. கணத்தி லம்பாடு மனக்களிப் பாலெமைக் காய்ந்துபவங்
கணத்தி லம்பாடு மடாநின்ற வால்கன கத்தின்மணி
கணத்தி லம்பாடு மரகதநீலங் கதிர்செய்பல
கணத்தி லம்பாடு மலைபொரு நாகைக் கரும்புயலே.

நாட்டணி கூறி நனிபுகழ் தலைமைச்
சூட்டணி குருவின் றொன்மை யுரைத்தது.

72. கரும்புங் கமலமுந் தந்தமுத் தேழையர் கைநிறைக்குங்
கரும்புங் கமலமுந் தங்கண் ணுழத்தியர் கார்குழற்க
கரும்புங் கமலமுந் தம்பணை நாகையர் காஜிகுலூர்
கரும்புங் கமலமுந் தல்லிகச் சூடினர் கைப்பிள்ளையே.

—10—

துயர்பல நீக்கித் தொல்லை வடிவின்
நயனருள் சஞ்சீவி நாகைமதி யென்றது.

73. கைப்பிளை யாகத் தரும்புனல் வைப்பிற் கவலையுந்தி
கைப்பிளை யாகத் தரும்பா துவன்மை கனமெழின்
கைப்பிளை யாகத் தரும்பைஞ் சஞ்சீவி கருத்துணர்மி
கைப்பிளை யாகத் தரும்பணி நாகைக் கலாமதியே.

தீவினை யிருளறச் செழுங்கதிர் விரிக்கும்
மாவினை விளக்கு மதியென் றுவமித்தது.

74. கலாமதி காரம் பொறாமை விரோதங் களவுநயங்
கலாமதி காரமை யாவினை யாவுங் கரந்திடப்பு
கலாமதி கார மணிவிளக் காங்கலைக் கானமத
கலாமதி காரம் பொழிலணி நாகைக் கதிக்கரசே.

கற்றோ ருளத்துங் காசினி நாகையும்
உற்றோ ரறிவி னுயர்கட லென்றது.

75. கதிக்குந் திருவினை யுள்ளா ரெளியர் கலாரென்றசங்
கதிக்குந் திருவினை யட்படி செய்தவ காக்கும்பர
கதிக்குந் திருவினை யோருணர் வாளர் கருத்துமுல
கதிக்குந் திருவினை நாகையு மோங்குங் கலைக்கடலே.

இபுலீ சவாப் பெண் ணிவ்வுல கிவற்றிற்
கபய நுந்தா ளடைந்தே னென்றது.

76. கலைக்க வருந்தகை கேடனு முள்ளக் கருத்தும்பொன்மே
கலைக்க வருந்தகை மாதரும் பூதவி கற்பத்தினி
கலைக்க வருந்தகை யப்புகுந் தேன்கதிர் மாடநிறம்
கலைக்க வருந்தகை நாகைமன் னாநுந்தங் காவிடத்தே.

எழிறருங் காவ லிறைசொல் லுள்ளார்
கழிதா மொழியார் கனவினு மென்றது.

77. காலு முளரியம் பார்புனல் விண்ணுங் கலப்புடறீக்
காலு முளரியம் பாழ்ங்குழி சேர்கலர் காநறைவாய்க்
காலு முளரியம் பார்வய னாகைக் கருத்தர் சொல்லெக்
காலு முளரியம் பார்முறை பேதங் கனவினுமே.

இத்தகைச் சிறைநீத் தெளியனை நுந்தாள்
உத்தமக் காப்பி னுய்த்தி ரென்றது.

78. கனவிலங் காவல வாச்சிறை மேலெண்ணங் கண்டனைமீக்
கனவிலங் காவலங் கோட்டைத் துயரங் கடத்தி நுந்தாட்
கனவிலங் காவ லகத்தாக்கி யாளிர் கனியும் புள்ளும்
கனவிலங் காவலங் கொட்டுந்தண் ணாகைக் கதிர்விளக்கே.

சித்தியி லாதவென் சிந்தை யிடத்தினும்
மித்திரன் போலருள் வித்திரென் றிரந்தது.

79. விளக்கந் தரத்தரத் தேறாது சிந்தை மிகவெருவி
விளக்கந் தரத்தரத் தோலுண் கனியின் வெறியமலர்
விளக்கந் தரத்தரத் தார்பொழி னாகைய வேண்டினனும்
விளக்கந் தரத்தரத் தாதவன் போலருள் வித்திடலே.

நாகை விளங்க நண்ணின ரின்பப்
பாகினி தருள்வான் பாடின னென்றது.

80. வித்தார மானநிறைதேன் றவழ்ந்தபொன் மெய்வனைகு
வித்தார மானமுடனார் செய்நாகை விலங்கவுற்ப
வித்தார மான வருள்சுக மேதர விச்சித்திர
வித்தார மான கவிமாலை சூட்டினன் வேண்டிக்கொண்டே.

பசப்புறு கோலம் பார்த்திவ ராலென்
றிசைத்தயர் கிற்பா ளேந்திழை யென்றது.

81. கொண்டற் களிக்குங் கடற்கு மதிக்குங் குயிற்குமடர்
கொண்டற் களிக்கு மலர்க்கு மலர்க்குங் குழற்குந்திகை
கொண்டற் களிக்கு மயர்வாள் பசலைக் குணம்பலவுங்
கொண்டற் களிக்குந் திருநாகை யார்செய்த கோலமென்றே.

அறிவுளங் கலங்கு மந்நகர் தமக்கோர்
நெறிதரு மூற்றுக்கோ ணீர்மையி ரென்றது.

82. கோலந் தகரங் கடுக்குங்கண் மாதர்கொங் காசலத்தின்
கோலந் தகரங் கலைக்கடல் பங்குற்றுக் கொள்வழிக்கில்
கோலந் தகரங் கனையர் தயாளநற் குங்குமந்தக்
கோலந் தகரங் கமழ்பொழி னாகையங் கோக்களிறே.

ஓங்குமெண் டிசைமா வூக்கிய கொற்றவ
தாங்குநுங் கையாற் றமியனை யென்றது.

83. கோக்குஞ் சரமணிப் பூண்டகை யாட்குக் குழந்தையுமக்
கோக்குஞ் சரமணி யாக்கையு மீந்துயர் கொற்றமெட்டுக்
கோக்குஞ் சரமணி நாகைமன் னாதுயர் கொண்டுழலிக்
கோக்குஞ் சரமணிக் கையா லெடுத்துக் கொளக்கடனே.

ஆக்கைக் கிழிகுண மகற்றி நன்மையின்
ஊக்கம் புரிய வுதவி செய் கென்றது.

84. கடனிறை வேழந் தருநிதிச் செல்வர் கடிகமழ்பூங்
கடனிறை வேழந் தடப்பொழி னாகைய காத்தருளிர்
கடனிறை வேழந் தவழுடல் வாய்மை க்மைதயைசீர்
கடனிறை வேழந் தருமங்கள் பூண்டு களிப்புறவே.

அண்ண லணிகழ லரவிந்தம் பூத்தற்கென்
கண்ணுங் கருத்துங் கணியிட னென்றது.

85. களிப்புண் டரீக மலம்வரும் வேலர் கயறடிமான்
களிப்புண் டரீக மலர்புக ழார்வழி கான்கெழுதீங்
களிப்புண் டரீக மலர்வன நாகையர் காலிணையாங்
களிப்புண் டரீக மலர்வதென் கண்ணுங் கருத்தினுமே.

காரணர் மரபார் கண்ணோக் குறுமேல்
சீரணர் பிணிபல செல்லு மென்றது.

86. கருத்துவக் குங்கடி யாம்வினை யன்று கனவெனவெக்
கருத்துவக் குங்கடி யாகச்செய் தார்வழி கார்புகைய
கருத்துவக் குங்கடி யார்மனை நாகையர் கண்ணுறிற்பு
கருத்துவக் குங்கடி யாதனை யுஞ்செல்லுங் கைகண்டதே.

பல்பிணி கண்டித்துப் பண்பின தாக்கை
நல்குதிர் கொடையி னாயக வென்றது.

87. கண்டங்கந் தான விடத்து மற்றுள்ள கடும்பிணியுங்
கண்டங்கந் தான வியல்போ டருளிர் கபாடநிலைக்
கண்டங்கந் தான விராலய நாகையிற் கற்றவர்சொற்
கண்டகங்கந் தாந வியந்திகழ் சீர்புனை காரணரே.

குரிசில் மணத்தால் குளிர்ந்துளம் விகாரப்
பொருள்பல வொழுகிப் புகழு மென்றது.

88. காரணங் காட்டுக் குபிரர்பொற் றேர்செலக் கற்பித்துமுற்
காரணங் காட்டுக் குரிசினன் னாகையர் கான்கலந்தால்
காரணங் காட்டுக் குயிலு மளியுந்தென் காலுமன்றிக்
காரணங் காட்டுக் குணமு மனமுங்கை வாரத்தமே.

துயர்தருந் துன்பச் சூளையர் ஞாங்கர்
மயலணு காது மறுத்தியென் றுரைத்தது.

89. வாரத் தமைட வாவிய போன்ற வரிவிழிபொன்
வாரத் தமைட வார்மயல் வேண்டுங்கொல் வாண்மதியால்
வாரத் தமைட வாவியந் தண்வயல் மாமணியும்
வாரத் தமைட வாவரு ணாகைவண் டார்வள்ளலே.

வள்ள லமுத வசனத் துலகத்
துள்ள பொருடிரு வொருங்கெய்து மென்றது.

90. வண்டா ரமரத் தவம்பகத் தார்முக மானும் வெள்ளை
வண்டா ரமரத் தவம்புய நீர்மரவம்மகில் மெய்
வண்டா ரமரத் தவம் பொழில் நாகையர் வாயமுதால்
வண்டா ரமரத் தவம்புவிச் செல்வமும் வாய்ப்பதுவே.

சில்வினைத் தொழில்கட் சீத்தொரு மைப்பால்
நல்வினைத் தருமிறை நனிமொழி யென்றது.

91. வாய்ப்புள கத்தர் கணிதர் சரத்தர் வலியுடற்பேய்
வாய்ப்புள கத்தர் கரும மகற்றி மறைப்பொருளின்
வாய்ப்புள கத்தர் கனங்குணந் தந்தது வல்லவன்றன்
வாய்ப்புள கத்தர் கதிநாகை யாரிசை வாக்கணியே.

நன்னய நாகை நாயக ருவகை
இன்னை பொருளி னியல்பின தென்றது.

92. வாக்கணி யாதவ னாநிதி யாமதி யாம்புகழ்மூ
வாக்கணி யாதவ னாமமு தா மருந் தாமகிலு
வாக்கணி யாதவ நாகத்தின் வாசர் மனத்திலுன்ன
வாக்கணி யாதவ நாகையரோகை மகரந்தமே,

அரும்பொருள் கண்ட ஆண்டகை யடிமை
விரும்பத் துயர்தந்த விழுமமென் னென்றது.

93. மகரந்த வாசங் கலைகடற் நீவந்து மானுறையோர்
மகரந்த வாசங் கனம்பொருள் கண்டவர் வண்பொழிற்பூ
மகரந்த வாசங் கமழ்நாகை யாரடி மைத்துயர்விம்
மகரந்த வாசங் கதங்கொள லாங்கொலிவ் வையகமே.

ஏழை துயர்தீர்ந் தேத்துதற் கென்றும்
வாழிநுஞ் சாண் வையகத் தென்றது.

94. வையம் படருந் திருக்கன்னை கெற்பத்துள் வாழ்பொழுதூர்
வையம் படருந் திருக்கரை வென்றவ் வாழிசரண்
வையம் படருந் திருக்கடர் நோயு மறுத்துயர்செவ்
வையம் படருந் திருக்கவு நாகைவந் திக்கவுமே.

இன்கனிந் தருள்கநும் மிரும்புயஞ் சிறக்கும்
பொன்குங் குமத்தொடை புலவற் கென்றது.

95. வந்திக் களிக்குங் குணமகப் பெற்றென வாழியநும்
வந்திக் களிக்குங் குமத்தொடை யீதிர்வண் ணாகையின
வந்திக் களிக்குங் குலமன்னர் முன்னு மருஞளத்தும்
வந்திக் களிக்குங் குளிர்மருந் தாற்றுமிவ் வல்லமைத்தே.

பிணியிரு ளகற்றிப் பிரகா சிக்கும்
அணிவிளக் காதிர்நும் மருங்கவிக் கென்றது.

96. வல்லமை கும்ப வனமுலை மாதரு மாற்றவினை
வல்லமை கும்ப வனக்கோவை பாண்டுமன் மூலமெனும்
வல்லமை கும்ப வனத்துழ லாது வழிவிளக்கின்
வல்லமை கும்ப வனநாகை யேத்தி வருங்கவிக்கே.

நன்னபி யிருணெறி நடப்பவிவ் வுடற்கும்
இன்னருள் காட்சி யெழிலுண வென்றது.

97. கவிக்கனம் பாநிழ லார்மறை நேர்வழி காண்மதுவிக்
கவிக்கநம் பானிழ லானுாட்டி னாரக் களிப்பியல்பா
கவிக்கனம் பானிழ லார்கனி யாக்கைக்குங் காட்சியிந்தக்
கவிக்கனம் பானிழ லார்மதி னாகைக்கல் வித்தருவே.

கல்லொடு பகர்ந்த காரணக் குரிசில்சீர்
புல்லிய நுங்கழல் புகலிட மென்றது.

98. கல்வித்த வாரண மாவலர் காணக் களியுரைபு
கல்வித்த வாரண மாவிழி நோயகல் வித்துடற்கி
கல்வித்த வாரண மாநிதி யெற்குங் கமழ்கழல்பு
கல்வித்த வாரண மாநாகைச் சாகுல் கமீதொலியே

நந்நபி யாணை நாயக நுங்கையால்
என்முக நீவி யிரட்சிப்பீ ரென்றது.

99. கமீதுவை பூம்பத மென்றுணர் தற்கருங் காரணர்ச
கமீதுவை பூம்பதத் தாணையென் னோய்த்துயர் கட்டறமு
கமீதுவை பூம்பதத் தண்கர மேநறை கான்மலர
கமீதுவை பூம்பதக் காநாகை வாழ்அப்துல் காதிருவே.

மாண்டகை தாய்தந்தை மனைகிளை நண்பெல்லாம்
ஆண்டகை யாணைநும் மடைக்கல மென்றது.

100. காதிரு வேதவ கைநுகர் வோர்நண்பர் காதலுண்ணீங்
காதிரு வேதவ வாய்தந்தை சுற்றங் கழலைவிட்டே
காதிரு வேதவ மிக்கடி யேனுங் கடிகமழ்பூங்
காதிரு வேதவ நாகைய வாணைநுங் கையடையே.

பொருத்து நுங்கருணைப் பொருளே யன்றி
மருத்துவ மின்று மாதவமே யென்றது.

101. கையடை யார்கரந் தண்ணமு தாக்கினிர் கான்மலர்வா
கையடை யார்கரந் தாப்பொழி னாகைய கற்றவராக்
கையடை யார்கரந் தார்நும்மை யன்றினிக் காமருந்தின்
கையடை யார்கரந் தந்தருள் வாரெங்கண் மாதவமே.

நாகையந்தாதி முற்றிற்று.